# திருப்பூவணப் புராணம்



மதுரைக்கு அருகில் உள்ள திருப்பூவணம் திருப்பூவணம்

தலபுராணம் (மூலமும் உரையும்)

திருவிளையாடற் புராணம் (மூலமும் உரையும்)

கி.காளைராசன், B.Sc.,M.A.,M.Phil.,PGDCA

# திருப்பூவணப் புராணம்



மதுரைக்கு அருகில் உள்ள திருப்பூவணம் (திருப்புவனம்)
தலபுராணம் (தமிழ் மூலமும் உரைச் சுருக்கமும்)
திருவிளையாடற் புராணம் (மூலமும் உரைச் சுருக்கமும்)
மற்றும் திருமுறை தேவாரப் பாடல்கள்

கி. காளைராசன், B.Sc., M.A., M.Phil., PGDCA.,

# Bibliography


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Thiruppuvanap Puranam** |
| Author | : | Thiru. K. Kalairajan, B.Sc., M.A., M.Phil., PGDCA.,<br>Assistant Registrar, Alagappa University,<br>KARAIKUDI – 630 003<br>Mobile Phone - 94435 01912<br>e-mail : kkrajan26@yahoo.co.in |
| Publisher | : | K. Nithya<br>10, Gurunathar Kovil Street,<br>(Opp. to Singapore Apartments)<br>KOTTAIYUR – 630 106<br>Sivaganga District, Tamil Nadu., INDIA |
| Language | : | Tamil |
| Font | : | Ananku Classic - 10 point |
| Edition/No. of copies | : | First Edition / 1200 copies |
| Publication Year | : | Nov. 2008 |
| Size of Book | : | 1/8 demmy |
| Number of Pages | : | xvi + 224 |
| Subject | : | Theology<br>**Thiruppuvanap Puranam (Tamil translated version of Bhrama Vaivartha Puranam.** About a famous Siva Temple in Pandiyas' Kingdom). |
| Printer | : | Printech,<br>7, Mickel Moopanar Street,<br>Old Kuyavarpalayam Road,<br>MADURAI – 625 009<br>Phone – 0452-2335748 Cell: 94435-19314 |

Price Rs.80/-

விலை ரூ.~~100/-~~ ரூ.80/-

திருப்பதி திருமலை தேவஸ்தான நிதியுதவி பெற்று
இப்புத்தகம் வெளியிடப்படுகிறது.

Printed with Financial Assistance given by the
**TIRUPATHI THIRUMALA DEVASTHANAM**





"கோடி கொடுத்த கொடைஞன் குடியிருந்த
வீடும் கொடுத்த விழுத்தெய்வம் – தேடியும்
அள்ளிக் கொடுத்த அழகன் அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு"

**(2008 – 2009 நூற்றாண்டு விழா)**
கல்விக் கொடை வள்ளல் டாக்டர் அழகப்பச் செட்டியார்
அவர்களின் பொற்பாதங்களை வணங்குகிறோம்.

– கி. காளைராசன்
– சோ. நாகலெட்சுமி
–கா.நித்யா

# உள்ளே




தவத்திரு

குன்றக்குடிப் பொன்னம்பல அடிகளார்

அவர்களின் நல்லாசி பெற்று

இப்புத்தகம் எழுதி முடிக்கப் பெற்றது.

**ALAGAPPA UNIVERSITY**
(Accredited with 'A' Grade by NAAC)
ALAGAPPA NAGAR, KARAIKUDI - 630 003, TAMIL NADU, INDIA



Prof. P. RAMASAMY, M.Sc., Ph.D.,
VICE - CHANCELLOR

Off : (04565) 225205, 225206, 225207
Per : (04565) 225200
Res : (04565) 225201
Fax : (04565) 225202
E-mail : vc_alagappa @ rediffmail.com

# வாழ்த்துரை

அழகப்பா பல்கலைக்கழகம் 1985ம் ஆண்டு மே மாதம் ஒன்பதாம் நாள். தமிழ். கணிதம். இயற்பியல். வணிகம் ஆகிய நான்கு முதுகலைத் துறைகளையும் கல்வியியல் கல்லூரி மற்றும் உடற்பயிற்சிக் கல்லூரி ஆகியவற்றையும் ஒன்றிணைத்துத் தோற்றுவிக்கப் பெற்றது. 1986ம் ஆண்டு தமிழ்த்துறைக்கான புதிய பாடத்திட்டங்கள் உருவாக்கப்பட்டபோது அதில் "கோயிற்கலை"யும் ஓர் பாடமாகச் சேர்க்கப்பட்டது. இதனால் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை மாணவர்கள், தமிழகத் திருக்கோயில்கள் பலவற்றையும் ஆய்வு செய்து பட்டங்கள் பெற்றுள்ளனர். அவ்வகையில், திரு.கி. காளைராசன் அவர்கள், திருப்பூவணத் திருக்கோயிலை ஆய்வு செய்து, ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளார். அதன் தொடர்ச்சியாகத் "திருப்பூவணப் புராணம்-ஓர் ஆய்வு" என்ற தலைப்பில் தற்போது முனைவர் பட்டத்திற்காக ஆய்வு செய்து வருகிறார்.

தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களின் தலைமையிலான தமிழக அரசின் முயற்சியால், தமிழ்மொழி, தனிச்செம்மொழியாக அறிவிக்கப் பெற்றுள்ளது. இத்தகைய தருணத்தில், கி.பி.1620ம் ஆண்டு, 1437 பாடல்களால் எழுதப்பெற்ற "திருப்பூவணப் புராணத்தை" ஆய்வு செய்வது மிகவும் சிறப்பிற்கு உரியது. முனைவர் பட்ட ஆய்வுடன் இவர் தனது பணியை நிறுத்திக் கொள்ளாமல் ஆய்விற்கான மூலநூற் பிரதி அழிந்துவரும் நிலையில், மக்கள் அனைவரும் பயனுறும் வகையில் திருப்பூவணப் புராணத்தை நூலாகப் பதிப்பித்து வெளியிடுவது மிகவும் பாராட்டிற்கு உரியது.

அழகப்பா பல்கலைக்கழகத்தின் ஆய்வினால் திருப்பூவணப் பகுதி மக்களும் மற்றும் ஆன்மிக அன்பர்களும் நிறைந்த பயனடைவர் என்பது திண்ணம். இவரது நூல் வெளியீடுகள் பல்கலைக்கழகத்திற்குப் பெருமை சேர்த்துள்ளன. ஆய்வாளர் திரு.கி.காளைராசன் அவர்கள் அலுவலகப் பணியினிடையே ஆன்மிகப் பணியையும் ஆற்றிவருவது மட்டற்ற மகிழ்ச்சியைத் தருகிறது. இவர் தனது நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து எழுத வேண்டும் என்று எனது விருப்பத்தினைத் தெரிவித்து, திரு.கி.காளைராசன் அவர்கள் மென்மேலும் பல ஆன்மிக நூல்களை எழுத எனது நெஞ்சார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

17.9.2008

துணைவேந்தர்

உ
திருச்சிற்றம்பலம்

# சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானம்

பா. இளங்கோ, பி.காம்., பி.எல்.,
மேலாளர்.

## அணிந்துரை



அன்னை பார்வதி தேவியார் பாரிசாத மரத்தை வளர்த்து அதன் நிழலிலே அமர்ந்து தவம் செய்தார். அங்கே ஒரு சிவலிங்கம் முளைத்தது. அதனைத் தேவியார் பூசிக்க அதிலிருந்து சிவபெருமான் காட்சியளித்து அருள் வழங்கினார். இவ்வாறு சுயம்புவாகத் தோன்றிய சிவலிங்கம் உள்ள ஊர் திருப்பூவணமாகும். இது காசியிலும் சிறப்புடையதாகும்.

இச்சிவலிங்கத்தைச் சூரியன், பிரம்மா, மகாலெட்சுமி ஆகியோர் பூசித்து வரங்கள் பெற்றுள்ளனர். மாத்தியந்தின முனிவருக்கும் தியானகாட்ட முனிவருக்கும் சிவபெருமான் குருஉபதேசம் வழங்கிய திருத்தலம். இத்தலத்தைப் பண்டைய காலத்தில் முடிவுடைய மூவேந்தர்களும் ஒன்றாய் வந்து வணங்கி வழிபட்டுள்ளனர். மூவர் முதலிகளான திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோர் பதிகம் பாடிப் பணிந்துள்ளனர். மாணிக்கவாசகர், கருர் தேவர், அருணகிரி நாதர் முதலான அருளாளர்கள் பாடிப் பணிந்துள்ளனர்.

மதுரையிலிருந்து சிவபெருமான் சித்தராக வந்து இரசவாதம் செய்து தங்கம் தயாரித்த 36வது திருவிளையாடல் நடைபெற்ற திருத்தலம். வடநாட்டு மன்னர்களான சுச்சோதி அரசன், நளமகாராசன் ஆகியோரும் தங்களது படை பரிவாரங்களுடன் வந்து வணங்கிப் பயனடைந்துள்ளனர். மன்னர்களும் மக்களும் காலங்காலமாய் வணங்கிப் போற்றும் இத்தலத்தைச் சிவகங்கை சமஸ்தான மன்னர்கள் பரம்பரை பரம்பரையாகச் சிறப்புடன் நிர்வகித்தும் நித்ய பூஜைகள் சிறப்புடன் நடக்கத் தேவையான அறக்கட்டளைகளை ஏற்படுத்தியும், அறங்கள் பல செய்தும் தர்மம் காத்து வருகின்றனர்.

திருப்பூவணத்தின் அருமை பெருமைகளை அறிந்துணர்ந்த முனிவர்களும் ரிஷிகளும் அவற்றைத் தொகுத்து சமஸ்கிருத மொழியில் பிரமகைவர்த்த புராணத்தில் கூறியுள்ளனர். இதைத் தமிழில் மொழிபெயர்த்துக் கந்தசாமிப்புலவர் 388 ஆண்டுகளுக்கு முன்பு பாடியுள்ளார். இவ்வளவு பழமையும் பெருமையும் மிகுந்த இப்புராணத்திற்கு உரைச்சுருக்கம் எழுதி 1437 பாடல்களுடன் **திருப்பூவணப் புராணம்** என்ற பெயரில் கி.காளைராசன் அவர்கள் வெளியிடுவது மட்டற்ற மகிழ்ச்சியைத் தருகிறது.

நூலாசிரியர் திரு.கி.காளைராசன் அவர்களுக்கு வாழ்த்துக்கள்.

MANAGER,
SIVAGANGA DEVASTHANAM

உ

சிவமயம்

# யோகிராம் சுரத்குமார் யோகிராம் சுரத்குமார் யோகிராம் சுரத்குமார் ஜெயகுருராய

பேராசிரியர் ராம,திண்ணப்பன்.
ஆங்கிலத்துறை முன்னாள் பேராசிரியர்.
ஸ்ரீசேவுகன் அண்ணாமலைக் கல்லூரி.
தேவகோட்டை,

No.5, P.L.S. சாலை.
தேவகோட்டை,

## அருளுரை



நகரத்தார்கள் கோயில் திருப்பணிக்குத் தங்களை அர்பணித்துக் கொண்டவர்கள். அதிலும் தேவகோட்டை நகரத்தார்கள் தமிழ்நாட்டில் மட்டு மல்லாமல் மற்ற மாநிலங்களிலும் கோயில் திருப்பணி செய்தவர்கள். திருப்பூவணத்தில் நேமங் கோவிலைச் சேர்ந்த தேவகோட்டை உ.மு. வகையறாவினர் தலைமுறை தலைமுறையாகத் திருப்பணிகள் செய்து வருகின்றனர்.

திருப்பூவணம் குரு உபதேசத் தலமாகும். மாத்தியாந்தினி மற்றும் தியானகாட்டர் ஆகிய இரு முனிவர்களும் 100 தேவவருடம் தவம் செய்து, சிவபெருமானின் தீட்சை பெற்ற திருத்தலமாகும். சுமார் 37 லட்சம் வருடத்திற்கு முன்பு, அம்பாள் தவம் செய்து அதன் பயனாகப் பாரிஜாதப் பூவால் சிவலிங்கம் தோன்றியது. அதனால் "பூவண நாதர்" என்ற பெயர் பெற்றது.

அம்பாள் ஆடிமாதம் மட்டும் வைகை ஆற்றுக்கு வடகரையில் தவம் செய்துள்ளாள். அந்த இடம்தான் "ஆடித்தபசு மண்டபம்". அம்பாள் தவம் செய்த இடம் என்பதால் திருஞானசம்பந்தர் அந்த இடத்திற்குச் சென்று இறைவனை வணங்கி வழிபட்டுள்ளார். அப்போது ஆற்று மணல்களெல்லாம் சிவலிங்கங்களாகக் காட்சியளித்துள்ளன. எனவே அவர் ஆற்றைக் கடந்து திருக்கோயிலுக்குச் செல்லாமல் அங்கிருந்தபடியே ஆற்றின் தென்கரையில் உள்ள சிவலிங்கத்தை வணங்கிப் பாடியுள்ளார். நந்தி விலகிக் காட்சி அளித்துள்ளது.

திருப்பூவண நாதரின் திருவருளைப் பெற்று மதுரை சென்று, சமணர்களை வென்று வைசத்தைத் தழைக்கச் செய்து, அதன்பின்னர் மீண்டும் திருப்பூவணத்திற்கு வந்து திருக்கோயில் சென்று மீண்டும் ஒரு பதிகம் பாடி இறைவனை வணங்கியுள்ளார்.

திருப்பூவணத்தில், பொன்னனையாள் நடத்திய அன்னதானத்தில் மதுரை சொக்கநாதர், சித்தர் வடிவத்தில் தோன்றி இரசவாதம் செய்து, திருப்பூவண உற்சவரைப் பொன்னால் செய்வதற்கு வேண்டிய பொன்னை உறுக்கிக் கொடுத்துள்ளார். இதனால் மதுரை ஈசனால் திருப்பணி செய்யப்

பெற்ற திருத்தலம் என்ற பெருமை திருப்பூவணத்திற்கு மட்டுமே உள்ளது.

இக்காரணங்களால் மதுரை சொக்கரை வணங்குவதற்கு முன் திருப்பூவணநாதரை வணங்கினால் மிகுந்த பலன் உண்டு.





ஆடித்தபசு மண்டபம் சிதிலமடைந்த நிலையில்

ஆடித்தபசு மண்டபம் புனர்நிர்மாணப் பணிகள் நடைபெற்று வருகின்றன,

ஆடித்தபசு மண்டபம் சிதலமடைந்த நிலையில் இருந்தபோது, திருஞானசம்பந்தப் பெருமான் பாடிய இடம் புதுப்பொலிவுடன் விளங்கவேண்டும் என எந்நேரமும் நினைந்து தன்னை முழுமையாகத் திருப்பூவணநாதருடன் இணைத்து கொண்ட, காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழத் துணைப்பதிவாளர் திரு.காளைராசன் மற்றும் தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலைக் கல்லூரி இயற்பியல் பேராசிரியர் டாக்டர் சந்திரமோகன் மற்றும் அடியேன் தலைமையில் இணைந்து ரூபாய்.2,50,000–00 (ரூபாய் இரண்டு லட்சத்து ஐம்பதாயிரம்) செலவில் மற்றபிற அன்பர்கள் உதவியுடனும் திருப்பணியை நிறைவு பெறச் செய்துள்ளோம். 2009ம் ஆண்டு தைமாதம் குடமுழுக்குவிழா செய்ய ஏற்பாடு நடந்து வருகிறது. திருப்பூவணம் "**பிதுர் மோட்சத் தலமாகும்**", தருமஞ்ஞன் என்பவருடைய தந்தையாரின் அஸ்திக் கலசத்தில் இருந்த "**எலும்பு – பூவாக**" மாறிய திருத்தலமாகும். "**காசிக்கு வீசம்கூட**" என்பது மக்கள் வழக்கு.

திருமலை நாயக்கர் காலத்திற்குப் பின்னாள், தொடர்ந்து 300 ஆண்டுகளுக்கும் மேலாக அன்னதானம் நடைபெறாமல் நின்றுவிட்டது. ***மானாமதுரை அருள்மிகு ஸ்ரீ பிரித்தியங்கிரா தேவி திருக்கோயில் ஸ்ரீலஸ்ரீ ஞானசேகர சுவாமிகளின் தலைமையில்.*** திருப்புவனம் வழக்குறைஞர் சண்முகநாதன், காளைராசன் மற்றும் சுவாமிகளின் அன்பர்கள் பலரும் இணைந்து சித்திரை மாதம் வளர்பிறை பிரதோச நாளில் (17–4–2008) திருக்கோயிலில் மீண்டும் சிறப்பாக அன்னதானத்தை நடத்தியுள்ளனர். அன்று நடைபெற்ற அன்னதானத்தில் சிவபெருமானே வயோதிகனாக பழுத்த பழமாக சன்னியாசி வேடத்தில் தோன்றி அன்னம் பெற்றார் என்பது உண்மையாகும்.





ஸ்ரீ மகா பஞ்சமுக ப்ரித்யங்கிரா தேவி கோயில், வேததர்ம க்ஷேத்ர டிரஸ்ட் ஸ்ரீலஸ்ரீ ஞானசேகர சுவாமி அவர்கள்

திருப்பூவணம் திருக்கோயிலில் 17–4–2008 அன்று அன்னதானம் நடைபெறுகிறது

இனிமேல் வருடம்தோறும் தொடர்ந்து அன்னதானம் நடைபெற சுவாமிகளின் ஆசியுடன், அடியேன் தலைமையில் ஒரு அறக்கட்டளை நிறுவப்பட்டுள்ளது. அடியேன் திருப்பூவணத்தில் உணர்ந்ததையும், திரு.காளைராஜாவின் திருப்பூவணப்புராணம் படித்ததையும், கேள்விப்பட்ட எதையும் எழுதத் தவிர்க்க முடியாததால் அணிந்துரை நீண்டதாக அமைந்துள்ளது.

தேவகோட்டை
14–9–2008

இப்படிக்கு
பேராசிரியர் ராம.திண்ணப்பன்

உ
சிவமயம்

முனைவர் நா. வள்ளி, M.A., B.Ed., Ph.D.,
P.G.Dip.in Epigraphy & Archacology
முதல்வர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி – 3

7, லெட்சுமணன்
செட்டியார் தெரு,
காரைக்குடி – 1

காரைக்குடி
18-09-2008

# ஆய்வுரை

*"வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்*
*வளர்சடை மேல் இளமதியம் தோன்றும் தோன்றும்"*



எனத் தாண்டக வேந்தராகிய அப்பர் பெருமானடிகள் சிவனைக் கண்ணாரக் கண்டு களித்து வழிபட்ட தலம் திருப்பூவணம். தேவாரப் பாடல் பெற்ற பாண்டிநாட்டுப் பதினான்கு தலங்களுள் இத்தலத்திற்கெனத் தனிச்சிறப்புகள் உண்டு. மதுரை உட்பட மற்றைய தலங்களுக்கு மூவர் முதலிகளில் ஓரிருவர் பாடல்களே கிடைத்திருக்க, இத்தலத்திற்குத்தான் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர் பதிகங்களும் கிடைத்துள்ளன. அதுமட்டுமல்ல மணிவாசகப் பெருமானும், கருவூர் தேவரும், அருணகிரிநாதரும் பாடிப்பரவி இருக்கிறார்கள். பொன்னனையாள் என்ற தேவரடியாருக்காக, மதுரைச் சொக்கநாதர் இரசவாதம் செய்தருளியது இத்தலத்தில்தான்.

இத்தலத்து இறைவன் மீது கந்தசாமிப் புலவர் என்பார் திருப்பூவணப் புராணம், திருப்பூவணநாதர் உலா, புட்பவனநாதர் வண்ணம், திருப்பூவணத் தலவகுப்பு, மூர்த்தி வகுப்பு ஆகிய பல நூல்களைப் பாடியுள்ளார். அவற்றுள் திருப்பூவணப் புராணம், திருப்பூவணநாதர் உலா தவிர மற்றைய நூல்கள் கிடைத்தற்கு அருமையாக உள்ளன. இந்த இரண்டு நூல்களையாவது பாதுகாக்க வேண்டும், அனைவரும் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற உயரிய நோக்கோடு, அழகப்பா பல்கலைக் கழகத்தில் உதவிப்பதிவாளராகப் பணியாற்றும் திரு.கி. காளைராசன் அவர்கள் திருப்பூவணப் புராணத்தையும், இத்தலத்தோடு தொடர்புடைய திருவிளையாடற் புராணத்தையும் உரைச் சுருக்கத்தோடும் மற்றும் இத்தலத்தோடு தொடர்படைய பிற இலக்கயப் பகுதிகளையும், புராண வரலாற்றுச் செய்திகளையும் செம்மையாகத் தொகுத்து நூலாக்கம் செய்துள்ளார்.

இங்கு, காளைராசனுக்கும் திருப்பூவணத்திற்குமுள்ள

தொடர்பைச் சொல்லியே ஆகவேண்டும். ஆன்மீகத்தில் மிகுந்த நாட்டமுடைய அவர் மெய்ஞானத்தை விஞ்ஞானத்தோடு இணைத்துப் பார்ப்பதில் ஆர்வமுடையவர். அவரது இளமைப் பருவம் திருப்பூவணத்தில்தான் கழிந்தது. திருப்பூவணநாதர் இளமையிலேயே அவரை ஆட்கொண்டு விட்டார்.

"பிறந்து மொழிபயின்ற பின்எல்லாம் காதல்
சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன்"

என்று காரைக்காலம்மையார் சொல்வது போல, காளைராசன் அவர்களுக்கு பேச்சு, மூச்சு எல்லாமே திருப்பூவணம்தான். தான் வளர்ந்த மண்ணுக்கு, தன்னை வளர்த்த மண்ணுக்கு ஏதேனும் செய்தே ஆகவேண்டும் என்ற அவரது ஆவலின் விளைவே இந்நூல்.

ஆன்மீக நூல்கள் பல வெளிவருவதற்கு உறுதுணையாக இருக்கின்ற திருமலை திருப்பதி தேவஸ்தானம், இந்நூல் வெளிவரவும் பொருளுதவி செய்துள்ளமை மிக்க மகிழ்ச்சிக்குரியது.

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினார்க்கு ஓர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்ற தாயுமானவரின் வாக்குப்படி மூர்த்தி, தலம், தீர்த்தம் பற்றிய செய்திகளை முறையாகத் தொகுத்து எழுதியுள்ள திரு.கி.காளைராஜன் அவர்களது முயற்சி சிறக்க வாழ்த்துக்கள்.

அன்புடன்
[signature]
18/9/08

---

காரைக்குடி சுப்பிரமணியபுரம் வடக்கு 2 வது வீதியில் வசித்து வரும், தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலைக் கல்லூரி இயற்பியல் இணைப் பேராசிரியர் சைவசித்தாந்த ரெத்தினா. முனைவர். ரெ.சந்திரமோகன் அவர்களது பெருமுயற்சியாலும் ஒத்துழைப்பாலும் இப்புத்தகம் வெளியிடப்படுகிறது.



உ
திருச்சிற்றம்பலம்

# என் உரை

அழகப்பா பல்கலைக்கழகம் 1985ம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்ட போது. பல்கலைக் கழகத்தில் முதன் முதலாகப் பணிநியமனம் செய்யப்பட்டவர்களில் நானும் ஒருவன். பல்கலைக்கழகத்தில் 1999ம் ஆண்டு தேர்வுப் பிரிவில் பணியாற்றி வந்தபோது "திசை தெய்வங்களைத் தொழும் திருவள்ளுவர்". "குறலிலும் சோதிடம்" என்ற தலைப்புகளில் கட்டுரைகளை எழுதினேன். அக்கட்டுரைகளை அப்போது காரைக்குடி ராமசாமி தமிழ்க்கல்லூரி முதவராகப் பணியாற்றி வந்த முருகசாமி ஐயா அவர்களிடம் காண்பித்தேன். அவர்கள் என்னைப் பெரிதும் உற்சாகப் படுத்தி அவற்றை இதழ்களில் வெளியிடுமாறு அறிவுறுத்தினார்கள்.



இதனால் "வள்ளுவரும் வாஸ்துவும்" என்ற எனது கட்டுரை 2000ம் ஆண்டு ஜனவரி முதல் வாரத்தில், முதன் முதலாகத் தினபூமி – ஞாயிறு வார இதழில் வெளியாகியது. கல்வியாளர்கள் மத்தியில் அக்கட்டுரைக்கு நல்ல வரவேற்பு இருந்தது. திருக்குறளின் அதிகார அமைப்பு முறைக்கு யாரும் மறுக்கமுடியாத அளவிற்கு விளக்கம் அளித்ததற்காக அனைவரும் என்னைப் பாராட்டினார்கள். அவ்வாறு பாராட்டியவர்களுள் முனைவர் இரா. பாலசுப்பிரமணியன் ஆவர்கள் குறிப்பிடத்தக்கவர். அவர் என்னிடம் ஒருமுறை "நீங்கள் கட்டுரைகள் எழுதினால் மட்டும் சிறப்புடையது ஆகாது. கல்வித் தகுதியையும் வளர்த்துக் கொள்ளுங்கள்" – என்று அறிவுரை வழங்கினார். அவரது அறிவுரையை ஏற்று அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்முதுகலை (M.A. Tamil) பயின்றேன்.

பின்னர் அழகப்பா பல்கலைக்கழகத்தில் ஆய்வியல் நிறைஞர் (M.Phil.)பயின்றேன். அப்பாடத்திட்டத்தின் ஒருபகுதியாகத் திருப்பூவணம் திருக்கோயில் பற்றிய ஆய்வினை மேற்கொண்டேன். ஆய்வு தொடர்பாகத் திருமுறைகளையும் மற்றும் பல ஆன்மிக நூல்களையும் கற்றேன். திருப்பூவணம் தொடர்பான அனைத்து நூல்களையும் சேகரித்துப் படித்தும், திருக்கோயில் அமைப்பை பலவராக ஆராய்ந்தும் எனது ஆய்வினை நிறைவு செய்தேன்.

எனது ஆய்வியல் நிறைஞர் ஆய்வு தொடர்பாகத் திருப்பூவணப் புராணப் புத்தகத்தைத் தேடி அலைந்தேன். எங்குதேடியும் யாரிடம் கேட்டும் கிடைக்கவில்லை. இறுதியாகக் காரைக்குடி ராமசாமி தமிழ்க்கல்லூரியின் அப்போதைய முதல்வர் உயர்திரு. முருகசாமி ஐயா அவர்கள் திருப்பூவணப் புராணப் புத்தகம் ஒன்றைக் கொடுத்து உதவினார்கள். உடனே திருப்பூவணம் சென்று திருப்பூவணநாதரின் திருக்கண் பார்வைக்குப் புத்தகத்தைக் காண்பித்து ஆசி பெற்றேன்.

புத்தகம் அச்சிடப் பெற்று 100 வருடங்களுக்கும் மேலானதால், தொட்டால் காகிதம் ஒடிந்து விடும் நிலையில் இருந்தது. மிகவும் சிரமம் மேற்கொண்டு புத்தகத்திற்கு எவ்விதமான பாதிப்பும் ஏற்படாமல் நகல் எடுத்துக் கொண்டு மூலப்புத்தகத்தை ஐயா அவர்களிடம் நன்றியுடன் திரும்பக் கொடுத்தேன். ஐயா அவர்கள் செய்த உதவிக்குத் திருப்பூவண மக்கள் அனைவரும் மற்றும் ஆன்மிக அன்பர்கள் அனைவரும் நன்றி உடையோர்களே. புத்தகத்தை மீண்டும் பதிப்பித்து வெளியிட வேண்டும் என்ற நோக்கில் நேரம் கிடைக்கும் போதெல்லாம் கணினியின் உதவி கொண்டு தட்டச்சு செய்து வந்தேன். தற்போது புத்தகம் முழுமையடைந்துள்ளது. புத்தகத்தைப் பதிப்பித்து வெளியிடத் திருப்பதி திருமலை தேவஸ்தானத்தின் நிதியுதவியும் கிடைத்துள்ளது.

எனது தந்தையார் மானாமதுரைத் தாலுகா மாரநாடு கிராமத்தைச் சேர்ந்த நா.ரா.கிருஷ்ணன் அம்பலம் அவர்கள் காவல்துறையில் காவலராகத் (Police Constable) திருப்பூவணத்தில் 1969–74ம் ஆண்டுகளில் பணியாற்றினார். அப்போது நான் திருப்பூவணம் பள்ளியில் பயிலும் காலத்தில் திருக்கோயிலுக்குச் சென்று வழிபடும் பேறு கிடைக்கப் பெற்றுள்ளேன். கடைநிலையிலிருந்த என்னை, கோயில் தொடர்பான நூல்கள் எழுதும் நிலைக்கு உயர்த்திய திருப்பூவணநாதரின் திருவருளை எங்ஙனம் நான் எடுத்துரைப்பது! திருப்பூவணநாதரின் திருவருளால் சுமார் 16 கட்டுரைகளுக்கும் மேலாக எழுதி வெளியிடும் பெருமை கிடைக்கப் பெற்றுள்ளேன்.

முனிவர்கள் ஓதிய புராணத்தைத் தமிழில் 388 ஆண்டுகளுக்கு முன்னர் கந்தசாமிப் புலவர் பாடியுள்ளார். இப்புராணப் பாடல்களின் ஒவ்வொரு எழுத்தையும் தட்டச்சு செய்து பிழைத்திருத்தம் பார்த்து அச்சிட்டு வெளியிடும் பெரும்பேறு கிடைக்கப் பெற்றுள்ளேன். இந்நூலில் பிழைகள் ஏதுமிருந்தால் அவற்றைப் பொறுத்தருளுமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். மேலும், அறியப்படும் குறைகளை எனக்குத் தெரிவித்துத் திருத்திக் கொள்ள உதவிடுமாறு அன்புடன் வேண்டுகிறேன். இந்நூலை அகம் மகிழ்ந்து வாசிப்போர் அனைவரும், திருப்பூவணநாதரின் திருவருளால், அவர்களது **உயர்வான வாழ்வு பெற்று வளமுடன் வாழ்ந்திட** திருப்பூவணநாதரின் திருவடி அருளை நினைந்து வாழ்த்துகிறேன்.

திருச்சிற்றம்பலம்

அன்புடன்
கி. காளைராசன்



## காப்பு

திகழ்வரைமின்னனைவதனச் செங்கமலந்தளையவிழ்க்குந்திவாகரஞ்செய்
மகிழொருவெண்மதி மருப்பின் வயிரகிம்புரி வயங்குமத்தயானை
நிகழுமடியார்க்கன்புநீடுமறம்பொருளின்பம் வீடுநல்கும்
புகழ்தருநற்கற்பகத்தின் பொற்பதத்தையெஞ்ஞான்றும் போற்றல் செய்வாம்

## நூற்பயன்

ஒப்பிலாத வுருத்திர சங்கிதை யுற்ற பூவண நற்கதை யோதுவோர்
செப்புமாறு செவிக்கொடு மன்னிய சிட்டராய சிறப்புறு தன்மையோர்
விப்பிராதி பவித்தக மெய்ம் மொழிமிக்க வேத விதத்துயர் மாதவீர்
தப்பிலாத தவத் திரு மன்னவர் தயாபரன் கயிலைக்கிரி வாழ்வரே

## பூவண நாதர் வாழ்த்து

பூமாது மகிழ்துளபப்புயல்வண்ண நெடுமாலும்புகழ்வெண்கஞ்ச
நாமாதுநடனமிடு நான்மறைதேர்நான்முகனுநயப்ப நன்னீர்த்
தேமாது செழும்பவளச் சடையிருப்பத்திங்களிருடூரப்பச்சைல
மாமாது வடிவிலங்கமன்னிய பூவணத்தான்றாள் சென்னிசேர்ப்பாம்.

# மன்னர் வாழ்த்து



சிவகங்கை மன்னர்கள் இக்கோவிலின் 'பரம்பரைத் தருமகர்த்தா' ஆவார்கள். அதன்படித் தற்போது மாட்சிமை பொருந்திய சிவகங்கைச் சீமையின் இராணியார் D.S.K.மதுராந்தகி நாச்சியார் அவர்கள் இக்கோயிலை நிருவகித்து வருகிறார்கள். இக்கோயில் தமிழக அரசின் இந்து அறநிலையத் துறையின் கீழ் இயங்கி வருகின்றது.



மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர் அவர்களும், மாண்புமிகு இந்து அறநிலையத்துறை அமைச்சர் கே.ஆர்.பெரியகருப்பன் அவர்களும், மாட்சிமைபொருந்திய சிவகங்கைச்சீமை இராணியார் D.S.K.மதுராந்தகி நாச்சியார் அவர்களும், திருப்பூவணநாதர் திருவருளால் நலம் பல பெற்று வளமுடன் வாழ்ந்திட வேண்டும். இவர்களது நல்லாட்சியினால் திருக்கோயில்களில் வழிபாடுகளும் திருவிழாக்களும் செவ்வனே நடைபெறவேண்டும். மக்கள் அனைவரும் நோய்நொடிகள் நீங்கப்பெற்று சுபிட்சமாக வாழ வேண்டும்.



**வாழ்க மன்னவன் செங்கோன் மழைமுகில்**
**வாழ்க நான்மறை வாணர்கணானிலும்**
**வாழ்க வைதிக சைவமலர்த்திரு**
**வாழ்க வஞ்செழுத்துண்மை நன்மந்திரம்**

*திருச்சிற்றம்பலம்*

# *Synopsis*

## Introduction

Man differs from the animals because of his intellect. A disrobed man is a half a human being. Man is distinguished from animals only through his dress, cooked food, education, science and spirituality. Even as the living creatures are elevated from the fifth sense to the sixth sense an Institution is necessary like wise to elevate man from the sixth sense to a higher stage. Hence the temple act as a social institution to elevate man to God head. That is why people follow a religion and worship God.

Through out the world followers of many religions either worships the apostles of God or Religious heads. But Hindu's worship only the idols of God and lead a Godly life.

Hinduism is not a religion. It is a symbol of the growth of Human civilization. A new dimension of a sixth sense of worship of God is not due to fear, but a realization of the growth of matured intellect. The images of Gods have not been carved into indiscriminately. They have been conceptualized by our Forefathers only after a deep sense of reasoning.

## Revamp of Hinduism in Tamil Nadu

Before the 7th century AD in Tamil Nadu, Jainism and Buddhism were the dominated religions. During that period the four great *Saivaite Quartet* restores the pristine glory of *Saivism.* They traveled far and wide in the *Pandya* kingdom extolling and singing the glory of God. There are 14 Shrines where there songs are available. These 14 Shrines in the *Pandiya* Kingdom are known as ***Pandi-14.***

Amongst the 14 Shrines, Madurai, the Capital of the *Pandiya* Kingdom is the most ancient. But the city was ravaged due to the war of Lord **Indra**, the curse of **Kannagi**, which consumed Madurai, and the spate in the river *Vaigai* was brought back to life again and again but the only Shrine which maintains its ancient glory is Thiruppuvanam. It is said that Goddess *Parvati*, to expiate from her sin, sat under the *Parijatha Tree* for Penance.

Thiruppuvanam is situated nearby the Holy Madurai City. It is in the Madurai-Rameswaram National Highway and 18 k.m. away from Madurai. As like Madurai, this city is also situated in the southern bank of river *Vaigai.*

## Thiruppuvanam in Puranas

Indian *Puranas* are classified into 18. Among them, one *purana* is named as ***Prema Kaivartha Puranam***. In it, in twenty episodes, the glories of the Thiruppuvanam are narrated. And it was translated in the Tamil Language and named as "**Thiruppuvanap Puranam**" by *Kandasamy Pulavar.* **It consists of 1437 poems in 20 chapters.** In the earlier years, these poems were written in Palm leafs. Later this was printed in papers during March 1896 (more than 100 years ago) in the Hindu Theological Printing Press at Chennai. The book contained 246 pages in demy size.

More over the glories of Thiruppuvanam are narrated in 3 episodes in **Thiruvillaiyadar Puranam** of ***Paranjothi Munivar***.

## History of the Siva Linga

The Goddess Parvati had intended to visit the *Yaga* done by his father for which no invitation was given to her Husband Parameshwara. SHE was banned to attend the *Yaga.* But SHE argued and quarreled with Her Husband and moved to *yaga.* This type of known mistakes (argument and quarreling with husband) became as sin on Her. SHE worshiped the Lord Siva to remove the sin at Thriuappuvanam. There a Siva Lingam emerged beneath of Parijatha tree and dispelled the Sin of Parvati and for others who worships Him to dispel from the sins.

## Glories of the Lingam

1. It is said by Paranjothi Muniver in Thiruvillaiyadal Puranam that the Siva Lingam in Thriuppuvanam is in the **compressed form of the total Universe.**
2. The **Sun** worshiped this idol to acquire powers to be a Master among all planets.

3. This is the Holy Spot where **Lord Brahma** was rid off his willful sin.
4. **Mahavishnu** acquired the Weapon (*Chakra Ayutham)* to kill **Jalanthran**
5. Goddess **Kali** worshiped the *Sivalinga* in this shrine
6. **Thiranasanan** attained Salvation and the Sinner **Thunmanjyan** likewise was absolved of his sin in this place.
7. The sacred ash brought in a Urn by the Brahmin **Tharmagnanan** transformed into flowers
8. **Uthpalangi**, a girl was blessed with a good husband and lived as a "*Sumangali*"
9. It is the holy place, where willful commission of all our sins are absolved
10. The sins of **Sengamalan** were absolved in this holy place.
11. The curse of Goddess **Laxmi** was dispelled in this holy place.
12. This is Holy place where **Parvati** did penance to attain the blessings of God.
13. This is the holy place where the ancestors of king **Suchothi** came in person to receive the rice balls (*Pindam*)
14. A shrine of Holy waters (one river and five ponds)
15. A shrine where a frog named Jalanthiran was transformed into Monarch.
16. The holy shire where adversities of the *Kaliyuga* were transformed to **King Nala** who attains mental peace
17. The Holy place where the Sages **Manthyanthina** and **Thyanakatta** received the holy benediction from Lord Shiva.
18. Kewara *(Thalamboo)* flower (which was in the head of the Lord Siva) worshiped Lord Siva to absolved of the sin for having uttered a lie.
19. The *Chera, Chola* and *Pandya* (The Three Kings of Tamil Nadu) came together and offer worship in this place.
20. **ThiruGnana Sambandar, Appar**, and **Sundarar** have visited this place, worshiped the lord and offered songs on the glory of HIM.
21. The Holy Shrine where **Manickavasagar** has offered songs on Thiruppuvana Nathar.
22. The Holy Place where **Karur Thever** Sang the *Thiruvisaipa*
23. The Holy Place where a song of **Arunagiri Nathar**'s Thirupugazhal glorifies the shrine.

24. The Holy Place where the Lord Siva came in the form of a **Siddhar** and performed alchemy and displayed His *leela.*

25. Holy place where **Ponnanayal** received the holy blessings

26. The Holy Place where the **Korakka Siddher** and **Kathirikkai Siddhar** still live in *Jeeva Samathi.*

## Temple

The Siva Linga is older than the past three eras (three *Ugas*). The *Karuvarai mandapam* was built before 7th Century. *Artha Mandabam* and *Maga Mandapam* were build during 7th to 13th Centuries. The Lord Siva is named as ***Pushpavaneswarar*** **.** The Goddess is named as ***Soundara Nayaki.***

A **Perumal Temple** is situated very near to this Siva Temple. The ***Alagiya Manavalap Perumal*** with ***Sri Devi and Poomi Devi*** in a standing posture showering their blessings on the devotees.

## Location

The city Thiruppuvanam is situated in the north bank of the Vaigai River and 18 k.m. away from Madurai in Rameswaram National Highway. The Railway line from Madurai to Rameswaram also passes through this city.

This book has been written for the benefit of the public to visit and receive the blessing at Thiruppuvanam where one of the ancient Shrines where **Lord Siva** and Goddess are the presiding deities who shower the blessings of the devotees.

THIRUCH CHITRAMBALAM

*****

உ

கணபதி துணை.

# திருப்பூவணப்புராணம்.

இஃது

**கந்தசாமிப்புலவர்**

இயற்றியது.

---

மதுரைத்திருஞானசம்பந்ததேசிகசுவாமிகள்

ஆதீனத்து

**அம்பலவாணசுவாமிகள்**

விருப்பத்தின்படி

தேவகோட்டை,

உ - மு. அண்ணாமலைச்செட்டியாரவர்கள்

உ - ராம. சுப்பிரமணியச்செட்டியாரவர்கள்

உ - வீர. சொக்கலிங்கச்செட்டியாரவர்கள்

இம்மூவர்கள் பொருளுதவிபெற்று

மதராபுரிவாசி,

**தி - இராமசுவாமிப்பிள்ளை,**

என்று வழங்குகின்ற

ஞானசம்பந்தப்பிள்ளையால்

அகப்பட்ட பிரதிகொண்டு

சென்னை :

இந்து தியலாஜிகல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

மன்மத௵ மாசிமீ

இதன்விலை ரூபா கவ.

# 1. திருப்பூவணம் – அறிமுகம்

தமிழகத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னர் சமணமும் புத்தமும் தலையெடுத்து வளர்ந்தோங்கி இருந்தன. மதுரை ஆண்ட பாண்டிய மன்னனை மீண்டும் சைவத்திற்கு மாற்றும் பொருட்டு, மங்கையர்க்கரசியார் திருஞானசம்பந்தரை அழைத்து வரச் செய்தார். திருஞானசம்பந்தர் மதுரைக்குச் செல்லும் முன்னர் மதுரையின் கிழக்கு எல்லையான திருப்பூவணத்திற்கு வருகிறார். வைகை ஆற்றின் வடகரையில் திருக்கோயில் உள்ளது. தென் கரையில் அம்பாள் ஆடிமாதம் தவம் செய்த இடம் உள்ளது. இந்த இடத்திற்கு வந்த திருஞானசம்பந்தர் அங்கிருந்து வடகரையில் உள்ள திருப்பூவணநாதரை வணங்கி வழிபடுகிறார். அப்போது **வைகை ஆற்றின் மணல்களெல்லாம் சிவலிங்கங்களாகக் காட்சி யளித்துள்ளன.** எனவே ஆற்றுமணல்களை மிதிக்க அஞ்சிய திருஞான சம்பதர் அங்கிருந்தபடியே பதிகம் பாடி இறைவனை வழி படுகிறார். பாடல் கேட்ட சிவபெருமான், நந்தியைச் சற்றே சாய்ந் திருக்கச் சொல்லி ஆற்றின் மறுகரையில் நின்றுபாடும் திருஞான சம்பந்தருக்குக் காட்சியருளியுள்ளார். இதனால் திருப்பூவணத்தில் இன்றும் நந்தி மறைக்காது. ஆற்றின் வடகரையில் உள்ள ஆடித்தபசு மண்டபத்தில் இருந்தபடியே தென்கரையில் உள்ள சிவலிங்கத்தை வழி படலாம்.

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் பாண்டிய நாட்டில் இறைவனைப் பாடிப் பணிந்த இடங்கள் பலவாகும். அவற்றுள் அவர்களின் பாடல்கள் கிடைக்கப் பெற்ற திருத் தலங்கள் பதினான்கு ஆகும். இந்தப் பதினான்கு திருத்தலங்களையும் **பாண்டிப் பதினான்கு** என்று சிறப்பித்துக் கூறுகின்றனர்.

*1)மதுரை, 2)திருப்பரங்குன்றம், 3)திருவிராமேச்சுரம், 4)திருவாடானை, 5)திருப்புத்தூர், 6)திரு ஏடகம், 7) திருநெல்வேலி, 8)குற்றாலம், 9) ஆப்பனூர் (மதுரையின் வடகரையில் உள்ள ஊர்) 10)திருச்சுழியல், 11)திருப்புனவாயில், 12)கொடுங்குன்றம் (பிரான்மலை), 13)காளையார் கோயில், 14) திருப்பூவணம்.*

இப்பதினான்கு பதிகளில் மிகவும் பழமையானது பாண்டியநாட்டின் தலைநகராக விளங்கும் மதுரை ஆகும். ஆனால் மதுரை மாநகரம் இந்திரனுடனான போரினாலும், கண்ணகி இட்ட தீயினாலும், வையை ஆற்றுப் பெருக்கினாலும் அழிந்தழிந்து மீண்டும் மீண்டும் உயிர் பெற்றது. ஆனால், திருப்பூவணத் திருத்தலம் தொன்மைக்காலம் முதல் அழிவிற்கு உட்படாமல் அப்படியே பழமையுடன் உள்ளது.

பார்வதிதேவியார் தான் அறிந்து செய்த பாவம் போக்க இத்திருத்தலம் வந்து பாரிசாத மரம் வளர்த்து அதன் அடியிலிருந்து தவம் செய்தார். அப்போது சிவபெருமான் அம்மரத்தின் அடியில் சிவலிங்கமாய் முளைத்து, உமையம்மையின் பாவத்தை நீக்கியருளினார்.

1) இச்சிவலிங்கத்தைச் சூரியன் வழிபட்டு, நவக்கிரகங்களுக்கும் தலைவனாக இருக்கும் வரம் பெற்றுள்ளான்.

2) பிரம்ம தேவன் அறிந்து செய்த பாவத்தை நீக்கிய திருத்தலம்

3) மகாவிஷ்ணு, சலந்திரனைக் கொல்ல சக்கராயுதம் பெற்ற திருத்தலம்

4) காளிதேவி, சிவலிங்கம் வைத்து பூசித்த திருத்தலம்

5) திரணாசனன் என்பவன் வீடு பேறு அடைந்துள்ளான். துன்மஞ்ஞன் என்ற மாபாவி நற்கதி அடைந்துள்ளான்.

6) தருமஞ்ஞன் என்ற அந்தணன் கொண்டு வந்த அஸ்திக் கலசத்தில் **இருந்த எலும்புகள் பூவாய் மாறிய திருத்தலம்.**

7) உற்பலாங்கி என்ற பெண், நல்ல கணவனை அடையப்பெற்று தீர்க்க சுமங்கலியாய் வாழும் வரம் பெற்றுள்ளாள்.

8) அறிந்து செய்த பாவங்களை அகற்றும் திருத்தலம்

9) திருமகளின் (இலக்குமி தேவியின்) சாபம் தீர்ந்த இடம்

10) பார்வதி தேவியார் இறைவன் திருவருள் வேண்டித் தவம் செய்த திருத்தலம்

11) சுச்சோதி என்ற அரசனுடைய பிதுர்கள் (இறந்துவிட்ட முன்னோர்கள்) நேரில் வந்து பிண்டம் (இறந்தவர்களுக்குப் படைக்கப்படுவது) பெற்றுக்கொண்டு, அவனை ஆசிர்வதித்த திருத்தலம்

12) தீர்த்தங்கள் பல உள்ள திருத்தலம்

13) சலந்திரன் என்ற தவளைக்குச் சக்கரவர்த்தியாய் இருக்கும் வரம் அருளப்பட்ட திருத்தலம்

14) நள மகாராசாவிடமிருந்த கலிகாலத்தின் கொடுமையை அகற்றி அவனுக்கு மனச்சாந்தி அளித்த திருத்தலம்

15) மாந்தியந்தின முனிவருக்கும் தியானகாட்ட முனிவருக்கும் சிவபெருமான் சிதம்பர நல் உபதேசம் வழங்கிய இடம்

16) தாழம்பூ பொய்சொன்ன பாவம் நீங்க வேண்டி, சிவபெருமானை வணங்கி வழிபட்ட திருத்தலம்

17) மூவேந்தர்களும் (சேர, சோழ, பாண்டிய மன்னர்கள்) ஒன்றாக வந்து வழிபட்டுத் திறை செலுத்திய திருத்தலம்

18) திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் (அப்பர்), சுந்தரர் ஆகியோர் வணங்கி வழிபட்டுத் தேவாரம் பாடிய திருத்தலம்

19) மாணிக்கவாசகர் பாடிய திருத்தலம்

20) கருவூர்த் தேவர் திருவிசைப்பா பாடல் பெற்ற திருத்தலம்

21) அருணகிரி நாதர் திருப்புகழ் பாடல் பெற்ற திருத்தலம்

22) மதுரை சிவபெருமான் சித்தர் வடிவில் வந்து இரசவாதம் செய்து திருவிளையாடல் நடத்திய திருத்தலம்.

23) பொன்னனையாளுக்கு அருள் வழங்கிய திருத்தலம்.

24) கோரக்க சித்தர் மற்றும் கத்தரிக்காய் சித்தர் முதலான சித்தர்கள் வாழும் சிவபூமி

இவ்வாறு மிகவும் தொன்மைமிக்கதாகவும், அதிகச்

*சிறப்புகளுடையதாகவும் திருப்பூவணத் திருத்தலம் விளங்குகிறது. இங்கு சுயம்பாகத் தோன்றிய சிவலிங்கத்தின் அருமை பெருமைகளும், சௌந்தர நாயகித் தாயாரின் அன்பும், அருளும் எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.*

## தலத்தின் பெயர்

முன்பு அனைத்து இலக்கியங்களிலும் **திருப்பூவணம்** என்று வழங்கப்பட்ட இத்திருத்தலம். தற்போது **திருப்புவனம்** என்று அழைக்கப்படுகிறது.

## தலஇருப்பிடம்

வைகையாற்றின் தென்கரையில் மதுரை–இராமேசுவரம் தேசிய நெடுஞ்சாலையில் மதுரையிலிருந்து 18 கி.மீ. தூரத்தில் உள்ளது. சிவகங்கை மாவட்டத்தில், மானாமதுரை வட்டத்தில் பேரூராட்சியாக உள்ளது.

மதுரை மாட்டுத்தாவணிப் பேருந்து நிலையத்திலிருந்து சுமார் அரைமணி நேரத்தில் திருப்புவனத்தை அடையலாம். மானாமதுரை, பரமக்குடி, கமுதி, இராமநாதபுரம், இராமேசுவரம் செல்லும் அனைத்துப் பேருந்துகளும் திருப்புவனம் வழியாகச் செல்கின்றன. திருப்புவனத்தில் 'கோட்டை' பேருந்து நிறுத்தத்திற்கு மிக அருகில் (சுமார் 200மீ) திருக்கோயில் உள்ளது. திருப்புவனத்தின் வடக்கே வைகையாறு ஓடுகிறது. ஆற்றின் வடகரையில் உள்ள மடப்புரம்–காளிஅம்மன் கோயில் தற்போது மிகவும் பிரசித்தி பெற்று விளங்கிவருகிறது. மடப்புரம் காளிகோயில் நிறுத்தத் திற்கு முன்னால் உள்ள "ஆடித்தபசு" மண்டபத்தில் இறங்கி ஆற்றின் வடகரையிலிருந்தபடியே தென்கரையில் கோயில் கொண்டிருக்கும் பூவணத்து ஈசனை வழிபடலாம். இந்த இடத்திலிருந்துதான் திருஞான சம்பந்தரும் மற்றைய அருளாளர்களும் திருப்பூவணநாதரை வணங்கிப் பதிகம் பாடியுள்ளனர். இதனால் இந்த இடம் சிறப்புப் பெற்றது.

## இருப்புப் பாதை வழி

மதுரையிலிருந்து இராமேசுவரம் செல்லும் இருப்புப் பாதை திருப்புவனம் வழியாகச் செல்கிறது. இருப்புப் பாதை நிலையத்திலிருந்து திருக்கோயில் சுமார் அரை கி. மீ. தூரத்தில் உள்ளது.

## புவியியல் அமைப்பு

புவியியல் அமைப்பினை அடிப்படையாகக் கொண்ட வாஸ்து இலக்கணப்படி, பாண்டிய நாட்டின் வாஸ்து முகமண்டலமாக விளங்குகிறது திருப்பூவணத் திருத்தலம். பூமத்திய ரேகையிலிருந்து 9.49பாகை வடஅட்சரேகையிலும், 78.15பாகை கிழக்குத் தீர்க்கரேகையிலும் **(9°49'19.26"N....78°15'20.55"E)** அமைந்துள்ளது.

***தீர்த்தங்கள்*** – பாவநாச தீர்த்தம் என்று அழைக்கப்படும் வைகை ஆறு, மணிகன்னிகை அல்லது தேவிகுண்டம், பிரம்மதீர்த்தம்.

இலக்குமி தீர்த்தம். மார்க்கண்டேய தீர்த்தம். நளதீர்த்தம். வசிட்ட தீர்த்தம், சந்திர தீர்த்தம் முதலான தீர்த்தங்கள் உள்ளன.

**விருட்சங்கள்** – முதலாம் யுகத்திலே பாரிசாதமரமும், இரண்டாம் யுகத்திலே வில்வமரமும், மூன்றாம் யுகத்திலே வன்னிமரமும், நான்காம் யுகமாகிய இக் கலியுகத்திலே பலாமரமும் தலவிருட்சங்களாகும்.

## இறைவனின் திருப்பெயர்கள்

**சுயம்பு லிங்கத்திற்குப்** பூவணன், பூவணநாதர், புட்பவன நாதர், புஸ்பவனேசுவரர். பாஸ்கரபுரி ஈசர், பிதுர் மோட்சபுரீசர், பிரம்மபுரீசர், இரகசிய சிதம்பரேசர், திருப்பூவணேசர், அடைவார் வினை தீர்ப்பவர் ஆகிய பெயர்கள் உள்ளன. **உற்சமூர்த்திக்குச்** சௌந்தரநாயகர், அழகிய நாயகர், பொன்னனையான் என்ற பெயர்கள் உள்ளன,

## இறைவியின் திருப் பெயர்கள்

சௌந்தரநாயகி, தடிதம்பை, சுவர்ணவல்லி, அன்னபூரணி, அழகியநாயகி, அழகியமின், மின்னனையாள், மின்னம்மை, மின்னாள் என்பன.

# சிறப்புகள்

1)திருப்பூவணநாதர்(சிவலிங்கம்) பாரிசாதப்பூவால் ஆனது. (The Siva Lingam is a fossil of Parijatha Flower). 2)மதுரை கோயில் அமைப்பைப் போன்றே சிவலிங்கத்திற்கு வலப்புறம் அம்பாள் கோயிலும் (தற்போதைய முருகன் கோயில்) அதன் எதிரே தீர்த்தமும் உள்ளன. 3)மதுரையின் கிழக்கு வாயிலாகத் திருப்பூவணம் உள்ளது. இதனால் திருப்பூவணநாதரை வணங்கிய பின்பு, மதுரை மீனாட்சி சமேத சோமசுந்ரேசுவரரை வணங்குவது மிகுந்த சிறப்புடையது. 4)திருஞானசம்பந்தர் திருப்பூவண நாதரை வணங்கி அருள் பெற்ற பின்னரே மதுரை சென்று சமணர்களை வென்றார். 5)அம்பாள் ஆடிமாதம் தவம்செய்த இடத்திலே ஆடித்தபசு மண்டபம் கட்டப்பெற்றுள்ளது. 6)இந்த இடத்திலிருந்துதான் திருஞான சம்பந்தர், ஆற்றின் வடகரையில் உள்ள திருப்பூவணநாதரை வணங்கிப் பதிகம் பாடியுள்ளார். 7)அப்போது ஆற்றின் மணல்கள் எல்லாம் சிவலிங் கங்களாகக் காட்சியளித்துள்ளன, நந்தியைச் சாய்ந்திருக்கச் சொல்லி சிவபெருமான் காட்சியளித்துள்ளார். 8)திருப்பூவணம் திருக்கோயில் சிதம்பரத்தைப் பார்த்தபடி அமைக்கப்பட்டுள்ளது. நந்தி மறைக்காத காரணத்தால் திருப்பூவணநாதர் சந்நிதியிலிருந்து வணங்கினால் சிதம்பரத்தை திசைநோக்கி வணங்கியதாகும். 9)இடமிருந்து வலமாக பெருமாள், முருகன், அம்மன், விநாயகர், திருப்பூவணநாதர் ஆகிய ஐந்து சந்நிதிகளும் ஒரே வீதியில் முன்பு இருந்திருக்கின்றன. இதுபோன்ற அமைப்பு திருப்பரங்குன்றம் கருவரையில் உள்ள அமைப்புடன் ஒத்துள்ளது. 10) திருப்பூவணத்தில் முதலில் சிவலிங்கத்தை வணங்கி வழிபட்ட பின்னரே அம்மையை வணங்க வேண்டும்,

# 2. திருப்பூவணப் புராணம்

## அறிமுகம்

அனைத்துத் திருத்தலங்களும் மூர்த்தி, தலம், தீர்த்தம் மற்றும் விருட்சம் ஆகியவற்றால் சிறப்பாகப் பேசப்படுகின்றன. ஆனால், மிகவும் தொன்மையான பல திருத்தலங்கள், தலபுராணத்தாலும் இலக்கியத்தாலும் சிறப்புப் பெற்று விளங்குகின்றன. இவ் அனைத்துச் சிறப்புகளையும் ஒருங்கே பெற்ற திருத்தலமாகத் திருப்பூவணம் திகழ்கிறது. இத்தலத்திற்கென்று வடமொழியில் புராணம் ஒன்று உள்ளது. அதனைத் தமிழ் மொழியில் மொழிபெயர்த்துக் கந்தசாமிப் புலவர் பாடியுள்ளார் .

கடம்பவனபுராணம், திருவிளையாடற் புராணம் ஆகியவற்றிலும் திருப்பூவணத் திருத்தலத்தின் பெருமைகள் விரிவாகப் பாடப் பெற்றுள்ளன. மூவர் தேவாரம், திருவாசகம், தேவர் திருவிசைப்பா மற்றும் திருப்புகழ் ஆகியவற்றில் திருப்பூவணம் சிறப்பித்துக் கூறப் பெற்றுள்ளது.

திருப்பூவணப் புராணம் இயற்றிய கந்தசாமிப்புலவர் திருப்பூவணநாதர் உலா, திருப்பூவணநாதர் மூர்த்தி வகுப்பு, தலவகுப்பு என்ற நூல்களையும் எழுதியுள்ளார்.

## திருப்பூவணப் புராணம் (வடமொழி)

துறவியரும், ரிஷிகளும் பிரமனை அணுகி, தவம் மற்றும் வேள்வி செய்வதற்கேற்ற புனித இடத்தைக் காட்டுமாறு வேண்டிக் கொண்டனர். அதற்கேற்பப் பிரமனும் ஒரு சக்கரத்தை உருண்டோடச் செய்து அது நின்று விழும் இடமே தவத்திற்கு ஏற்ற புண்ணிய பூமியாகும் என்றார். அவ்விடம் "நைமிசாரண்யம்" என்று அழைக்கப்படுகிறது. இங்குதான் வியாச முனிவர் புராணங்களையும் மகாபாரதத்தையும் இயற்றினார். வியாசமுனிவர் சூதமுனிவருக்குக் கூறிய புராணங்கள் பதினெட்டு ஆகும். இப்புராணங்களில் **பிரம்மகைவர்த்த புராணம்** என்பதும் ஒன்று. இப் புராணத்தின் எழுபதாம் அத்தியாயம் முதல் எண்பத்துநான்காம் அத்தியாயம் வரை திருப்பூவணத்தலபுராணம் பற்றி எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

## திருப்பூவணப் புராணம் (வடமொழியில்) தோன்றிய வரலாறு

நைமிச வனத்திலே, மிகுந்த தவமுடைய சௌநகர் முதலான முனிவர்கள் பலர் சிவபிரான் திருவடியை அடைவதற்குக் கூறப்பட்ட வரலாற்றுக் கதைகளை ஆராய்ந்து கொண்டிருந்தனர். அப்பொழுது அங்கே சூதமுனிவர் என்பவர் வந்தார். மற்றைய முனிவர்கள், அவரை வணங்கி வரவேற்று அமரச்செய்தனர். பின்பு அவரிடம் நீங்கள் முன்பு ஒருமுறை சுவேதவன (திருவெண்காடு) சேத்திரமான்மியத்தைக் கூறும்போது இடையிலே புட்பவன மான்மியத்தை சுருக்கிச் சொன்னீர்கள், இப்பொழுது அதனை விரிவாக விளக்க வேண்டு மென்று முனிவர்கள் வேண்டுகோள் விடுத்தனர்.

முனிவர்களின் வேண்டுதலை நிறைவேற்றும் வகையில் திருப்பூவணப் புராணத்தைச் சூதமுனிவர் சொல்லியருளினார். இப் புராணத்தை யார் முதன்முதலில் யாரிடம் கூறினார்கள் என்ற விவரத்தை, *"நந்தி முகன் றம்பியரு ணந்திதனக் குரைப்ப நந்தி சநற்குமாரன் வெந்துயரமற வெடுத்துவிரித்துரைப்பனவன் வேதவியாதற்கோதப் புந்தியுணர்ந்தவன் சூதமுநிக்குரைத்தபுட்பவனபுராணந்தன்னை...* " என்ற பாடலில் கந்தசாமிப் புலவர் சுட்டிக்காட்டியுள்ளார்.

## திருப்பூவணப் புராணம் (தமிழ்மொழியில்) தோன்றிய வரலாறு

"திருப்பூவணப் புராணம் வடமொழியில் உள்ளது. அதனை அனைவரும் அறிந்துகொள்ளத் தமிழில் பாடுக" – என்று அனைவரும் கேட்டுக் கொண்ட காரணத்தினால், தமிழில் மொழிபெயர்த்துப் பாடுவதாகக் கந்தசாமிப்புலவர் தனது அவையடக்கப் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

**புத்தகவடிவில் புராணம்** – ஏட்டுச்சுவடியில் இருந்த புராணத்தை புத்தகமாக அச்சிட்டு வெளியிட வேண்டுமென, மதுரை திருஞானசம்பந்த தேசிக சுவாமிகள் ஆதீனத்து ***அம்பலவாண சுவாமிகள்*** விருப்பம் தெரிவித்துள்ளார்கள். அதன்படி, தேவகோட்டை[1],

***உ-மு. அண்ணாமலைச் செட்டியார் அவர்கள்,***

***உ-ராம. சுப்பிரமணியச் செட்டியார் அவர்கள்,***

***உ-வீர. சொக்கலிங்கச் செட்டியார் அவர்கள்,***

இம்மூவர்கள் பொருளுதவி பெற்று, மதுராபுரியில் வாசித்த ***இ.இராமசுவாமிப்பிள்ளை*** என்று அழைக்கப்பட்ட ***ஞானசம்பந்தப்பிள்ளை***யால் அகப்பட்ட பிரதி கொண்டு, சென்னை இந்து தியலாஜிகல் அச்சுக்கூடத்தில் மன்மதவருடம் (1896ம் ஆண்டு) மாசிமாதம் விலை ரூபாய்.கவ (Rs.1¼)க்கு அச்சிடப்பெற்றுள்ளது.

இப்புத்தகத்தின் முகவுரையில் *".... .... இப்பாடலடங்கிய ஏட்டுப்பிரதி ஒன்றே கிடைத்தமையால், அதுகொண்டு ஒருவாறு பார்வையிட்டு அச்சிடப்பட்டது."* என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதைப்போன்றே, 1993ம் ஆண்டின் இறுதியில், இந்நூலாசிரியர் (கி.காளைராசன்) தனது M.Phil.ஆய்வினை மேற்கொண்டார். ஆய்விற்குத் திருப்பூவணப் புராணப் புத்தகம் தேவைப்

---

[1] திருப்பூவணப் புராணம் – புத்தகத்தில் தேவிகோட்டை என்று உள்ளது.

பட்டது. ஆனால் திருப்பூவணத்தில் யாரிடமும் இப்புத்தகம் கிடைக்க வில்லை. பல நூலகங்களில் கேட்டும் கிடைக்கப் பெறவில்லை இறுதியாகக் காரைக்குடியில் உள்ள இராமசாமி தமிழ்க்கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றிய ***தமிழாகரர்*** – தெ.முருகசாமி அவர்கள் திருப்பூவணப் புராணப் புத்தகத்தைக் கொடுத்து உதவினார்கள். புத்தகம் அச்சிடப்பெற்று நூறு ஆண்டுகளுக்கும் மேலானதால், காகிதங்கள் மிகவும் பழையதாய் இருந்தன. தொட்டால் ஒடிந்துவிடும் நிலையிலிருந்த, அப்புத்தகத்தை நுணுக்கிப் படித்தே இந்நூலாசிரியர் திருப்பூவணட் புராணப் பாடல்களை கணிணியில் அச்சேற்றியுள்ளார்.

**தமிழில் புராணம் எழுதிய ஆசிரியர் வரலாறு**

கந்தசாமிப்புலவரின் ஊர் திருப்பூவணமாகும். இவரைப் பற்றிய வரலாறு ஏதும் தெரியவில்லை. இவர் திருவாப்பனூர் புராணமும், திருப்பூவணநாதர் உலாவும் இயற்றியுள்ளார். இவர் காலத்திலேயே இந்நூல்களுக்கு நன் மதிப்பிருந்துள்ளதற்கு ஆப்பனூர் புராணப் பாயிரச் செய்யுளும்[2], திருப்பூவணநாதர் உலாவின் சிறப்புப் பாயிரச் செய்யுளும்[3] சான்று தருகின்றன.

இவர் திருப்பூவணப் புராணத்தில் பாயிரம் பாடும்போது, சகாத்த வருடம் 1543ல் தமிழில் மொழிபெயர்த்துப் புட்பவனபுராணத்தை இயற்றியதாகக் குறிப்பிடு கிறார்[4]. இதனை ஆங்கில வருடத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது சகாப்த வருடம் 1543+78=1620-1621ம் ஆண்டைக் குறிப்பிடுகிறது. இப்புத்தகம் 2008ம் ஆண்டு எழுதப்பெற்றது. இதனால் இவர் இன்றைக்குச் சரியாக (2008-1620=388) 388 ஆண்டுகளுக்கு முன் திருப்பூவணப் புராணத்தை இயற்றியுள்ளார்.

இவர், நைமிசாரணியச் சருக்கம், சவுநகர் சூதரை வினவிய சருக்கம், திருக்கைலாயச் சருக்கம், ஆற்றுச் சருக்கம், திருநாட்டுச் சருக்கம், திருநகரச் சருக்கம் ஆகிய சருக்கங்களைப் பாடிப் பாயிரம் பாடிய பின்னர் இருபது

---

1 ***சிறந்த தமிழ்நூல் வள்ளுநர்*** எனத் தமிழக அரசு வழங்கிய பட்டம்

2 *"கனியினைப் பிழிந்து செந்தேன் கண்டென ஆப்பனூர்நம்*
*பனிமதி மிலைந்த நான் பன்னரும் புராணம் தன்னைப்*
*புனிதன்மெய்க் **கந்த சாமிக் கவிஞன்** பூவணத்தான் பார்மேல்*
*இனிதெனப் புலவர் கூற இன்தமிழ்ப் புணர்த்தினானே"*
கந்தசாமிப்புலவர்,திருவாப்பனூர்ப் புராணம், பாயிரம்,பாடல் . 3

3 *"பூவணத்தெனம் புண்ணியன்முன் பொன்னனையாளுக்காக்கொள்*
*தூவணத்த பொன்மேனிச் சுந்தரன்மேல் – பாவணத்த*
***கந்தசாமிப்பேர்க் கவிஞனன்பிற்** செய்யிந்நூற்(கு)*
*எந்தநூல் ஆகும் இணை."*
(திருப்பூவணநாதர் உலா, சிறப்புப் பாயிரம்)

4 கந்தசாமிப்புலவர், திருப்பூவணப்புராணம், பாயிரம், பாடல் எண்–3

சருக்கங்களில் திருப்பூவணப் புராணத்தைப் பாடியுள்ளார். அவை பின்வருமாறு:

1, சூரியன் பூசனைச் சருக்கம்
2, திரணாசனன் முத்தி பெற்ற சருக்கம்
3, மணிகன்னிகைச் சருக்கம்
4, துன்மனன் சருக்கம்
5, தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கம்
6, உற்பலாங்கி பதியை யடைந்த சருக்கம்
7, பாற்கரபுரச் சருக்கம்
8, சர்வ பாவ விமோசனச் சருக்கம்
9, பிரம சாப விமோசனச் சருக்கம்
10, இலக்குமி சாபவிமோசனச் சருக்கம்
11, உமாதேவி திருஅவதாரச் சருக்கம்
12, திருக்கலியாணச் சருக்கம்
13, தக்கன் வேள்வியழித்த சருக்கம்
14, உமை வரு சருக்கம்
15, சுச்சோதி தீர்த்த யாத்திரைச் சருக்கம்
16, சுச்சோதி பிதிர்களை முத்தியடைவித்த சருக்கம்
17, தீர்த்தச் சருக்கம்
18, நளன் கலிமோசனச் சருக்கம்
19, திருவிழாச் சருக்கம்
20, சிதம்பரவுபதேசச் சருக்கம்

என இருபது சருக்கங்களாகும்.

திருப்பூவணப் புராணத்தில், மொத்தம் 1437 பாடல்கள் உள்ளன. இப்பாடல்களை விருத்தப் பாவில் எழுதியுள்ளதாகக் கந்தசாமிப் புலவர், அவையடக்கம் ஐந்தாம் பாடலிலே குறிப்பிட்டுள்ளார்.

*****

# 3. திருப்பூவணப் புராணம் (உரைச் சுருக்கம்)

## 1. சூரியன் பூசனைச் சருக்கம்

நவக்கிரகங்களுக்கும் தலைவராகச் சூரிய பகவான் விளங்குகிறார். ஒரு காலத்தில் பேரண்டத்தில் ஒரு பெரிய புரட்சி நிகழ்ந்தது. இதனால் சூரியனுடைய தலைமைப் பதவிக்கு ஆபத்து ஏற்பட்டு, பதவி பறிபோகும் நிலை ஏற்பட்டது.

தனது பதவியை நிலை நிறுத்திக் கொள்வதற்கான வழி வகையைச் சூரியன் ஆராய்ந்தார். அப்பொழுது இப்பேரண்டமே சிவலிங்கமாக திருப்பூவணத்தில் எழுந்தருளுகிறது என்பதை அறிந்தார். எனவே தனது பதவியைத் தக்க வைத்துக் கொள்ளத் திருப்பூவணத்திற்குச் சித்திரை மாதத்திலே சித்திரை நட்சத்திரத்திலே வந்து, மணலைக் குவித்துத் திருப்பூவணநாதர் போலச் செய்து, உரிய முறைகளைப் பின்பற்றிப் பூசை செய்தார். அவருக்கு அருள்புரிய உமாதேவி சமேதராகச் சிவபிரான் தோன்றியருளினார். சூரியன் விரும்பியபடி நவக்கிரகங்களுக்கு நாயகனாக என்றும் நிலைத்திருக்கும்படிச் சூரியனுக்கு அருள் வழங்கினார். திருப்பூவணத்தில் வசிப்பவர்க்கு அறமும் பொருளும் இன்பமும் வீடும் கிடைக்குமென்று அருளினார். ஐந்தெழுத்து மந்திரத்தையும் உபதேசம் செய்தருளினார்.

<u>**மணிகன்னிகை தீர்த்தம்**</u>: திருப்பூவணநாதரிடம் மந்திர தீட்சை கிடைக்கப்பெற்ற ஆதித்தனாகிய சூரியன், தான் கேட்டவுபதேசப் பொருளைச் சிந்தித்துத் தெளிந்து, சிவலிங்கத்துக்குத் தென்கிழக்கே (**அக்கினித்** திக்கிலே), தனது கையினாலே சதுரமாகக் குளம் தோண்டி, அதில், உற்பலமும் தாமரையும் உண்டாக்கி, ஐந்தெழுத்தைத் தியானித்து முறைப்படி வழிபட்டான். அத்தீர்த்தத்துக்கு மணிகன்னிகை என்று பெயரையிட்டான். தேவதச்சனை அழைத்து ஆலயம் அமைத்து, ஆவரண தேவதைகளையும் பிரதிட்டை செய்து, திருவிழா நடத்தித் தன்னுடைய உலகத்தை அடைந்தான்.

அகத்திய முனிவரும் அம்மணிகன்னிகைத் தீர்த்தத்தில் மூழ்கித் திருவைந்தெழுத்தை விதிப்படி உச்சரித்துத் திருப்பூவணநாதரை வணங்கிச் சமுத்திரத்தைக் குடிக்கும் வல்லமையைப் பெற்றார்.

<u>குறிப்பு</u> இத்தீர்த்தத்தின் சிறப்புகள் பின்வரும் சருக்கங்களிலும் மிகவும் வெகுவாகப் புகழ்ந்து கூறப்பட்டுள்ளன. தற்போது இத்தீர்த்தம் எவ்வாறு உள்ளது என்பது பற்றி குறிப்பு நான்காவது சருக்கமாகிய துன்மனன் சருக்க இறுதியிலே குறிப்பிடப்பட்டுள்ளது.

## பாவநாச தீர்த்தம்:

சிவலிங்கத்திற்கு முன்பு ஒரு அம்பு செல்லும் தொலைவரையுள்ள வைகை ஆற்றிற்குப் பாவநாசதீர்த்தம் என்று பெயர். அதிலே முழுகினோர் சிவலோகம் பெறுவர். திருப்பூவணத் தலத்தைத் தரிசித்தோர் திருக்கைலாசமடைவர் என்று சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

### திருப்பூவணத் திருத்தலத்தின் வேறு பெயர்கள்

திருப்பூவணத்திற்குக் கிரேதாயுகத்திலே தேவிபுரம், புட்பவனம் என்றும், திரேதாயுகத்திலே இலக்குமிபுரம் என்றும், துவாபர யுகத்திலே பிரமபுரம் என்றும், கலியுகத்திலே பாஸ்கரபுரம், ஆனந்தவனம், முத்தியாச்சிரமம், ரகசியசிதம்பரம், தெட்சிணகாசி, சதுர்வேதபுரம், பிதிர்முத்திபுரம் என்னும் பெயர்கள் உண்டு. இங்கு வசிப்போருக்குச் செல்வத்தை நல்கும், பாவத்தைப் போக்கும், சிவஞானத்தை ஆக்கும். இப்பதியில் வணங்கிய பெருமையாலே விநாயகக்கடவுள் சிவார்ச்சனை செய்து முடித்தார்.

இக்கதையைப் பிறரிடம் கூறுவோர், அதைக் கேட்போர், அதன்வழி திருப்பூவணம் வந்து வழிபடுவோர் அனைவரும் முத்தியடைவார்கள்.

## 2. திரணாசனன் முத்திபெற்ற சருக்கம்

சைவபுராணம் முதல் பிரமகைவர்த்த புராணம் முடிய உள்ள பதினெட்டுப் புராணங்களிலும் சிறப்புடன் குறிப்பிடப்படுவது திருப்பூவணத் தலமாகும். பிரளயகாலத்தில் தோன்றிய அமிர்தக்கலசம் மகாவிஷ்ணுவால் மூன்று கூறாக உடைக்கப்பட்டது. முதலாவதைத் திருப்பூவணத்திலும், இரண்டாவது பகுதியைக் கும்பகோணத்திலும், அதன்பின் மூன்றாவது பகுதியை எல்லாத் திருத்தலங்களிலும் வைத்தார். அமிர்தத்தின் முதலாவது பகுதி திருப்பூவணத்திலுள்ள மணிகன்னிகைத் தீர்த்தத்திலே மலராய் வந்து வீழ்ந்தது. அத்தீர்த்தத்திற்கு **மாயாதீர்த்தம்** என்றும் மணிகன்னிகைத் தீர்த்தம் என்றும் இரண்டு பெயருண்டு. இத்தீர்த்தத்திலே நீராடுவோர்க்குப் பாவங்களெல்லாம் ஒழியும்.

திருப்பூவணத்தில் **சிவலிங்கப் பெருமானை** முதலிலே தரிசித்துப் **பின்னர் தேவியாரைத் தரிசிக்க வேண்டும்.** இத்தலத்தில் அம்மையை முதலில் வணங்குபவர்கள் நரக உலகு அடைவர். மதுரை உட்பட மற்றபிற தலங்களில் முதன்முதலாக அன்னையை வணங்கியபின்னர்தான் சிவலிங்கத்தை வணங்கி வழிபடுகின்றனர். ஆனால், திருப்பூவணத்தில் மட்டும் அம்மையை முதன்முதலில் வணங்கக் கூடாது. ஏனென்றால், முதலாம் யுகத்திலே, கௌதமி ஆற்றங்கரையில் திரணாசனன் என்பவர் சிவபிரான் திருவடிகளை மனவாக்குக் காயங்களினால் வழிபட்டுவந்தார். அவர் தனது ஆசிரியரை வணங்கி எளிதாக முத்தி கிடைத்திட உபாயத்தைக் கூற வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அதற்கு அவரது ஆசிரியரும் பல சிவத்தலங்களுக்கும் சென்று அங்குள்ள தீர்த்தங்களில் நீராடி முறைப்படிச் சிவலிங்க மூர்த்திகளைப் பேரன்போடு

வழிபட்டால், பாவங்கள் ஒழிந்து முத்திபெறலாம் என்று கூறி அருளினார். உடனே திரணாசனன் துறவறம் பூண்டு சிவத்தலங்கள் பலவற்றிற்குச் சென்று, திருவாலவாயில் (மதுரையில்) வீற்றிருந்தருளும் அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரரை வணங்கி, திருப்பூவணம் வந்து மணிகன்னிகைத்தீர்த்தத்தில் மூழ்கியெழுந்து உமாதேவியைத் தரிசித்துச் சிவலிங்கப் பெருமானைத் தரிசியாமல் தெற்குத்திசை நோக்கிச் சென்று திருச்சுழி என்னும் திருத்தலத்தை அடைந்து, முறைப்படிச் சிவலிங்கப் பெருமானை வழிபட்டு, மீண்டும் திருப்பூவணம் வந்து மணிகன்னிகைத் தீர்த்தத்தில் மூழ்கினான். அதனால் இராச்சதனாய் மாறிப் பசியினால் வருந்தினான். அப்பொழுது நாரத முனிவர் வந்து, அவனை நோக்கி, "நீ யாரென்று" கேட்டார். அப்பொழுது அவனுக்குச் சிறிது ஞாபகம் வந்தது. அவன், இத்தீர்த்தத்தில் மூழ்கிய அளவிலே நான் மனங்கலங்கியவன் ஆனேன்; இதற்குக் காரணம் என்ன என்று புலப்படவில்லை என்று கூறினான். அதற்கு நாரதமுனிவர், பூவணநாதரை முதலிலே வழிபடாது தேவியாரை வழிபட்ட காரணத்தால், நீ இவ்வாறு ஆகிவிட்டாய், இனி, முதலிலே புட்பவனேசுவரரை வணங்கிப் பின்பு அம்மையை வணங்கினால் நற்கதி பெறுவாய். மேலும் புட்பவனேசுவரர் சந்நிதியிலே ஐநூறு விற்கிடை அளவுள்ள ஒரு **பிரமதீர்த்தமுண்டு,** அது முறை பிறழ்ந்த பாவமுதலியவற்றைப் போக்கும். அதிலே **கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்திலே** நீராடுதல் சிறந்ததாகும். ஆதலால், அத்தீர்த்தத்தில் நீ நீராடி புட்பவனேசுவரரை வழிபடுவாய் என்று கூறி வழிகாட்டினார். மேலும், காசி முதலிய பதிகளில் செய்த பாவங்கள் இப்பதியிற் போம். இத்திருப்பூவணத்திற் செய்த பாவம் இத்திருப்பூவணத்திலே ஒழியு மென்றும் கூறித் திருமால் உலகம் சேர்ந்தார். நாரதமுனிவர் அருளிய வழியே திரணாசனன் புட்பவனேசுவரரையும் தேவியாரையும் வழிபட்டுத் திருக்கைலாசபதவி சேர்ந்தனன். இவ்வாறு பிரமகைவர்த்த புராணத்திலே எழுபத்தோராம் அத்தியாயத்திலே கூறப்பட்டுள்ளது.

திரணாசன் முத்தி பெற்ற இச்சருக்கத்தைப் படிப்போரும், இக்கதையைப் பிறரிடம் கூறுவோரும், அதை ஆவலுடன் கேட்போரும் சிவபெரும்பதியை அடைவார்கள்.

## 3. மணிகன்னிகைச் சருக்கம்

திருப்பூவணத் திருத்தலமானது விராட்புருடனுக்கு முகமண்டலமாகும். இங்குள்ள தீர்த்தத்தில், விஷ்ணு முதலாவது வைத்த அமிர்தக்கூறு மணிமயமாய் வீழ்ந்தபடியால், அதற்கு மணிகன்னிகையென்று பெயர், அதிலே நீராடு வோர், பத்துப் பிரமகற்பகாலம் அமிர்தம் உண்டு தேவலோகத்தில் வாழ்வார்கள். இத்தீர்த்தத்திலே எல்லாத் தேவர்களும் இருடிகளும் வசிக்கின்றார்கள். அதிலே மூழ்கிச் சூரியலிங்கத்தைத் தரிசனம் செய்வோர், காலனைக் காணாமல், காலகாலர் கயிலையைக் காண்பர். அத்தீர்த்தமாடுதலும், அச்சிவலிங்க தரிசனம் செய்தலும் அறஞ் செய்வோர்க்கே கைகூடும். இத்தலத்தினைத் தரிசனம் செய்வோரின் அனைத்துப் பாவங்களும் ஒழிந்துவரும்.

சுய அறிவுடனோ அல்லது அறிவின்றியோ ஒரு கணப் பொழுதாவது திருப்பூவணத்தில் வசித்தால் சிவ உருவம் பெறுவர். ஒரு தளிரோ கனியோ புட்பவனேசருக்குப் பக்தியோடு கொடுப்போர் முத்தி அடைவர். மற்றைய தலத்தினின்று வயோதிகத்தைச் சிந்தித்து இத்தலஞ் சேர்ந்து இறந்தவர்களுக்குச் சிவபிரான் தாரகமந்திரமாகிய பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்தருளுவர்; ஆதலால் இத்தலத்தில் யாவரும் வசித்தல் வேண்டும். காசியின் தட்பவெப்பத்தினால் பெரிதும் உடல் வருந்தும். திருப்பூவணத்தில் சமநிலையிலான தட்பவெப்பம் நிலவுவதால், உடல் வருத்தமுறாது; ஆதலாற் **காசிப்பதியினும் புட்பவனம் ஏற்றதாகும்.** பஞ்சாமிர்தம், பஞ்சகவ்வியம் முதலியவற்றை இங்குள்ள சூரியலிங்கத்திற்கு அபிடேகம் செய்தால் சிவனருள் பெறலாம். மணிகன்னிகா தீர்த்தக் கரையினில் பிதிர்சிரார்த்தம் முதலியன செய்தால் நெடுங்காலம் பிதிர்கள் பெரிதும்மகிழ்வார்கள்.

முன்னம் ஒரு காலத்தில் அந்தணனின் இறந்த உடலில் உள்ள ஓர் அங்கத்தைக் கழுகு ஒன்று தூக்கி வந்து திருப்பூவணத்தில் போட்டுவிட்டது, அதனால் அந்த உடலுக்கு உடையவன் நற்கதியடைந்தான். எனவே, பிதிர்கள் முத்தியடையும் வண்ணம் அவர்கள் இறந்த பின்னர், அவர்களது அங்கங்களை இங்கே போடவேண்டும்.

## 4. துன்மனன் சருக்கம்

மாதா, பிதா, குரு, அந்தணர் இவர்களை இகழ்ந்தவர்களும், மற்றும் இதுபோன்ற மன்னிக்கமுடியாத கொடிய பாவங்களைச் செய்தவர்களும் நரகத்தில் சேர்ந்து பெருந் துன்பங்கட்கு ஆட்படுவர். அகிம்சை, உண்மைகூறல் முதலிய தர்மங்களை உடையவர் சொர்க்கத்தில் சுகங்களைப் பெறுவர். ஆனால் துன்மனன் என்னும் கள்வன் இப்பிறவியில் செய்யாத பாவங்களேதுமில்லை, செய்த புண்ணியமெதுவும் இல்லை. அவனது பூர்வபுண்ணியத்தினாலே, ஒருசமயம் திருப்பூவணத்திலே பங்குனி உத்திரத் திருவிழா நடைபெறுவதைக் கேள்வியுற்று திருடும் நோக்கத்தோடு இத்தலம் வந்தடைந்தான். தேரில் எழுந்தருளியிருந்த இறைவனைத் தரிசித்து விட்டு, நடுநிசியில் மற்றபிற கள்வர்களுடன் திருடச் சென்றான், அப்போது காவலர்களால் விரட்டியடிக்கப்பட்டான். இரவில் வழிதெரியாமல் ஓடிய திருடர்கள் மணிகன்னிகைத் தீர்த்தத்தில் வீழ்ந்து இறந்தனர். தீர்த்தத்தின் சிறப்பினால் அவர்கள் சிவலோகம் சேர்ந்தனர்.

ஐந்து மாபாதகங்களையும் செய்த தீயோர்களுக்கே சிவப்பேறு கிடைத்தது என்றால், நற்புத்தியுடனும் உண்மையான பக்தி நோக்கத்துடனும் இத் தீர்த்தமாடுவோர் சிவலோகம் சேர்வதில் சிறிதும் ஐயமில்லை.

**தீர்த்தத்தின் இன்றைய நிலைபற்றிய குறிப்பு** இத் தீர்த்தம் தற்போது, முருகன் கோவிலுக்கும், பெருமாள் கோயிலுக்கும் எதிரே உள்ளது. மணிகன்னிகா தீர்த்தம் பற்றிப் பலவாறாகப் புகழ்ந்து புராணங்களில் கூறப்பட்டுள்ளதால், அந்திமக்காலத்தில்

நிர்க்கதியாய் நின்ற பலர் இத்தீர்த்தத்தில் வந்து மூழ்கி உயிரை விட்டனர். இதனால் இத்தீர்த்தத்தில் வீழ்ந்து இறப்போரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் கூடிக்கொண்டே சென்றது. அரசியல் செல்வாக்கு மிகுந்தோர் தீர்த்தம் ஆட வரும்போது அவர்கள் எதிரேயே பிணத்தைத் தூக்கிச் செல்லும் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மேலும் தங்களது வீட்டிலிருந்த முதியோர் களும் இவ்வாறு தீர்த்தத்தில் மூழ்கி இறந்துவிட்டனரே என்ற வருத்தங்களும் பொதுமக்களிடம் அதிகம் இருந்தது. இக்காரணங்களால் தீர்த்தம் முழுவதுமாக மூட்டப்பட்டு தென்னந்தோப்பு உள்ளது.

திருக்கோயிலின் உள்ளே அம்மன் கோபுரத்திற்கு எதிரே அக்கினித்திசையில் ஒரு கிணறு உள்ளது. இக்கிணறே தற்போதைய மணிகன்னிகா தீர்த்தமாகக் கருதப்படுகிறது. இதிலும் தற்போது தண்ணீர் போதுமான அளவு இல்லை. தற்போது ஆலயத்தின் தண்ணீர்த் தேவைகளுக்காக ஆழ்குழாய்க் கிணறு(bore well) ஒன்று தோண்டப்பெற்று தண்ணீர் வழங்கப்படுகிறது.

## 5. தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கம்

தென் திசையில் தாமிரபரணி நதிக்கரையிலே வேணுவனம் என்னும் ஊரின் மேற்குத் திசையிலே கோலாகலமென்னுங் கிராமத்திலே, வேதசர்மா என்னும் பெயருள்ள ஒரு பிராமணன் இருந்தான். அவன் நான்கு வேதங்களையும் ஆறு சாத்திரங்களையும் கலைகளையும் ஓதியுணர்ந்தவன். கடமைகளை வழுவாது செய்து ஐந்தெழுத்து மந்திரத்தை விதிப்படி மெய்யன்பொடு ஓதுபவன். பிள்ளைகள் மற்றும் பேரன் பேத்திகளுடன் குபேரனுக்கு ஒப்பாக வாழ்பவன். அவனுக்கு மூப்புப் பருவம் வந்து இயற்கை மரணமடைந்தான். அவனுடைய மகன், தருமஞ்ஞன் என்னும் பெயருடைய ஒருவன் தந்தையைப் போல வேதம் முதலியவற்றை ஓதியுணர்ந்து ஒழுக்கத்திலே வழுவாதவனாக இருந்தான். தன்னுடைய தந்தைக்கு இறுதிக் கடமைகளை அன்புடன் முடித்து அஸ்தியை ஒரு குடத்திலே அடைத்துத் துணியினாலே வாயை மூடி அரக்கு முத்திரை வைத்துக் கங்கைநதியிலே இடும் வண்ணம் எண்ணி, அவனது மாணாக்கனோடு வடதிசை நோக்கி காசிக்குச் சென்றான். செல்லும் வழியில் உள்ள சிவத்தலங்களிலே பெரியோர்களுக்குத் தானங்கள் கொடுத்துத் தீர்த்தங்களிலே நீராடினான். மதுரையை அடைந்து அங்குள்ள தீர்த்தங்களிலே மூழ்கித் தானங்கள் கொடுத்து மூன்று தினம்தங்கி அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரரைத் தரிசித்துப் பின்னர் திருப்பூவணம் வந்துசேர்ந்தான். சிவலிங்கப் பெருமானைத் தரிசித்து, மணிகன்னிகைத் தீர்த்தக்கரையை அடைந்து, வயிரவக் கடவுளை எள்ளு, அருகு, அட்சதை இவைகளினாலே பூசித்து, அஸ்திக் குடத்தை அக்கரையிலே வைத்துவிட்டுத் தீர்த்தத்திலே மூழ்கினான். மூழ்கும்போது பெருமழை பெய்தமையால் விரைந்து எழுந்து கரையேறும் பொழுது, கால் இடறி அஸ்திக் குடம் அத்தீர்த்தத்திலே விழுந்தது. உடனே அக்குடத்தை எடுத்துப் பார்த்தான். அதனுள்ளே இருந்த எலும்பு முழுவதும் தாமரை மலரும், உற்பல மலருமாக இருக்கக் கண்டான். எலும்பு பூவாக மாறியதைக் கண்டு பெரிதும் மகிழ்ந்து

பர்ணசாலைகளிலே வசிக்கின்ற முனிவர்களிடம் போய் நிகழ்ந்தவற்றைக் கூறினான். அவர்களும் இத்தலம் காசியைவிடச் சிறப்புடையதாம் என்றனர். உடனே தருமஞ்ஞன் என்னுடைய பிதாமுதலியோர் நற்கதியடைந்தனர்' என்று கூறிச் சிவாலயஞ் சேர்ந்து, சிவலிங்கப் பெருமானைத் தரிசித்து வணங்கித் துதித்த பொழுது, சிவபெருமான் காளை வாகனத்தில் தோன்றிக் காட்சி கொடுத்துத் தருமஞ்ஞனுக்கும் நற்கதியை அருளி மறைந்தருளினார். தருமஞ்ஞனைப் புகழ்வோரும் அவன் கதையைப் படிப்போரும் பாவங்கள் நீங்கிச் சுவர்க்கலோகம் சேர்வர்.

## 6. உற்பலாங்கி பதியை அடைந்த சருக்கம்

துங்கபத்திரை நதிக்கரையில் உள்ள ஒரு புண்ணிய கிராமத்திலே, கோபாலன் என்னும் பிராமணனுக்கு உற்பலாங்கி என்ற பேரழகுடைய மகள் ஒருத்தியிருந்தாள். அவளுக்குத் திருமணம் செய்விக்க வேண்டும் என்று அப்பிராமணன் நினைத்துக் கொண்டிருந்தபோது, அவர்கள் வீட்டு வாயிலில் அழகு பொருந்திய ஏழைப் பிராமணன் ஒருவன் வந்து அன்னப்பிச்சை கேட்டு நின்றான். அவனைக்கண்ட கோபாலன், தன் மகளுக்கு ஏற்ற வரன் இவனே என்று முடிவு செய்து, அவனிடம் தன் கருத்தைச் சொல்லி கலந்துரையாடினான். அவனும் அதற்கு இசைந்து உற்பலாங்கியை மணமுடிக்க விருப்புற்றான். கோபாலன் தன் மனைவியிடம் கலந்து ஆராய்ந்த பின்னர் மணப்பந்தல் அமைத்து, சில சடங்குகளைச் செய்தான். பின்னர் தன் மகளைக் கன்னிகாதானம் செய்யும் முன் மணமகன் மரணமடைந்தான். இவ்வாறு இருபது நபர்கள் கன்னியாகிய உற்பலாங்கியைத் திருமணம் செய்துகொள்ளும் முன் மரணமடைந்தார்கள். இதனால் உற்பாலங்கியின் பெற்றோர்கள் பெரிதும் வருந்தினர். சிறிது காலத்தில் காலமடைந்தனர். அதன் பின் உற்பலாங்கி தனக்கேற்ற கணவனை அடையும் பொருட்டுப் பல சிவதீர்த்தங்களிலே மூழ்கி இறைவனை வழிபட்டு வந்தாள். இறுதியாகத் திருப்பூவணம் வந்து சேர்ந்தாள். திருப்பூவணத்தில் மணிகன்னிகைத் தீர்த்தத்திலே நீராடினாள். அத்தீர்த்தக் கரையில் காலவமுனிவர் என்பவரைக் கண்டு வணங்கினாள். அவரிடம் தான் வந்த நோக்கத்தைக் கூறினாள். அதனைக் கேட்டறிந்த முனிவர் உற்பலாங்கிக்கு இத்தகைய துன்பங்கள் ஏற்படக்காரணம் முற்பிறவியிலே கௌரிதேவியின் விரதம் மேற்கொண்டு விரதத்தை முறைப்படி முடிக்காமல் விட்டதால் இப்பிறவியிலே இத்துன்பங்கள் நேர்ந்ததெனச் சொன்னார். மணிகன்னிகை தீர்த்தத்தில் நீராடிவிட்டதால் இப்பாவங்கள் நீங்கி மங்களம் உண்டாகும். மேலும் நீ, "இத்தீர்த்தத்தில் மலர்ந்துள்ள தாமரை மலரையும், உற்பல மலரையுங் கொண்டு உமாதேவியாரை விதிப்படி பூசனை செய்து வழிபட்டால் அம்மை நேரில் எழுந்தருளி மங்களந்தந்தருளுவார்" என்று முனிவர் சொல்லியருளினார். உற்பலாங்கியும் அவ்வாறே செய்து தேவியாரின் திருவருளினாலே நல்ல கணவன் வாய்க்கப் பெற்று, தீர்க்க சுமங்கலியாயிருந்தாள். "இத்தீர்த்தத்திலே இடபராசியில் சந்திரன் இருக்கும் செவ்வாய்க்கிழமை களில் அமங்கலிகள் நீராடினால்

மறுபிறப்பிலே தீர்க்க சுமங்கலிகளாக வாழ்வர்". சுமங்கலிகள் நீராடினால் பிள்ளைப்பேறு அடைவார்கள். இத்தகைய புண்ணிய தீர்த்தங்கள் உடையது திருப்பூவணத் திருத்தலமாகும்.

இக்கதையைப் படிப்போரும் கேட்போரும் கலிகாலத்தின் கொடுமை நீங்கப்பெற்று வளமைபெற்று நற்கதியுடன் வாழ்வார்கள். திருமணமாகாத பெண்களுக்குத் திருமணமாகி நல்ல கணவன் கிடைப்பர்.

## 7. பாஸ்கரபுரச் சருக்கம்

காசிபமுனிவருக்கும் அதிதிக்கும் மகனாகப் பிறந்த சூரியன், துவட்டாவின் மகளாகிய பிரபையை மணந்து வாழ்ந்துவந்தான். அவளால் சூரியனின் வெப்பத்தைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. எனவே தனது நிழலைத் தன்னைப் போலப் பெண்ணாக மாற்றிச் சூரியனிடத்தில் நிறுத்திவிட்டுப் பெண்குதிரை வடிவமெடுத்து, வட நாட்டிற்குச் சென்றாள். அங்கே, ஒரு வனத்தில் சூரியனின் வெம்மையைப் பொறுக்கும்படிச் சூரியனை நினைத்துத் தவம் மேற்கொண்டாள். இதனை உணர்ந்த சூரியன் ஆண்குதிரை வடிவமெடுத்து அவள் இருக்குமிடத்தை அடைந்து அவளைக் கலந்தான். பிறகு சூரியனும் பிரபையும் ஆகாய வழியாகச் செல்லும் போது தேவர் முதலியோரைச் சந்தித்துச் சூரியமண்டலத்தினைக் கடைந்து செப்பம் செய்தனர். அப்போது பொறி ஒன்று தோன்றி முதலில் திருப்பூவணத்தில் விழுந்தது. பின்பு மற்றைய தலங்களுக்குப் விரிந்து பரந்தது. இதனால் இவ்வூர் **பாஸ்கரபுரம்** என்னும் பெயர் பெற்றது என்பர். சூரியனும் பிரபையும் திருப்பூவணக் கோயிலையும், மற்ற கோயில்களையும் தரிசித்தது போன்றே நாமும் உபவாசம், விரதம், ஜபம் ஆகியவற்றை அன்புடன் செய்தால் முத்தி பேறு எய்துவது நிச்சயமாகும் எனக் கூறப்படுகிறது. இத்தகைய சிறப்புக்களை உடையது திருப்பூவணத்திருத்தலமாகும்.

இக்கதையைப் படிப்போர் கேட்போர் மற்றும் கருத்தில் கொள்வோர் அனைவரும் தேவர்களது ஊரில் இருந்து அரசு ஆள்வார்கள்.

## 8. சர்வ பாவ விமோசனச் சருக்கம்

இச் சருக்கத்திலே ஒவ்வொரு மாதமும், இத் திருப்பூவணத் தீர்த்தமாகிய மணிகன்னிகைத் தீர்த்தத்திலே நீராடி, பூசனை வழிபடும் முறைகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

**சித்திரை மாதத்தில்,** முதலில் வைரவக் கடவுளை வணங்கிப் பின் சிவபெருமானை வழிபட்டுச் சூரியோதயத்திற்கு முன் மணிகன்னிகைத் தீர்த்தத்திலே நீராடினால் கொலை முதலிய பாவங்கள் நீங்கும். குட்ட நோயுடையோர் மற்றும் கொடிய நோயுடையோர் இத்தீர்த்தத்திலே நீராடினால், அந் நோய்கள் ஒழியப் பெறுவர்.

**வைகாசி மாதத்தில்** புதன்கிழமைகளில், இத் தீர்த்தத்தில் மூழ்கி நீராடினால், பொருட்களவின் பாவம் போகும். இங்கு பொருட்களைத் தானம் செய்வோருக்குப் புத்திரர்கள் எள்,தயிர், பால், உளுந்து மற்றும் வெல்லம் இவைகளுடன் அறுசுவைக் கறியமுது செய்விப்பார்கள்.

சந்தனம், பொட்டு மற்றும் ஆபரணம் முதலியவற்றைத் தானம் செய்வோர்கள் சுகம் அனுபவிப்பர்.

**மாசிமாதத்திலே** மாமக காலத்தில் மூழ்குவோர் பாவங்களைப் போக்குவர்.

**மார்கழி** மாதத்தில் நீராடுவோர், சொர்க்கம் சேர்ந்து 14 இந்திரப் பட்டம் வரை வாழ்ந்து பூலோகத்தில் அரசர் ஆவார்கள் என்று கூறப்படுகிறது.

**கார்த்திகை மாதத்தில்** நீராடுவோர் சிவபுரம்சேர்வர். இவ்வாறாக மணிகன்னிகைத் தீர்த்தத்தின் சிறப்புக்களாக ஒவ்வொரு மாதமும் நீராடினால் கிடைக்கும் பலன்பற்றி இச்சருக்கத்திலே கூறப்பெற்றுள்ளது.

## 9. பிரமசாப விமோச்சனச் சருக்கம்

திருக்கயிலாய மலையில் உள்ள திருமண்டபத்தில் தேவர் முதலியோர் சூழ்ந்திருக்கச் சிவனும் உமாதேவியாரும் வீற்றிருந்தனர். நந்திதேவர் துதிசெய்து கொண்டு இருந்தார். அரம்பை, மேனகை, ஊர்வசி, திலோத்தமை முதலிய தேவரம்பையர்கள் திருநடனம் புரிந்தார்கள். அவர்களில் ஊர்வசி தனித்து ஆடியபோது சிவபிரான் மகிழ்ந்திருந்தார். அவ்வேளையில் பலத்த காற்று வீசியதால். ஊர்வசியின் இடையில் உடுத்தியிருந்த ஆடை சற்றே ஒதுங்கியது. இதனால் மற்றவர்கள் அனைவரும் அஞ்சித் தலைகவிழ்த்தனர். ஆனால் பிரமன் ஒருவன் மட்டும் ஊர்வசியின் மறைவிடத்தை உற்று நோக்கினான். அதனை உணர்ந்த சிவபிரான், சினங்கொண்டு நமது சந்நிதியிலே நிற்க உனக்கு அருகதையில்லை எனக் கூறினார். உடனே பிரமன் சிவனது பாதங்களில் விழுந்து தொழுதான். அவனது அன்பை உணர்ந்த சிவபிரான் இது போன்று நமது சந்நிதியில் தவறுகளை இழைப்போர் நரகவாசியாவான் என்று கூறித் தவறை உணர்ந்த பிரமனுக்குப் பிராயச்சித்தமாகத் திருப்பூவணத்திலே தேவியினால் பூசிக்கப்பட்ட மகாலிங்கத்தைப் பூசித்தால் கருணை புரிவதாக அருளிச்செய்தார். பிரமனும் அவ்வாறே திருப்பூவணம் வந்து இறைவனை வழிபட்டான். அங்கே தவஞ் செய்துகொண்டிருந்த விஷ்ணுவைக் கண்டு தான் பூமிக்கு வந்த வரலாற்றைக் கூறி உரையாடினான். பிரமன் தேவகம்மியனை வரவழைத்து புட்பவனேசுவரருக்கு ஆலயம் அமைக்கும்படிச் சொல்ல, அவனும் அவ்வாணைப்படித் திருக்கோயில் அமைத்தான். பிரமன் அத்திருக்கோயிலினுள் புகுந்து சிவலிங்கத்தைப் பூசித்து சிவயோகத்தில் இருந்தான். அதனை உணர்ந்த சிவபிரான் பிரமனுக்குக் காட்சியருளி அவன் செய்த பாவத்தைப் போக்கி இப்பூவணத்தில் வசிப்பவருக்கும் பாவம் தீரும்படி அருளினார். திருப்பூவணத்தில் இறைவன் சுயம்புலிங்கமாய்த் தோன்றியருள, அங்கு பிரமனால் கோயில் கட்டப்பட்ட வரலாற்றைக் கதையாகக் குறிப்பிடுகிறது இச்சருக்கம்.

பிரமனது காமஇச்சையால் உண்டான சாபம் நீங்கப் பெற்ற இக்கதையைப் படிப்போரும் கேட்போரும் பிறரிடம் கூறுவோரும் சுவர்க்கத்தில் கிடைக்கக்கூடிய இன்பத்தை அளிக்கும் மகளிர் சூழ எந்நாளும் இருப்பர்.

## 10. இலக்குமி சாப விமோசனச் சருக்கம்

இச்சருக்கத்தில் வைகுண்டத்தில் இலக்குமி செய்த பாவத்தைப் போக்க இத்தலம் வந்த வரலாறு கூறப்படுகிறது.

வைகுண்டத்தில் ஆடிப்பாடிய அரம்பை, வித்தியாதரன் முதலியோருக்கு வேண்டிய வரங்களை அருளிச் செய்த பின்னர், சயனமண்டபத்தில் இலக்குமிதேவி திருவடிப் பணிசெய்ய, விஷ்ணு நித்திரை புரிந்திருந்தார். அவ்வேளையில் **வாலகில்லி** என்ற முனிவர் வைகுண்டத்திற்கு வந்தார். இச் செய்தியைச் சேடியர் மூலம் கேள்விப்பட்ட இலக்குமி தேவி, அம்முனிவர் குள்ளமானவராய் (*குரூபிகளாய்*) இருத்தல்பற்றி எள்ளி நகையாடினாள். அதனால் கோபமுற்ற முனிவர் விஷ்ணுவையும் மதியாது வைகுண்டத்தை விட்டு வந்தவழியே திரும்பிச் சென்று விட்டார். அப்பொழுது நித்திரை நீங்கிய விஷ்ணு பெருமான் இதுவரை நான் அந்தணர்களுக்கு அன்பன் என்பதை நீ இப்போது மாற்றி விட்டாய். உயர்ந்த குலமகளாய்க் கணவன் கருத்தின் வழி ஒழுகுபவளாயினும் அந்தணர்களை அவமரியாதை செய்தால் அவள் குலத்திற்குக் கேடு விளைவிப்பவள் ஆவாள் என்று சபித்தார். அச்சாபத்தையடைந்து இலக்குமி தேவி திருப்பூவணம் சேர்ந்து தவம் செய்தாள். விஷ்ணு மூர்த்தி பயந்து விரைந்து சென்று முனிவரிடம் தன் மனைவி நகைத்ததைப் (கேலியாகச் சிரித்ததைப்) பொறுத்துக் கருணை புரிய வேண்டும் என்று வேண்டினார். அதற்கு அம்முனிவர் இலக்குமியானவள் பன்னிருவருடம் மணிகன்னிகையில் மூழ்கித் தவம் செய்ய, விஷ்ணுவாகிய நீ போய் புட்பவனேசுவரரைப் பூசித்தால் அவமதித்த அபராதமும் சாபமும் நீங்கி வைகுண்டத்தில் வாழ்வாய் எனப் பாவ விமோசனம் கூறினார்.

பிறகு விஷ்ணு பெருமான் முனிவரிடம் அவர் வந்த காரணத்தை வினவினார். அதற்கு வாலகில்லி முனிவரும் நாங்கள் செய்யும் வேள்வியை நீ காத்தல் வேண்டும் எனக்கூறினார். இதனால் அங்ஙனமே முனிவர்கள் வேள்வியைக் காத்தருளினார். பின்பு திருப்பூவணம் சேர்ந்து சிவலிங்கப் பெருமானைப் பூசித்ததினால் இலக்குமிக்கு உண்டான அபராதமும் சாபமும் நீங்கப் பெற்று அவளோடு வைகுண்டம் சேர்ந்து வாழ்ந்தார்.

**சித்திரை மாதத்திலே ஆதிவாரத்திலே** (ஞாயிற்றுக்கிழமைகளில்) விஷ்ணு தம் பெயரால் உண்டாக்கிய சிவலிங்கத்தை மணிகன்னிகைத் தீர்த்தத்திலே மூழ்கி வழிபட்டால் பாவம் நீங்கி விஷ்ணுபாதத்தில் முத்தி பெறுவர்.

இக்கதையைக் கூறுவோரும் கேட்போரும் சீர்மிகப்பெற்றுச் செல்வராய் வாழ்வார்கள்.

## 11. உமாதேவி திருஅவதாரச் சருக்கம்

ஒருசமயம், **தட்சன்** பிரமாவிடம் முழுமுதற் கடவுள் யார் என வினவினான். அதற்குப் பிரமாவும் சிவன்தான் என்று கூறினார்.

இப்பதிலைக் கேட்ட தட்சன், படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும் முறையே மூவர்களுக்கும் உரியதாய் இருக்க, சிவனை மட்டும் முதற்கடவுள் எனக் கூறுவது என்பது பொருந்தாது எனக் கூறினான். அதனைக் கேட்ட பிரம்மா என்னையும் விஷ்ணுவையும் உண்டாக்கிப் பின்பு இவ்வுலகத்தைப் படைக்கவும், காக்கவும் சிவபெருமான் அதிகாரம் கொடுத்தார். ஆதலால் அவரே முழுமுதற் கடவுள்– அவரை நோக்கி நீ தவஞ் செய்வாய்! எனக் கூறியருளினார். அவ்வாறு தட்சனும் தவஞ் செய்ய, சிவபெருமான் எழுந்தருளினார். தட்சனும், சிவபெருமானிடம் அவரை நோக்கி உம்மை வணங்குவோர் அனைவரும் என்னை வணங்கவும், என்பணி செய்யவும், யான் உன்னை மாத்திரம் பணியவும், இந்திரபதம், பிரம்மபதம், விஷ்ணுபதம், அசுரபதம் முதலிய எல்லாம் என்னுடைய ஆணைவழி ஒழுகும்படி நான் தலைவனாய் இருக்கவும் எனக்குப் புதல்வர் புதல்வியரைக் கொடுத்து அவர்கள் இறக்காமல் இருக்கவும், உமாதேவி எனக்கு மகளாகப் பிறக்கவும், நீர் அத்தேவியைத் திருமணம் புரியவும் வரமருள வேண்டும்" என வரங்கள் கேட்டான். சிவபெருமானும் அவ்வாறே வரங்கள் அருளினார். வரம் பெற்ற தட்சன் பிரமாவை அழைத்து 'மகாபுரம்' என்னும் நகரை அமைத்தான். அந் நகரிலிருந்து அரசாட்சி செய்து, **வேதவல்லி**யை மணந்து கொண்டான். பின்பு புத்திரர்களைப் பெற்று விவாகம் செய்து கொடுத்து பாக்கியத்தோடு வாழ்ந்து கொண்டிருந்தான். அந் நேரத்தில் திருக்கைலாயத்தில் உமா தேவியார் சிவனை வணங்கி உயிர்களுக்கு முத்தியருளும் முறையை அருளிச் செய்ய வேண்டும் என்று விண்ணப்பம் செய்த போது, சிவபிரான், உமாதேவியாரைப் படைத்து முத்தி கொடுப்பதாகக் கூறினார். பின்பு **காளிந்தி நதியிலே** தாமரை மலரிலே வலம்புரிச்சங்கு வடிவாய் நீ தவம் புரிந்தால், தட்சன் உன்னைக் குழந்தையாகக் கொண்டு வளர்ப்பான் எனக்கூறி அருளினார். பிறகு நான் வந்து உன்னை மணம் செய்து கொண்டு இக்கயிலைக்கு வருவோம் என்றார்.



உமாதேவியாரும் அந்த ஆணைப்படித் தவஞ் செய்ய, வேதவல்லியோடு தட்சன் நீராடிய போது, கமலமலரிலே தங்கிய சங்கினைக் கண்ணுற்றுக் கைகளினால் அள்ளிய போது, உமாதேவியார் குழந்தை வடிவாகினார். அக்குழந்தையைத் தங்கள் மகளாக வளர்த்து வந்தனர். உமாதேவியின் ஆறாவது பருவமாகிய (26முதல் 31 முடிய) தெரிவைப் பருவத்தில் கன்னிமாடத்தில் சிவபிரானை நோக்கித் தவஞ் செய்து கொண்டிருந்தாள். சிவனும், பிராமணன் வடிவம் கொண்டு வர, அவரை வணங்கி உபசரித்தாள். பிரமச்சாரிப் பிராமணனாக வந்த சிவபெருமானும்,

தேவியிடம், உன்னை மணம் செய்யும் பொருட்டு வந்தோம் எனக் கூறினார். அதற்கு அஞ்சிய தேவியார் வஞ்சக வேடம் தாங்கி வந்தாய் போலும் எனச் சினந்து கூறினார். மேலும் நான் சிவனை மணம் புரியும்பொருட்டுத் தவம் செய்கிறேன் என்றும் கூறினார். அப்போது, "இறைவன் வந்து மணம் புரிதல் அருமை" எனத் தேவியை இகழ்ந்தார். இதனால் தேவியார் மேலும் வருந்தி, அருந்தவம் செய்வேன் எனக் கூறினார். சிவன் தன் உண்மை வடிவை வெளிப்படுத்தத் தேவியார், கண்ணீர் ஒழுக அவரைத் தரிசித்தார். இந்நிகழ்ச்சிகளைக் கண்ணுற்ற சேடியர் ஓடிச் சென்று தட்சனிடம் சொல்லினர். தட்சனும் சிவனுக்கே தனது மகளை மணம் செய்து கொடுப்பேன் என உறுதிபூண்டான்.

இக்கதையைப் படிப்போரும் கேட்போரும் முத்தி அடைவார்கள்.

## 12. திருக் கலியாணச் சருக்கம்



தட்சன் உமா தேவியாருக்குத் திருமணம் செய்விக்கும் பொருட்டு, அனைத்து வேலைகளையும் துவக்கி, புத்திரிகளையும் வரவழைத்தான். விஷ்ணு, பிரம்மா ஆகியோரும் வந்தனர். சிவன் உமாதேவியார் தவஞ்செய்யும் இடத்திற்கு எழுந்தருளினார். அப்போது, தட்சன் சிவபெருமானைத் திருமண மண்டபத்திற்கு எழுந்தருள வேண்டுமென வேண்டினான். அவ்வாறே எழுந்தருளிய சிவபிரானுக்கு, வேதவல்லி பசும்பால் வார்த்து பாதபூசை செய்தாள். தேவர்கள் சூழ உமாதேவியார் திருமணக்கோலம் கொண்டு சிவபிரான் அருகே அமர்ந்தார். பிரம்மா அக்கினி வளர்த்துத் திருமணச் சடங்குகளை முடிக்கும் போது, சிவபிரான் மறைந்தருளினார். பெரிதும் வருந்திய உமாதேவி அருந்தவம் செய்தார். தட்சன் தேவர்களை அனுப்பிவைத்துவிட்டுச் சிவனை நிந்தித்துக் கொண்டிருந்தான். இவ்வாறு இருக்கும் போது, சிவபிரான் உமாதேவியாருக்குக் காட்சியளித்து அவரை இடபவாகனத்திலே அமரச் செய்து கைலாயத்திற்கு அழைத்துச் சென்றார். இவ்வாறு தட்சனுக்குக் காட்சியளிக்காமலேயே உமாதேவியாரைக் கவர்ந்து சென்றதால், தட்சன் தேவர்களை அழைத்து, இன்று முதல் சிவபிரானை நீங்கள் வழிபடக்கூடாது என ஆணையிட்டான்.

இக்கதையைப் படிப்போரும் கேட்போரும் இந்திரபோகங்களை அனுபவித்துச் சிவபிரான் திருவடியைச் சேர்வார்கள்.

## 13. தட்சன் வேள்வியழித்த சருக்கம்

பார்வதிதேவியின் தந்தையாகிய தட்சன் நடத்திய யாகத்திற்கு அவளது கணவன்–பரமேஸ்வரனுக்கு அழைப்பு இல்லை. இதனால் அழையா விருந்தாளியாக யாகத்திற்குச் செல்லக்கூடாது என்பது ஈசன் விருப்பம். இருப்பினும் தனது தந்தை நடத்தும் யாகத்திற்குச் சென்று தந்தைக்கு முறைப்படி எடுத்துக் கூறி, ஈசனையும் அழைக்கச் செய்யவேண்டும் என்பது உமையம்மையின் விருப்பம். இதனால் பார்வதி தேவியார், பரமேசுவரருடன் தர்க்கம் செய்தார்.

தட்சன் சிவபிரானை விலக்கித் திருமால் முதலிய தேவர்கள் சூழ வேள்வி செய்யத் துவங்கினான். இதனை அறிந்த நாரதர் சிவனிடம் சென்று தெரிவித்தார். அப்போது உமாதேவியார், சிவனின் திருஉள்ளம் உணராமல் தட்சனின் யாகசாலையை அடைந்தார். தன் மகள் வேள்விக்கு வந்திருப்பதைக் கண்ட தட்சன் மிகுந்த கோபமுற்று, நீ கயிலைமலைக்குத் திரும்பிச் செல்லலாம் எனக் கூறினான். உமா தேவியார் கடுஞ்சினம் கொண்டு அவ்வேள்வி அழிய உன்னுடைய தலையும் ஒழிந்திடுக எனச் சபித்தார். பின்பு மூலாக்கினியை எழுப்பி அதிலே மூழ்கி தட்சன் வளர்த்த யாககுண்டத்திலே அவதரித்தாள். இந்நிகழ்ச்சிகளை திருநந்தி தேவர் வழியாக அறிந்த சிவபிரான், வீரபத்திரக் கடவுளைப் படைத்து தட்சனின் சிரத்தை அறுத்து, அவனது வேள்வியையும் அழித்துவிடு யாமும் வருவோம் என்று திருவாய் மலர்ந்தருளினார். வீரபத்திரக் கடவுளும் அவ்வாணைப்படி, தட்சனது தலையை அறுத்து யாக குண்டத்திலே போட்டார். அப்போது சிவன் எழுந்தருளினார். உடனே திருமால் வணங்கிப் பிரார்த்தனை செய்தமையால், வீரபத்திரக் கடவுள் முகமாகச் சிவபெருமான் தேவர்களைப் பிழைப்பித்தார். பின் பிரம்மா வணங்கிக் கேட்டுக் கொண்டபடி ஆட்டின் தலையைத் தக்கனுக்கு அமைத்து எழுப்பினார். சிவபிரான் பார்வதி தேவியாருடன் திருக்கயிலாய மலை சேர்ந்து யோகியாய் எழுந்தருளினார். ஈசனின் விருப்பத்திற்கு மாறாகச் சென்றதும், அவரை எதிர்த்துச் சண்டைச் செய்ததும் இறைவி அறிந்து செய்த பாவங்கள் அல்லவா? இப்பாவங்களை இறைவியே செய்துவிட்டாரே! இவ்வாறு அறிந்து செய்த பாவத்தைப் போக்க பிராயச்சித்தம் செய்ய வேண்டுமென பார்வதி தேவி விரும்பியிருந்தார்.

இக்கதையைப் படிப்போரும் கேட்போரும் அரசனாகி நாட்டை நன்முறையில் ஆண்டு, நன்மக்களைப் பெற்று எல்லா இன்பங்களையும் துய்த்துப் பின்னர் சுத்த ஞான சுகத்தினில் வாழ்வார்கள்.

## 14. உமைவரு சருக்கம்

சிவபெருமானும் நீ போய்த் திருப்பூவணத்தலத்தில் தவம் செய், அங்கே ஒரு மூல லிங்கம் தோன்றும். அதனை நீ பூசித்தால், தாம் வெளிப்படுவதாகக் கூறி உமா தேவிக்கு அருள்புரிந்தார். உமா தேவியாரும் அவ்வாறே பாரிசாத மரத்தை வளர்த்து அதன் நிழலிலே தவஞ் செய்தார். அம்மரத்தின் அடியிலே சிவலிங்கம் முளைத்தது.

அதனையறிந்து பூசித்து வழிபட்டார். சிவனும் வார்த்தை கடந்த பாவத்தை மாற்றி அமர்ந்திருந்தார்.



இதுவே திருப்பூவணத்தில் சுயம்புலிங்கமாய்ச் சிவபிரான் தோன்றிய வரலாறு ஆகும். இவ்விடத்தில் தினையளவு தானம் செய்தாலும் அது புண்ணியத்தைச் சேர்க்குமிடமாகும்.

இங்கே வேதம் உணர்ந்த அந்தணன் ஒருவன் சிவார்ச்சனை செய்து உடலினை வெறுத்து, இலைக்கறி மாத்திரம் உண்டு சிவ யோகத்தில் அமர்ந்திருந்தான். பெருமழை பெய்யும் ஒரு நாள் இரவிலே ஒரு பிராமணன் அச்சிவயோகியின் பர்ணசாலையை அடைந்தான். சிவயோகியும் வணங்கி அவரை வரவேற்று தனக்கிருந்த இலைக்கறியில் ஒரு பங்கை அவருக்கும் கொடுத்து உண்பித்தான். பிராமணனும் அவ்விலைக் கறியை உண்டு மகிழ்ந்தார். அதனால், சிவபிரானும் திருஉள்ளம் மகிழ்ந்து அருளினார். இலைக்கறி படைத்த அந்தணர் முன்னே சிவன் தோன்றி பிறவி அறுமாறு அருள் செய்தார். அவனுக்கு மரணம் நேரிட்டபோது வேதாந்த முடிபாகிய சித்தாந்தத்தை உபதேசித்தார். எனவே "இத்திருப்பூவணத் திருத்தலத்திற்கு ஒப்பான எந்த ஒரு தலமும் இல்லை எனக் கூறப்படுகிறது".

## 15. சுச்சோதி தீர்த்தயாத்திரைச் சருக்கம்

கோதாவிரி நதிக் கரையிலே, போகவதி நகரத்திலே, தேவவன்மா என்னும் அரசன் ஒருவன் ஆட்சி செய்திருந்தான். அவனுக்குச் சுச்சோதி முதலான நான்கு புத்திரர்கள் இருந்தார்கள், அவர்களுக்குத் திருமணம் செய்வித்து, மூத்த புத்திரனாகிய சுச்சோதி என்பவனுக்கு முடிசூட்டி முறைப்படி அரசாட்சியை அவனிடம் ஒப்புவித்துவிட்டு தருமசீலை என்னும் மனைவியோடு வனத்தை அடைந்து தவம் செய்தான். பின்னர் அவனும் அவனது மனைவியும் சிவபதம் அடைந்தனர். அவ்விருவருக்கும் சுச்சோதி கர்ம காரியங்களை முடித்தபின் நாரதமுனிவர் அவனைச் சந்தித்து, "உன் முன்னோர்கள் நீ செய்யுந் **தில (எள்) தருப்பணத்தை** நேரிலே பெறும்வரை **தருப்பணஞ் செய்வாய்**" என்று கூறினார். சுச்சோதி அரசனும், தன் சேனைகள் சூழப் புறப்பட்டுப் பிரயாகை, அரித்துவாரம், அவந்தி, மாளவம், காகோலம், நீலகண்டம், திரிகூடவீசம் ஆகிய வடநாட்டுத் தலங்களிலும், காஞ்சீபுரம், தில்லைவனம் ஆகிய தென்நாட்டுத் தலங்களிலும் முறைப்படியாகத் தீர்த்தங்களாடிச் சிவபிரானைத் தரிசித்துப் பிதிர்களை நோக்கித் திலதருப்பணஞ்செய்தான். பின்னர் பாண்டியநாட்டிலே திருவாலவாய் சேர்ந்து, பொற்றாமரைக் குளத்திலே மூழ்கி அவனது முன்னோர்களுக்குத் திலதருப்பணஞ்செய்து மீனாட்சி சமேத சுந்தரேசுவரரை வழிபட்டு அங்கே தங்கினான். அவ்வாறு தங்கியிருக்கும் போது, ஒரு தினம் இத்தனை தலங்களில் திலதருப்பணம் செய்தும் முன்னோர்கள் நேரில் வந்து அவற்றைப் பெற்றுக் கொள்ள

வில்லையே! ஒருவேளை, "நாரதமுனிவர் கூறிய வார்த்தை விநோதமோ" என்று கருதி மனம் வருந்தியிருந்தான். அப்போது நாரதமுனிவர் அங்கு வந்து இத் திருவாலவாய்க்குக் கிழக்குத் திசையில் திருப்பூவணம் என்னும் தலம் உள்ளது. அத்தலம் சிவபிரானுக்கும், முனிவர்களுக்கும், பிதிர்களுக்கும் திருவுள்ளம் மகிழத்தக்க தலமாக உள்ளது. "நீ அங்கே சென்று உன் பிதிர்களுக்குத் தில தருப்பணம் செய்தால் அதனை அவர்களே நேரில் வந்து பெற்று முத்திடையவார்கள் என்றார். அங்ஙனமே அரசன் திருப்பூவணஞ் சேர்ந்தான்".

## 16. சுச்சோதி பிதிர்களை முத்தியடைவித்த சருக்கம்

நாரத முனிவர் அருளியபடித் திருப்பூவணஞ் சேர்ந்த சுச்சோதிராசன், மணிகன்னிகைத் தீர்த்தத்திலே நீராடிச் சிவலிங்கப் பெருமானை வழிபட்டு வரும் நாளிலே, ஒருநாள், காலவமுனிவரைக் கண்ணுற்று வணங்கி, அவரது ஆசிர்வாதம் பெற்று, வைகைநதி முதலிய தீர்த்தங்களிலே அமாவாசைதினத்திலே நீராடி, தன்னோடு வந்த மூவாயிரம் முனிவருக்கும் அறுசுவைக் கறியமுதுடன் திருவமுது செய்வித்து, திருப்பூவணேசருக்குப் பூசைகள் நடத்தி, மணிகன்னிகைத் தீர்த்தத்தை அடைந்து நீராடி, சங்கற்பம் பண்ணிப் பிதிர்களை ஆவாகித்து, "என்னுடைய பிதிர், பிதாமகர், பிரபி அனைவரும் எனக்கெதிரிலே தோன்றி நான் கொடுக்கும் எள்ளையும், தண்ணீரையும் பிண்டத்தையும் ஏற்றருளவேண்டும்; ஏற்றருளாவிடின், எனதுயிரை விட்டுவிடுவேன்" என்று அனைவரும் கேட்கும்படியாகச் சொல்லிப் பிண்டம் கொடுத்தான். அப்போது மற்றவர்களுக்குத் தோன்றாமல் அவ்வரசனுக்கு மட்டும் பிதிர்கள் அனைவரும் தேவவடிவங்கொண்டு எதிரிலே தோன்றிப் பிண்டத்தை உண்டு அரசனை ஆசிர்வதித்தனர். இதனால் அரசன் மகிழ்ந்தான். பின்னர் அவனது முன்னோர்கள் சிவபிரான் திருவடிநிழலிற் சேர்ந்தார்கள். சிவபிரான் திருவருளினாலே சுச்சோதிராசன் சீவன் முத்தி பெற்றான். மூவாயிரம் முனிவர்களும் பிதிர்கள் பொருட்டுத் தானஞ் செய்தமையால் அம்முனிவர்களுடைய பிதிர்களும் நற்கதி பெற்றனர். இக்காரணத்தாலே இத்தலமானது பிதிர்முத்திபுரம் என்று பெயர் பெற்றது. புட்பவனேசர் திருக்கோயிலுக்கு நிருதித்திக்கிலே (தென்மேற்குத்திசை) சுச்சோதிராசன் தன்னுடைய தந்தை தேவவன்மாவின் பெயராலே ஒரு சிவலிங்கத்தை நிறுவினான். பின்பு அவ்வரசன் மூவாயிரம் முனிவர்களோடு போகவதி நகரஞ் சேர்ந்தான்.

"திருப்பூவணத் தலத்திலே பிதிர்களுக்குத் திலதர்பணஞ் செய்வோர் அளவில்லாத பயன் பெறுவர்" என்ற கருத்தும் 'பிதுர் முத்திபுரம்' என்ற பெயர் ஏற்பட்டதற்கான காரணமும் இச் சருக்கத்தில் கூறப்பட்டுள்ளது.

**திதி – தருப்பணம் செய்தல் – திருப்பூவணத்தில் 1) ஸ்ரீ கோவிந்தராஜன் ஐயங்கார், 2) ஸ்ரீ கிருஷ்ண ஐயங்கார் மற்றும் 3) ஸ்ரீ ரெங்கநாத ஐயங்கார் இவர்களது குடும்பத்தினர் பரம்பரை பரம்பரையாகத் திதி மற்றும்**

தர்ப்பணங்களைச் செய்து வருகின்றனர். திருக்கோயில் அருகே உள்ள அக்ரகார வீதியில் இவர்களது வீடுகள் உள்ளன.

## 17. தீர்த்தச் சருக்கம்

கார்த்திகை மாதம் பிறக்கும் புண்ணிய காலத்திலும், ஞாயிற்றுக்கிழமைகளிலும் சூரியோதயத்திற்கு முன்னே, மணிகுண்டத் தீர்த்தத்திலே, சூரிய மந்திரம் உச்சரித்து மூழ்குவோர், அவர்கள் விரும்பியவற்றை அடைந்து, முடிவிலே சிவலோகஞ்சேர்வர். அம்மணிகுண்டத்திலே மூழ்கி அந்தணர்களுக்கு உடல் உழைப்பைத் தானஞ் செய்வோர் குன்ம(குட்டநோய்)முதலிய நோய்கள் நீங்கி, முடிவிலே சூரியஉலகம் அடைவர். அத்தீர்த்தத்திலே, மார்கழி மாதத்தில் செவ்வாய்க்கிழமைகளில் மனைவியுடன் மூழ்குவோர் புத்திரப்பேறு அடைவர். திருவைந்தெழுத்தை உச்சரித்து அசுவதி நட்சத்திரத்திலே மூழ்குவோர் இறுதியிலே சிவலோகம் அடைவர். முழுநிலவு நாட்களில் பிரமதாண்டவ மூர்த்தியைப் (திருப்பூவண நடராசரை) பூசிப்போர் மகேசர் உலகத்திலே ஒரு கர்ப காலம் வரையிலே தங்கிப் பின்பு சிவலோகம் சேர்வர். மக(ஆவணி) மாதத்திலே சூரியோதய காலத்திலே, சூரிய மந்திரம் உச்சரித்துச் சிவபிரான் திருமுன்னர் நாடகஞ் செய்வோர் இறுதியிலே நற்கதி பெறுவர். சூரியோதயத்திற்கு முன் வைகை நதியிலே மூழ்கி, சிவராத்திரியிலே உறக்கமின்றி நான்கு யாமமுஞ் சிவபூசை செய்து, தானங்கள் செய்வோர் இறுதியிலே சிவலோகம் சேர்ந்து வாழ்வர். மணிகன்னிகைத் தீர்த்தத்தில் இடப(வைகாசி)மாதத்தில் விசாக நட்சத்திரத்திலும், தட்சணாயத்தில் கிரகண காலத்திலும் நீராடுவோர், பல வகையான தானஞ் செய்த பயனைப் பெறுவர். சிவசந்நிதியில் இரண்டம்பு செல்லுந் தூரத்தில் வசிட்ட தீர்த்தத்தில் மூழ்குவோர் இறுதியிலே பிரமபதம் பெறுவர். சூரியோதயத்திலே இந்திரத் தீர்த்தத்திலே, பங்குனி மாசம் உத்தர நட்சத்திரத்தில் மூழ்குவோர் யாகபலத்தை அடைவர். பன்னிரண்டு தினங்கள் மூழ்குவோர் சாகயாகபலனைப் பெறுவர். ஒரு மாதம் மூழ்குவோர் அசுவமேத யாகப் பலனைப் பெறுவர். அத்தீர்த்தத்தைப் பருகுவோர் அக்கினி ஹோம பலனை அடைவர்.

இவ்வாறு திருப்பூவணத் திருத்தலத்தில் உள்ள தீர்த்தங்களையும், அவற்றில் எந்த நாட்களில் எவ்வாறு நீராட வேண்டும் என்பது பற்றியும், அவ்வாறு நீராடி இறைவனை வணங்குவதால் ஏற்படும் பலன்களை எல்லாம் குறிக்கும் வண்ணம் இச்சருக்கம் அமைந்துள்ளது.

## 18. நளன் கலிமோசனச் சருக்கம்

நளச்சக்கரவர்த்தி வேட்டையாடி முடித்து வேடரோடு மதியஉணவு உண்டு மரநிழலிலே நித்திரை செய்தான். அப்பொழுது, மரத்திலிருந்து கீழே வீழ்ந்த பாம்பு தீண்ட, உடல் கருத்ததாகக் கனவு கண்டு விழித்தான். கனவிற்குப் பிராயச்சித்தம் செய்தும் நளராசனுக்கு ஊக்கமுண்டாகவில்லை. பின்பு நளராசன் சூதாடி எல்லாவற்றையுந் தோற்றுத் துன்பமுற்று, மனைவி புத்திரர்களை விட்டு வனம்

புகுந்தான். புகுந்தபின்னர் நகுடன் என்பவன் பாம்பாகித் தீண்டினமையால் உடல் முழுவதும் ஒளி மழுங்கிக் கருமையுற்றான். பின்னர் நளராசன் இருதுபன்ன மன்னனிடம் தேர்ப் பாகனாகச் சேர்ந்திருந்தான். அவனுடன் தமயந்தி சுயம்வரத்திற்குச் சென்று அவளை மனைவியாக அடைந்தான். மீண்டும் சூதாடி வென்று, அரசாண்டு, மனைவி மைந்தருடன் நால்வகைச் சேனைசூழத் தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டான். பிறகு கேதாரம் காசி முதலிய தலங்களை அடைந்து, தீர்த்தமாடிச் சிவலிங்க மூர்த்திகளைத் தரிசித்துக் கொண்டு, மதுரையை அடுத்துத் திருப்பூவணம் சேர்ந்து சுவாமியையும் அம்மையையும் தரிசனஞ் செய்து வழிபட்டான். திருப்பூவணத்தின் மகிமையையும் அப்பதிக்குத் தான்வந்த பின்னர்த் தனக்குண்டாகிய மனநிம்மதியையும் உணர்ந்து ஈசனை வணங்கி இத்திருப்பூவணத்தலத்திலேயே தங்கினான். தானங்கள் கொடுத்து புட்பவனேசருக்கு மகோற்சவம் நடத்தினான்.

## 19. திருவிழாச் சருக்கம்

நளச்சக்கரவர்த்தி, திருப்பூவணேசருக்குத் திருவிழா நடத்தத் தொடங்கி, வளர்பிறையிலே புனர்பூச நட்சத்திரத்திலே இடபக் கொடியேற்றி இரத உற்சவம் நடத்தித் தீர்த்த விழாவும் செய்வித்தான். பின்பு சிவலிங்கப் பெருமானைத் தரிசித்து விடை பெற்றுக் கொண்டு தனது நகரத்தையடைந்து வாழ்ந்திருந்தான்.

அறியாமல் செய்த பாவங்கள் திருப்பூவணத் திருத்தலத்தை வணங்கிய உடனேயே ஒழிந்துவிடும். அறிந்து செய்த பாவங்கள் இத்தலத்தில் ஒருமாத காலம் தங்கி இறைவனை வழிபட்டால் நீங்கும். அந்தணரை நிந்தித்த பாவமுதலியன, அப்பதியில் ஆறுமாத காலம் தங்கி வழிபட்டால் தீரும். சித்திரை மாதத்தில் முழுமதி நாளில் மணிகன்னிகைத் தீர்த்தத்திலே மூழ்கித் திருப்பூவணேசருக்குத் திருப்பூமாலை சாத்தினால், சிந்தித்தன எல்லாஞ் சித்திக்கும். வைகாசி மாதம் முழுமதிநாளில் விசாக நட்சத்திரத்தில் புட்பவனேசருக்குப் பட்டுப் பரிவட்டங் கொடுத்தவர், பாவங்கள் நீங்கிச் சந்ததியுடன் சக்கரவர்த்தியாய் வாழ்ந்து, சிவலோகஞ் சேர்வர். உத்தராயணம், தட்சிணாயணம், மாதப்பிறப்பு காலம், "கிரகணகாலம் முதலிய புண்ணிய காலங்களிலே மணிகன்னிகை முதலிய தீர்த்தங்களாடித் தானஞ் செய்வோர், பாவங்கள் ஒழிந்து எட்டுவிதமான போகங்களை அனுபவிப்பர்".

## 20. சிதம்பர உபதேசச் சருக்கம்

வசிட்டர் முதலாகிய முனிவர்கள், நான்கு வேதங்களையும் ஓதி உணர்ந்து தங்குதற்கிடமானதால், புட்பவனம், சதுர்வேதபுர மெனப் பெயர் பெறும். அப்பதியிலே, வியாச முனிவரிடம் உபதேசம் பெற்ற

**மாந்தியந்தின முனிவரும், தியானகாட்ட முனிவரும்** சிவபிரானை நோக்கித் தேவவருடம் நூறு வரையும்[1] அருந்தவம் புரிந்தனர்.



(சிங்க சித்தர் மற்றும் குரங்கு சித்தர் திருப்பூவணத்தில் தவம் செய்யும் காட்சி – அம்மன் சந்நிதியின் தீர்த்தத்தொட்டி அருகே உள்ளது).



(**குரங்கு சித்தர், பன்றி சித்தர், சிங்க சித்தர்** ஆகியோர் திருப்பூவணத்தில் தவம் இயற்றிய காட்சி – பெரிய நந்திக்கு அருகே உள்ள தூணில் உள்ள சிற்பம்).

அதற்குச் சிவபிரான் இடபாரூடராகத் தோன்றினார். அம்முனிவர்கள் தரிசித்துத் துதிக்க, அத்துதிக்கு மகிழ்ந்தருளிய சிவபிரான், முனிவர்கள் வேண்டியவரத்தை வினவினார். அம் முனிவர்கள், "இத்திருப்பூவணத்திலே ஐந்தெழுத்து மந்திரத்தை எங்களுக்கு உபதேசித்து ஆனந்த தாண்டவஞ் செய்தருள வேண்டும்" என்று வேண்டினர். அதற்குச் சிவபிரான், "கான்மீர நாட்டில் உள்ள முனிவர்கள் பொருட்டுத் தில்லைவனத்திலே திருநடனஞ் செய்வோம் அதை நீங்களும் தரிசிக்கலாம்" என்று அருளினார். இத்தலத்திலே பிரணவமாகிய திருவைந்தெழுத்தை உங்களுக்கு உபதேசித்து, உங்கள் இருதயக்கமலமாகிய அம்பலத்திலே திருநடனஞ் செய்வோம்," என்று கூறிப் பிரணவத்தை உபதேசித்தருளினார். அதனை

[1] (பூமியில் 365நாட்கள் என்பது தேவ உலகத்தில் ஒருநாள்
பூமியில் 365 வருடம் என்பது தேவ உலகத்தில் ஒருவருடம்
பூமியில் 365 x 100 = 36,500 வருடங்கள் என்பது நூறு தேவவருடங்கள் ஆகும்
எனவே 'தேவவருடம் நூறு தவம் இருந்தனர்' என்பது 36,500 வருடங்கள் தவம் இருந்தனர் என்பதாகும்)

முனிவர்கள் சிந்தித்து, சிவபிரான் திருநடனத்தையும் அவர்களது இருதயக் கமலத்திலே தரித்துப் பின்பு தில்லைவனஞ் சேர்ந்து சிவபிரானுடைய ஆனந்த தாண்டவத்தைத் தரிசித்தனர்.
இப்புராணக் கருத்தைத் திருநாவுக்கரசர், திருக்கயிலாச நாதர் காட்சிதரும் இடங்களைத் தொகுத்துக் கூறும் திருப்பாசுரத்தில்,

"புலிவலம்புத்தூர் புகலூர் புன்கூர்
புறம்பயம் பூவணம் பொய்கைநல்லூர்"

என்று எடுத்துப் பாடுகிறார். உமாதேவி, விஷ்ணு, பிரமன், சூரியன் முதலியோரும் மற்ற முனிவர்கள், இராக்கதர்கள் முதலியோரும் புத்தி முத்தியின் பொருட்டுச் சிவபிரானை அர்ச்சித்துப் பாவங்களைப் போக்கினமையால், இத்திருப்பூவணம் மகாபாபவிமோசனபுரமென்று பெயர் பெறும்.

சிவபிரானோடு காளிதேவி சபதங்கூறி ஆடிய பாவத்தைப் போக்கும் பொருட்டுத் திருப்பூவணத் திருக்கோயிலுக்கு, வடதிசையிலே தன் பெயராலே காளிசுரலிங்கம் என ஒன்று நிறுவிப் பூசித்தாள்.
பனிரெண்டுவருடம் மழையில்லாத காலத்திலே, சலந்தரன் என்னும் தவளை திருப்பூவணத்திலே, அலரியடியில் தங்கியிருந்தது. அவ்வலரியில் பூத்த மலர் சிவபிரான் திருவடியில் ஏறினதால், சிவபிரான் அத்தவளைக்குச் சக்கரவர்த்தியாய் இருக்கும் வரம் அருளினார். வரம் பெற்ற சலந்திரன், பூமியை ஆண்டு தேவர்களை வருத்தினான். அதனால் அவனை அழிக்கச் சிவபிரான் விஷ்ணுவுக்கு இத்தலத்திலே சக்கரப்படையை அருளிச் செய்து, சலந்தரனைக் கொல்வித்தார். எனினும், முன்பு அலரிமலர் சூடுதற்குக் காரணமானதால் சலந்தரனுக்கு முத்தி அருளினார்.

## தாழம்பூ வழிபட்ட திருத்தலம்

ஈசனின் அடிமுடி தேடிய கதையில் ஈசனின் தலையிலிருந்து கீழே விழுந்த தாழம்பூ பிரமனுக்கு ஆதரவாக இறைவனிடம் பொய் சொல்வது தவறு என்று அறிந்தும் பொய் சொன்னது. தான் அறிந்து செய்த பாவம் போக்கத் திருப்புவனம் வந்து ஆற்றின் கரையில் ஒதுங்கியிருந்து ஈசனை வணங்கிப் பாவ விமோசனம் பெற்றது. இவ்வாறு அஃறிணை உயிர்களின் வேண்டுதலுக்குக்கூட செவிசாய்த்து அவற்றின் பாவங்களையும் போக்க வல்லவர், அனைத்து உயிர்களின் மீதும் அன்புடையவர், வினை தீர்க்கும் பரிவு உடையவர் திருப்பூவணநாதர்.

இவ்வாறு திருப்பூவணப் புராணம், திருப்பூவணத்தின் பல்வேறு சிறப்புகளையும் கூறுகிறது.

*****

# 4. திருப்பூவணம் திருவிளையாடற் புராணம் (உரைச் சுருக்கம்)

திருவிளையாடற்புராணம் என்பது மதுரையில் வீற்றிருக்கும் சோமசுந்தரக் கடவுள் தன்னுடைய அடியவர்களுக்கு அருள்புரிந்த சிறப்புக்களை எடுத்துக் கூறுவது. திருவிளையாடற்புராணக் கதைகளை புலியூர் நம்பி என்பவரும், பரஞ்சோதி முனிவர் என்பவரும் பாடி யுள்ளனர்.

இப்பகுதியில் திருவிளையாடற் புராணங்களில் திருப்பூவணத் துடன் தொடர்புடைய பகுதிகள் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

திருவிளையாடற்புராணத்தில் 36 வது படலமாகிய இரசவாதம் செய்த படலத்திலும் 49 வது படலமாகிய திருவாலவாயான படலத்திலும் திருப்பூவணம் தொடர்பான செய்திகள் இடம் பெற்றுள்ளன.

## இரசவாதம் செய்த படலம்

பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தில் முப்பத்தாறாவது படலமாக இரசவாதஞ் செய்த படலம் உள்ளது. இதில் திருப்பூவணத்து இறைவன் திருமேனியைச் செய்திடத் தேவையான தங்கத்தை இரசவாதம் மூலமாகப் பெற்றிடும் முறையை, மதுரை ஈசன் சித்தர் வடிவில் நேரில் வந்து அருளியுள்ளார்.

### அன்னமிட்ட கை

முன்பு திருப்பூவணத்தில் பொன்னனையாள் என்ற சிவபக்தை இருந்தாள். இவள் சிறந்த நடன மாது. நாட்டிய இலக்கணப்படித் தினமும் இறைவன் முன் நடனமாடுவது இவளது வழக்கம். தனக்குக் கிடைக்கும் வருமானத்தை எல்லாம் அன்னதானத்திற்குச் செலவு செய்தாள். தினமும் சிவனடியார் பலரும் வந்து உணவருந்திச் செல்வதைக் கண்டு மகிழ்ந்தாள்.

*"திருத்தர் பூவண வாணரைச் சேவித்துச் சுத்த*
*நிருத்த மாடிவந் தடியரைப் பொருளென நினையுங்*
*கருத்த ளாயருச் சித்தவர் களிப்பவனி சுவையூண்*
*அருத்தி யெஞ்சிய தருந்துவா ளஃதவ ணியமம்"*[1]

அப்படியிருக்கையில் அவளுக்குத் திருப்பூவணம் கோயிலில் வைத்துப் பூசிப்பதற்கு இறைவனின் திருமேனியைத் தங்கத்தில் செய்து கொடுக்க வேண்டும் என்று பேராவல் பூவணநாதரின் அருளாசியினால் உண்டானது. ஆனால் கிடைக்கும் பொருள் எல்லாம் அன்னதானத் திற்கே செலவானது. தங்கத்திற்கு எங்கே போவது? **குலபூடண பாண்டியனுக்கு**

---

[1] *திருவிளையாடற் புராணம்* –இரசவாதம் செய்த படலம் பாடல் எண் 7

எடுக்க எடுக்கக் குறையாத பொற்கிழியை வழங்கிய மதுரை சோமசுந்தரக் கடவுளை மனதில் நினைந்து வேண்டினாள்.

## சித்தர் வடிவில் சிவபெருமான்

இந்த பக்தையின் விருப்பத்தை அறிந்த **மதுரை சோமசுந்தரப் பெருமான்**, அதனைப் பூர்த்தி செய்ய திருவுள்ளம்கொண்டு சித்தர் வடிவில் திருப்பூவணத்தில், பொன்னனையாள் வீட்டிற்கு எழுந்தருளினார். அன்னதானம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. தாதியர்கள் உணவு உண்ண வாருங்கள் எனச் சித்தரையும் அழைத்தனர். அதற்கு சித்தர் பெருமான், உங்களது தலைவியை இங்கே அழையுங்கள் எனக் கூறினார். பொன்னனையாள் வந்தாள், சித்தரது பாதங்களில் தனது தலை பதியுமாறு பணிந்து உணவு உண்ண அழைத்தாள். அதற்குச் சித்தர், உனது முகம் வாட்டத்துடன் காணப்படுகின்றதே! உனது மனக் கவலைதான் என்ன? என்று கேட்டார். பொன்னனையாளும், எங்கள் தலைவனாம் திருப்பூவணத்து இறைவனது திருவுருவினைச் செய்வதற்கு உள்ளத்தில் பெருவிருப்பம் கொண்டு மெழுகினால் கருக்கட்டி வைத்துள்ளேன். அதனைப் பொன்னினால் செய்து முடிக்கக் கருதிய எனக்கு நாள்தோறும் கையில் வரும் பொருள் முழுவதும் அடியார்களுக்கு அன்னம் இடுவதிலேயே செலவாகி விடுகின்றது. நான் என்ன செய்வேன்? என்று தனது கவலையை கூறினாள்.

அதற்குச் சித்தரும், நீ தானத்துள் சிறந்த அன்னதானத்தை நாள்தோறும் செய்து வருகின்றாய். உன் பெயருக்கு ஏற்றவாறு அழிவில்லாத இறைவனின் திருவுருவத்தைத் தங்கத்தினால் செய்யப் பெறுவாயாக என வாழ்த்தினார். பின்னர், அனைத்து உலோகப் பாத்திரங்களையும் கொண்டு வரச்செய்து, திருநீற்றினைத் தூவினார். இவற்றைத் தீயிலிட்டுக் காய்ச்சுங்கள் தங்கம் கிடைக்குமெனக் கூறி அருளினார். பொன்னனையாள் அச்சித்தர் சுவாமியை வணங்கி இன்றைய இரவு இங்கேயே தங்கித் திருவமுது செய்து இரசவாதம் செய்து முடித்தபின்னர் அதிகாலை எழுந்து செல்லலாம் என வேண்டினாள். மீனாட்சி அம்மையைப் பிரியாத சோமசுந்தரரே சித்தர் வடிவில் வந்துள்ளதால் அவர் "யாம் மதுரையில் விளங்கும் சித்தராவோம்" எனக் கூறி மறைந்தார். சித்தர் கூறிய சொற்களும், மறைந்தருளிய தன்மையையும் கண்ட பொன்னனையாள், வந்தவர் மதுரை வெள்ளியம்பலத்தில் கால்மாறி ஆடியருளும் அம்பலவாணரே எனக் கண்டு பக்தியால் நெகிழ்ந்து, தனது கவலையை இறைவனே நேரில் வந்து நீக்கினார் எனக் களிப்புற்றவளாகிச் சித்தர் கூறியபடியே செய்ய உலோகப் பாத்திரங்களைத் தீயிலிட்டுப் புடம் செய்தனள். ஆணவமலம் கெட்டு இறைவனின் திருவடியை அடைந்தவர் சிவமாக விளங்குதல் போல உலோகங்களின் களிம்பு நீங்கிப் பொன்னாக மாறின. அப்பொன்னைக் கொண்டு இறைவனுக்குத் திருவுருவம் வார்ப்பித்தாள்.

## அச்சோ! அழகிய பிரனோ இவன்

கிடைத்த தங்கத்தைக் கொண்டு வடிவே இல்லாத

இறைவனின் திருவுருவத்தைச் செய்திட்டார். இறைவனின் அழகான திருவுருவத்தைக் கண்டு **"அச்சோ! அழகிய பிரனோ இவன்"** என்று இறைவனின் கன்னத்தைக் கிள்ளி முத்தமிட்டாள். அதனால் இறைவனின் திருமேனியில் தழும்பு உண்டானது. இத் திருவுருவத்தை இன்றும் கோயிலில் தரிசித்திடலாம். பொன்னனையாள் இறைவனின் கன்னத்தைக் கிள்ளுவது போன்ற சிற்பம் கோயில் மகா மண்டபத்தில் உள்ள கல்தூணில் செதுக்கப்பட்டுள்ளது.



**பொன்னனையாள் இறைவனின்
கன்னத்தைக் கிள்ளி முத்தமிடுதல்**

*"நையுநுண் ணிடையி னாளந் நாயகன் கபோலத் திட்ட
கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு
வெய்யவெங் கதிர்கால் செம்பொன் மேனிவே றாகிநாலாம்
பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும்"*[1]

திருப்பூவணம் கோயில் இறைவனின் திருமேனியைச் செய்திட மதுரை ஈசனே நேரில் சித்தர் வடிவில் வந்து, **இரசவாதம்** செய்து தங்கம் தயாரித்துக் கொடுத்தது இத்திருத்தலத்தின் தனிச் சிறப்பாகும்.

இறைவனது திருவுள்ளத்தில், அடியவர்களில் அடிமையென்றும் ஆடிப்பிழைப்பவர் என்றும் பேதங்கள் ஏதும் இருப்பதில்லை. இறைவன் மனம் விரும்புவதெல்லாம் அன்பும், தொண்டும் பக்தியும் தான் என்பதை அறியுமாறு கூறப்பட்டுள்ளது. மேலும் சிவனடியார்களுக்கு அன்னதானம் செய்வதால் நமது பாவங்கள் அனைத்தும் ஒழிந்து நமக்கு இறைவன் நேரில் காட்சி தந்து அருளுவான் என்பதும் கூறப்பட்டுள்ளது.

---

[1] பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற்புராணம், இரசவாதஞ் செய்த படலம், பாடல் எண்-30

பொன்னனையாள் தங்கத்தினால் ஆன இறைவனது திருவடிவத்தைப் பிரதிட்டை செய்து தேர்த்திருவிழா முதலியன நடத்தி இனிது வாழ்ந்தாள். சிலகாலம் சென்ற பின்னர் வீடுபேறு அடைந்தாள்.



அழகிய நாயகர் (கன்னத்தில் நகக்குறியுடன் உள்ள இறைவன் திருமேனி)

மதுரையில் திருவிளையாடற் புராணக்கதைத் தொடர்பான விழாக்கள் இன்றும் நடைபெற்று வருகின்றன. அவ்வாறாக நடைபெறும்போது இரசவாதம் செய்த படலம் நடைபெறும் நாளில் சோமசுந்தரக் கடவுள் மதுரையிலிருந்து திருப்பூவணத்திற்கு எழுந்தருளி வந்தார். பல ஆண்டுகளுக்கு முன்னர் இவ்வாறு திருப்பூவணம் வந்த சோமசுந்தரக் கடவுளைக் குறிப்பிட்ட நேரத்தில் மீண்டும் மதுரை ஆலயத்திற்குக் கொண்டு சேர்ப்பது முடியாததாகிவிட்டது. இக்காரணத்தினால் அதற்கு அடுத்த ஆண்டுகளில் இத்திருவிளையாடற் தொடர்பான விழாவினை மதுரைக் கோயிலிலேயே வைத்து நடத்தி வருகின்றனர். இப்போது வாகன வசதிகளும், நவீன தொலைத்தொடர்பு வசதிகளும் கூடியுள்ளதால் முன்புபோல் இப்போது காலதாமதம் ஏற்பட வாய்ப்பில்லை. எனவே இரசவாதம் செய்த படலம் தொடர்பான திருவிழாவினை மீண்டும் திருப்பூவணத்தில் நடத்திடத் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ளப் பட்டு வருகின்றன.

## திருவாலவாயான படலம்

திருப்பூவணத்தில் கோட்டை என்ற பகுதியில் தான் திருக்கோயில் அமைந்துள்ளது. இங்கு தொன்மைக்காலங்களில் உயரமான மதில்களாலான கோட்டை இருந்திருக்கிறது. இதனைப் "பொன்மதில் சூழாலயஞ் சேர் பூவணத்தின் வளம் யாவர் புகலற்பாலார்" என்று

கந்தசாமிப்புலவர் பாடியுள்ளார். இக்கோட்டை தோன்றிய வரலாறு திருவிளையாடற்புராணத்தில் 49 வது படலமான திருவாலவாயான படலத்தில் விரிவாகக் கூறப்படுகிறது.

இப்படலத்தில் நான்மாடக் கூடலான மதுரையைத் திருவாலவாய் ஆக்கிய திருவிளையாடல் கூறப்பட்டுள்ளது. அதுலகீர்த்திப் பாண்டியனுக்கு மகனான கீர்த்தி பூசண பாண்டியன் மதுரையை ஆட்சி செய்யும்போது ஏழுகடல்களும் தமக்குக் காவலாக விளங்கும் கரையைக் கடந்து பொங்கி எழுந்தது, இதனால் எல்லா உலகங்களும் நீரில் மூழ்கின. ஆயினும் மீனாட்சியம்மை திருக்கோயிலின் இந்திரவிமானம், பொற்றாமரைக்குளம் மற்றும் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலில் தோன்றிய இடபமலை, பசுமலை, யானைமலை, நாகமலை, பன்றிமலை என்பன அழியாது விளங்கின.

ஈசன், பிரளயம் வற்றிய பின்னர் மீண்டும் உலகங்களும் உயிர்களும் உண்டாகுமாறு செய்தார். அப்போது சந்திரனது குலத்தில் பாண்டியர்களைத் தோற்றுவித்தார். அப் பாண்டியவம்சத்தில் வங்கிய சேகர பாண்டியன் தோன்றினான். ஒருசமயம், வங்கிய சேகர பாண்டிய மன்னன் "மதுரை மக்களெல்லாம் வசிக்கத்தக்க தகுதியுடையதாக நகரினை உண்டாக்க வேண்டுமென விருப்பமுற்று, மதுரை நகரின் பழைய எல்லைகளை வரையறுத்துத் தரவேண்டும்" என இறைவனிடம் வேண்டி நின்றான். மன்னனது விருப்பத்தைப் பூர்த்தி செய்யும் பொருட்டு வானில் இருந்து ஒரு விமானத்தில் இறங்கிய சோமசுந்தரக்கடவுள் ஒரு சித்தமூர்த்தியாகி அற அருட்கடலாகித் தோன்றினார். பாம்பினால் அரைஞாணும் கோவணமும் அணிந்திருந்தார். பிளவுடைய நாக்கையுடைய பாம்பினையும் குழையும் குண்டலமும், காலில் சதங்கை கோர்த்த கயிறும் கை வளையும் உடையவராகத் திகழ்ந்தார். அவ்வாறு வந்த சித்தமூர்த்தியானவர் தனது கையில் கட்டியிருந்த நஞ்சுடைய பாம்பை ஏவி நீ, இம் மன்னனுக்கு மதுரையின் எல்லைகளைக் காட்டு எனக் கட்டளையிட்டார்.

**பாம்பு எல்லையைக் காட்டுதல்** கண்டவர்களுக்கு அச்சத்தினை உண்டாக்கும் படியான அப்பாம்பும் விரைந்து சென்றது. கிழக்குத் திசையில் திருப்பூவணம் சென்று வாலை நீட்டிப் பெரிய அம்மாநகர்க்கு வலமாக நிலத்தில் படிந்து உடலை வளைத்து, வாலைத் தன் வாயில் வைத்துப் பெரிய வளையமாக்கி அதன் உட்புறப் பகுதியே மதுரை நகரின் பழைய எல்லையென பாண்டிய மன்னனுக்குக் காட்டியது. சித்தமூர்த்தியானவர் தம்முடைய திருக்கோயிலில் எழுந்தருளினார். பாண்டிய மன்னன், பாம்பு வளைத்து எல்லையை வரையறுத்துக் காட்டியபடி மதில் சுவர் உண்டாக்க எண்ணினான்.

**கோட்டை வாயில் அமைத்தல்** கிழக்கு எல்லைகாட்டிய இடத்தில் மன்னன் இவ் எல்லையின் வாயிலில் சக்கரவாள மலையை அடியோடு தோண்டி எடுத்து வைத்தது போன்று முகில் தவழும்படியான பெரிய மதிலை அமைத்தான். மதுரைக்குக் கிழக்கில் சோலைகள் சூழ்ந்த திருப்பூவண நகரானது எல்லையாக இருக்கும்படி அம்மதில்களை அமைத்தான். அந்த உயரமான, நீண்ட மதிலை ஆலவாய் மதில் என்று கூறுவர். நான்கு பெரிய வாயில்களுக்கும், தெற்கில் திருப்பரங்குன்றமும்,

வடக்கில் ஆனைமலையும், மேற்கில் திருவேடகமும், கிழக்கில் சோலைகள் சூழ்ந்த பூவண நகரம் எல்லைகளாக இருக்கும்படி அம்மதில்களை அமைத்தான். ஆலத்தை தனது வாயிற் கொண்ட அந்தப் பாம்பு சித்தர் வடிவில் தோன்றிய இறைவனின் பாதங்களை வணங்கி இனி இந்த நகரமானது தன்னுடைய பெயரால் "ஆலவாய்" என்று விளங்கவேண்டுமென விண்ணப்பஞ் செய்தது. சித்தராய்த் தோன்றிய இறைவனும் அவ்வாறே ஆகுக என்று வரமருளினார். இதனால் மதுரை மாநகரம் "திருவாலவாய்" என்ற பெயரில் விளங்குவதாயிற்று. பின்னர் அப்பாம்பானது இறைவனுடைய திருக்கரத்தில் கங்கணம் ஆனது. இவ்வாறு திருப்பூவணத்தில் மதுரைமாநகரக் கிழக்கு வாயிலாகக் கோட்டை அமைக்கப்பட்டது. அன்று கோட்டை இருந்த இடமே இன்று பெயரளவில் கோட்டை என்று அழைக்கப்படுகின்ற பகுதியாகும். இதனால் திருப்பூவணம் என்பது மதுரை நகர் புனர்நிர்மாணிக்கப்படுவதற்கு முன்பே சிறப்புடன் விளங்கி வந்துள்ளமை தெளிவாகிறது. இதனால் திருப்பூவணத்தின் பழைமை நன்கு விளங்கப்பெறுகிறது.

## திருவிளையாடற் பயகரமாலை

இரசவாதம் செய்த திருவிளையாடற் புராண வரலாறு, திருவிளையாடற்பயகர மாலையில்,

*"மணிதிகழ் மாடமலிமது ராபுரி வாழ்சித்தரேந்*
*துணிவுட னின்னன்பு கேட்டணைந் தோமென்று சொல்லிப் பின்ன*
*ரணிதிகழ் பூவணப் பொன்னனை யாளுக்கன் றாணிப் பொன்னைப்*
*பணிவிடைக் கீந்தசொக் கேபர தேசி பயகரனே"*[1]

என்று பாடப்பெற்றுள்ளது.

## கடம்பவன புராணம்

பொன்னனையாளுக்கு அருள் புரிந்த திருவிளையாடல் கடம்பவன புராணத்திலும்

*"பூவணத்திற் பொன்னனையாள் பதியிலாண்முன்*
*புனிதனுருக் கும்பிடு வாள் மெழுகு சாத்தி,*
*மேவணநற் பொருள்பெறாள் சொக்குண டென்று*
*மிகவருந்துங் காற்சித்த ராச்சென் றாண்டு,*
*மாவணவல் லிரும்புதரச் சொல்லித் தீயின்*
*மாட்டென்று பரிசனஞ்செய் தொளிந்தான் றந்து,*
*பாவணத்தாள் சொலிச் செய்நிறை யுருக்கண்டான்*
*மெய்ப் பத்தியெழில் கண்டள்ளி முத்தங் கொண்டாள்."*

என்று கூறப்பட்டுள்ளது.

இவ்வாறாக திருப்பூவணத் தலபுராணம், திருவிளையாடற் புராணம், திருவிளையாடற் பயகரமாலை, கடம்பவன புராணம், பெரியபுராணம் ஆகிய புராணங்களில் திருப்பூவணத்திருத் தலத்தின் பெருமைகள் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

*****

[1] திருவிளையாடற் பயகரமாலை, பாடல் எண் 45



# 4.திருமுறைகளில் திருப்பூவணம்

திருமுறைத் திரட்டுக்களான மூவர்-தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா போன்ற பக்தி இலக்கியங்களிலும், திருப்புகழிலும் திருப்பூவணத்து இறைவன் சிறப்பித்துப் பாடப் பெற்றுள்ளார்.

## தேவாரத்தில் திருப்பூவணம்

சைவத்தையும் தமிழையும் தழைக்கச் செய்தவர்கள் சமயகுரவர் நால்வராவர். இவர்கள் முறையே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் எனத் திருக்கோயில்களில் வரிசைப் படுத்தப்பட்டுள்ளனர். இவர்களது சிறப்புக்களையும், இவர்கள் திருப்பூவணநாதரை வணங்கிய வரலாற்றையும், இவர்களது பாடல்களில்

காணப்படும் திருப்பூவணத் திருத்தலத்தின் அழகையும், பூவணநாதரின் அருளையும் தொகுத்து விளக்கும் முயற்சி மேற்கொள்ளப்பெற்றுள்ளது.

இந் நால்வருள், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் மற்றும் சுந்தரர் ஆகிய மூவரும் இறைவனை வணங்கிப் பாடிய பாடல்கள் தேவாரத் திரட்டாக உள்ளன.

தேவாரத்தில் இடம் பெற்றுள்ள பாண்டிய நாட்டுத் திருத்தலங்கள் பதினான்கு ஆகும். தேவாரம் பாடிய சமயகுரவர்களும் வைகை ஆற்றின் வடகரையிலிருந்தே தென்கரையில் உள்ள திருப்பூவண நாதரை வணங்கி வழிபட்டுள்ளனர் என்று "புட்பவனநாதர் வண்ணம்" என்ற நூலில் கந்தசாமிப் புலவர் கூறுகிறார்.

*"செப்பு மூவர்சொல் தமிழ்த்துதிக்க விருப்பமொடுவந்து வையை*
*மணற்சிவ லிங்கமென மனத்தோணி முன்பு வடகரைக்கவர்*
*நின்று தமிழ்பாடு பொழுதேயிடப மாமுதுகு சாயும்வகையே*
*செய்துமுன் மூவர் தரிசிக்க மகிழ்நேசர்"*

–(புட்பவனநாதர் வண்ணம்)

## திருஞானசம்பந்தர்

சமயகுரவர்களுள் முதல்வராகிய இவ்வருளாளர் சோழநாட்டில் சீர்காழியில் சிவபாத இருதயருக்கு மகனாக அவதரித்தார். தமது மூன்றாவது வயதில் "தோடுடைய செவியன்" என்னும் திருப்பதிகம் பாடித் தமக்குப் பால் கொடுத்தருளிய அம்மையையும் அப்பனையும் சுட்டிக் காட்டினார். அதுமுதல் பல திருத்தலங்களுக்கும் சென்று பதிகம் பாடிப்பரவிப் பல அருட்செயல்கள் புரிந்து சைவத்தைத் தழைக்கச் செய்தார்.

திருஞானசம்பந்தர் திருப்புத்தூரில் ஈசனை வழிபட்டுத் திருப்பூவணத்து வைகையாற்றின் வடகரையை வந்தடைந்தார். ஆற்றினைக் கடக்க எத்தனித்த போது **ஆற்றின் மணல்களெல்லாம் சிவலிங்கங்களாகக் காட்சியளித்துள்ளன.**

எனவே திருஞானசம்பந்தர் ஆற்றின் அக்கரையிலிருந்தே மறுகரையில் உள்ள திருப்பூவணநாதரைப் பதிகம் பாடிப் பணிந்து வணங்கினார். திருஞானசம்பந்தருக்குக் காட்சியளிக்க விரும்பிய ஈசன் நந்தியை மறைக்காமல் இருக்கும்படிக் கட்டளையிட்டார். நந்தி வலதுபுறமாகச் சற்று சாய்ந்துகொள்ள ஞானசம்பந்தர் இறைவனைத் தரிசித்து வழிபட்டார். இதனால் திருப்பூவணம் கோயிலில் நந்தி மறைப்பதில்லை. வைகை ஆற்றின் தென்கரையில் இருந்து திருஞானசம்பந்தர் வழிபட்ட இடத்தை ஆடித்தபசு மண்டபம் என்று அழைக்கின்றனர். இப்போதும் இம்மண்டபத்திலிருந்து திருப்பூவணநாதரை வழிபடலாம், நந்தி மறைக்காது.



ஈசனை மறைக்காமல் வலதுபுறம் சாய்ந்திருக்கும்நந்திதேவர்

திருஞானசம்பந்தர் திருப்பூவணம் மீது இருபத்திரண்டு பாடல்கள் இயற்றியுள்ளார். இவர் இயற்றிய முதல் பதினொரு பாடல்களும் ஒன்றாம் திருமுறையில் தொகுக்கப் பட்டுள்ளன. இப்பாடல்கள் "தென்திருப்பூவணமே" என்று முடியுமாறு பாடப் பெற்றுள்ளன. அடுத்த பதினொரு பாடல்களும் மூன்றாம் திருமுறையில் தொகுக்கப் பட்டுள்ளன. இப்பதிகத்தில் உள்ள பாடல்களில் ஐந்து பாடல்கள் "அடிதொழ நன்மை யாகுமே" என்று முடியுமாறு பாடப் பெற்றுள்ளன.

ஒன்றாம் திருமுறையில் உள்ள முதல் பத்துப் பாடல்களில் "தென்திருப்பூவணமே" என்று முடியும்படிப் பாடப்பட்டுள்ளன. எனவே, இப்பாடல்கள் ஆற்றின் மறுகரையில் இருந்து பாடப் பெற்றிருக்க வேண்டும். மேலும் மூன்றாம் திருமுறையில் உள்ள பாடல்களில் "அடிதொழ நன்மை யாகுமே" என்றும் "அடிதொழப் பீடை இல்லையே" என்றும் பூவண நாதரின் திருவடியைப் பாடியுள் ளதால், இப்பாடல்கள் அனைத்தும் திருப்பூவணம் திருக்கோயிலில் பாடப் பெற்றிருக்கவேண்டும்.

*****

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

# 5. திருப்பூவணப் புராணம்

*****

## காப்பு

1 திகழ்வரைமின்னனைவதனச் செங்கமலந்தளையவிழ்க்குந்திவாகரஞ்செய்
மகிழொருவெண்மதி மருப்பின் வயிரகிம்புரி வயங்குமத்தயானை
நிகழுமடியார்க்கன்புநீடுமறம்பொருளின்பம் வீடுநல்கும்
புகழ்தருநற்கற்பகத்தின் பொற்பதத்தையெஞ்ஞான்றும் போற்றல் செய்வாம்

## நூற்பயன்

2 தந்திமுகன்றம்பியருணந்திதனக்குரைப்பநந்தி சநற்குமாரன்
வெந்துயரமறவெடுத்துவிரித்துரைப்பவவன் வேதவியாதற்கோதப்
புந்தியுணர்ந்தவன்சூதமுநிக்குரைத்த புட்பவனபுராணந்தன்னைச்
சிந்தைமகிழ்வுறப் படிப்போர் கேட்போர் நல்லிகபரங்கள் சேர்வரன்றே

## கடவுள் வாழ்த்து

## சபாபதி

வேறு

3 பூமேவுதிருமாலும் புண்டரிகத்தயனும்
புரந்தரனும் வானவரும் புங்கவரும் போற்றப்
பாமேவு பண்டருஞ் சொற்பாரிவுமையாள் காணப்படர்
தரு செம்பவள நறுஞ் சடை தாழமிலைச்சுந்
தேமேவு செழுங்கொன்றை தேன்றுளிப்ப விருள்
கால்சீக்குமினன் மதிநிலவெண்டிசாமுகஞ் சென்றெறிப்ப
மாமேவு மணிமன்றுணடம்புரியுமெங்கோன்
மன்னுபரிபுரமலர்த்தாள் சென்னிமிசைச் சேர்ப்பாம்

## திருப்பூவணநாதர்

வேறு

4 பூமாது மகிழ்துளபப்புயல்வண்ண நெடுமாலும்புகழ்வெண்கஞ்ச
நாமாதுநடனமிருநான்மறைதேர்நான்முகனுநயப்ப நன்னீர்த்
தேமாது செழும்பவளச் சடையிருப்பத்திங்களிருடரப்பச்சைல
மாமாது வடிவிலங்கமன்னிய பூவணத்தரன்றாள் சென்னிசேர்ப்பாம்

5 ஒருபொருளாயுயிர்க்குயிரா யுருவநான்கருவநான்குபயமொன்றா
யருள்வடிவாயகண்டிதமாயசஞ்சலமாயாதிநடுவந்தமின்றாய்க்
கருதரிதாய்ச் செல்கதியாய்க் காண்பரிதாய்க்காரணகாரியங்கடந்த
பொருவில்பரிபூரணமாம் பூவணத்தெம்புனிதனை யாம் போற்றுவாமே

6 மேவியபல்லுயிர்கட்கும் விண்ணவர்க்கு மிக்ககளைகண்ணாயெண்ணில்
பாவியவண்டங்களெலாம் படைத்தளித்துத்துடைத்தருளும்பதியாய் மேலாய்த்
தாவிலருட்சச்சிதாநந்தவடிவாய்த்திகழ்சங்கரனை நாளும்
பூவுலகும்பணிந்தேத்தும் பூவணநாயகனை நித்தம் போற்றல் செய்வாம்

7 புகலரியபுவனமெலாம் பொருந்துயிர்கட் கிரங்கியருள் பொழிந்துநாளும்
பகர்தருமிப்படர்புவியிற் பலரறியாவகை யொளித்தபரிசு தோன்ற
மகிழுயர்வானெழுபரிதிவானவன் வந்தருச்சித்து வணங்கியேத்துந்
திகழ்தருபூம் பொழில்புடைசூழ் தென்றிருப்பூவணந்தரன்றாள் சிந்தை
செய்வாம்

## அழகிய நாயகர்

8 திங்கடவழ்சடாமௌலித் தென்கூடற் சிவபெருமான் சித்தராகிப்
பங்கமுறு கருந்தாதுபசும்பொன்னாங்குளிகையருள்பான்மையாலே
பொங்கரவவகலல்குற் பொன்னனையாள் கண்டுவந்து போற்றுநீரா
ரங்கணுலகம்புகழுமழகிய நாயகர் பாதமகத்துள் வைப்பாம்

## மின்னனை

9 மன்னுமழைதவழ் குழலுமதி தருநன்முகோதயமுமலர்ப்பூங்கையும்
பன்னுதமிழ்ப்பால் சுரக்கும் பயோதரமுமறைகொழிக்கும் பவளவாயுந்
துன்னுமணிதிகழுடையுந்துடியிடையுந் துலங்குறுமைந் தொழிற் கும் வித்தாய்ப்
பொன்னனையானிடத்தமர்ந்த மின்னனையாள் பொற்பாதம் போற்றல் செய்வாம்

## விநாயகக்கடவுள்

10 இகபரந்தந்திடுமிந் நூற்கிலக்கணச் சொல்வழுவாமலிடையூறின்றிப்
பகரவருள் புரிந்தருளப்பனிவரை மின்னனையெனும் பார்ப்பதியைப்பாங்காற்
றிகழ்கலசமுலைமுகட்டிற் றென்றிருப்பூவணத்தரன்றான் சேர்ந்துநல்கும்
புகர்முகத்துக்கருணை மதம் பொழிகவுட்டுப் போதகத்தைப் போற்றுவாமே

## முருகக் கடவுள்

11 தலம்புகழ் வச்சிரத்தடக்கை யிந்திரன் றந்தருள் பாவைதஞ்னேர்வள்ளி
நலம்புகழ்செவ்வேளரற்கு ஞானவுபதேசமருண் ஞானமைந்தன்,
றுலங்குகிரவுஞ்சகிரி துளைபடவெஞ்சூரனுரங்கிழியவேலை
கலங்கவயில்வேல்விடுத்த கந்தனைப்பந்தனைய கற்றிக்கருத்துள் வைப்பாம்

## வயிரவக்கடவுள்

12 அரிபிரமரகந்தைகெட வண்டங்களுடைந்துமிகு மங்கிகொண்டே
யுரியபலவுலகமெலா மொழிந்திடு நாளவர்கடமதுடன் மேல்கொண்டு
குருதிவாய் கொப்பளிப்பக்கூரயின்மூவிலைச்சூலங்கொண்ட திண்டோட்
கருவரை நேர்தருவடுகக்கடவுளெமைக் காப்பக் கை கூப்புவாமே

## சரசுவதிதேவி

13 அரியசுவைதருமமுதவருவிபாய்ந்தொழுகருணமண்டலஞ்சேர்
விரிகதிர் வெண்மதிக்கற்றை வெண்கமலபீடிகைமேல் வீற்றிருந்து
பரவருநற்கலைகளெலாம் பவளவாய்திறந்துரைக்கும் பனுவலாட்டி
திருவடிகடமையெமதுசிரத்தினிலுங்கருத்தினிலுமிருத்துவாமே

## திருநந்திதேவர்

14 திகழ்மகுட சேகரமுஞ்சிறுபிறையுநுதற் கண்ணுஞ் செங்கைநான்கு
மகிழ்சுரிகைப்பிரம்பினுடன் மான்மழுவும்படைத்தந்திவண்ணநண்ணி
யிகபரநல்கெம்பெருமானிணையடிவீழ்ந்தயன் முதலோரெந்தஞான்றும்
புகழ்கயிலைமலைக்காவல்பூண்ட திருநந்திபதம்புந்தி கொள்வாம்

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

15 திருத்தோணிபுரத்தமர்ந்த சிவனருளானுமைகலசத்திருமுலைப்பால்
விருப்போடுமமுதுசெய்துமிகுசைவத்துறைவிளங்கவேதமோங்கக்
கருக்குழிவீழ்ந்தலறவமண்கையர்கடாங்கழுவேறக்கருதிமாற
னெருப்புறுவெப்பகன்றிடவெண்ணீறெடுத்துச் சாத்தினர் தாணினை தல் செய்வாம்

## திருநாவுக்கரசு நாயனார்

16 அருள்பெருகுந்திலகவதி யாரருளாலமண்சமயமகற்றியன்பாற்
கருதரியகற்புணையாற்கடனீந்திக் கருவேலைகடப்பான்போலு
மருவுபுகழ்வாய்மூரில் வைதிகசைவந்தழைப்ப வந்து தோன்றித்
திருவதிகைப் பதிவருஞ் செந்தமிழ் நாவுக்கரையர் பதஞ்சிந்தை செய்வாம்

## சுந்தரமூர்த்தி நாயனார்

17 காதலுடன் மிகுமின்பக் கடிமணப்பூம்பந்தரின் கீழ்க்கலைவல்லோர்முன்
மாதவன் போல் வந்திவனம் வழித்தொண்டனென்றிசைக்கும் வழக்கினாலே
பாதிமதிநுதற் பரவையிடையிருளிற் பங்கயப் பொற்பாதஞ்சேப்பச்
சோதிதனைத் தூதுகொண்ட சுந்தரன்றாள் சந்ததமுந் தொழுது வாழ்வாம்

## மாணிக்கவாசக சுவாமிகள்

18 மருவார்கடொழுகழற்றென் மதுரைவருதமிழ்வழுதி மன்னர் கோமான்
பொருவாசிகொணர்கெனச் செம்பொன் கொடுத்துவிடுத்திடவச் செம்பொன்னாலே
பெருவாழ்வை யுறவிரைந்து பெருந்துறையின் மேவியதம்பிரானைக் கொண்ட
திருவாதவூரடிகளிரு பாதகமலங்கள் சென்னிவைப்பாம்

## மெய்கண்டதேவர்

19 பொய்கண்டவெவையுமெனப் பொல்லாத கணபதிதான்புகன்றுபின்னர்
மைகண்டத்தடக்குமரன் வழங்குசிவஞானநூல்வகுத்துக் காட்டக்
கைகண்டபின்னருளே கண்ணாகக் கண்ட பெண்ணைப் புனல்சூழ்வெண்ணை
மெய்கண்ட தேவனடிகை கொண்டு கூப்பிமுடிமீது சேர்ப்பாம்

## திருத்தொண்டர்

20 பார்மேவுசைவதப் பாலோராய்ப்பரசமய நிராகரித்துப்
பேர்மேவு பெருமைதரும் பெறற்கரிய பேரின்பமுத்தி பெற்றோர்
போர்மேவுமழுவேந்தும் பூவணத்தெம் புண்ணியன் பொற்கோயினண்ணுஞ்
சீர்மேவு திருத்தொண்டர் சேவடிகடினம் பணிந்து சிந்தை செய்வாம்

கடவுள் வாழ்த்து முற்றியது
ஆகச் செய்யுள் 20

*****

# அவையடக்கம்

வேறு

21 அற்றமில்கலையினுண்ணறிவின் மேலையோர்
பொற்றிருப்பூவணப் புராணமாண்புற
முற்பகர்வடகலை மொழிபெயர்த்துநீ
நற்றமிழான் முறைநவிற்றுகென்னவே

22 பொங்கு வெங்கதிரவன் பூசையாற்றிய
சங்கரன்கதை சொலத்தமிய னெண்ணுத
றுங்கமாமேருவைச் சுமப்பனின்றெனப்
பங்குடையான் கரம்பற்றல் போலுமால்

23 குற்றமிலிரதநற்குளிகை காக்கலும்
பொற்புறத்தாமிரம்புகரில் பைம்பொனா
முற்றவென்பாடலுமுணர்வின்மேதகு
நற்றமிழ் வாணர்முன்னவையுந்தீருமால்

வேறு

24 விடையுகைத்திருமின்னனைபாகன்மேற்
றொடைநிரம்புசொல்சூடத் தொடங்கல்யா
னடையிடற்கருநல்லெழின்மைந்தர்சூழ்
கடல்கடக்கக்கருதுவதொக்குமால்

25 திருத்தகும் பொழிற்றென்றிருப்பூவண
நிருத்தமாடியநின்மலன் காதையை
யருத்தியாலுலகம் புகழ்காரிகை
விருத்தயாப்பினெடுத்து விளம்புகேன்

அவையடக்க முற்றியது
ஆகச் செய்யுள் 25

*****

## நைமிசாரணியச் சருக்கம்

26 பொன்னலந்திகழ்ந்தோங்கிய பூவணக்காதை
தன்னை நான்மறைச்சவுநகாதியமுநிகணங்க
டுன்னுமாதவச் சூதனை வினவிய சூழ
னன்னிலம் புகழ்நைமிசவணிசில நவில்வாம்

27 காரின்மல்கியகந்தரந்தந்த காட்சியினாற்
சீரிணங்கிய சென்னியிற் றிங்கண் மேவுதலா
லேரிணங்கிய மாதவர்க்கின் பமீகையினா
னாரிபாகனை நிகர்ப்பது நைமிசாரணியம்

28 சீரிணங்குறச் சேணிவந்தோங்கலாற் செய்ய
வாரிணங்குநன்மலர்க் கொடிமருவு கண்ணுறலா
லேரிணங்கிய வெண்ணரும்புட் கணண்ணுதலா
னாரணன்றனை யொத்ததுநைமிசாரணியம்

29 நான்முகங்களுநான்மறைநவிற்றுதலானு
நான்முகந்தருநாயகி நண்ணுதலானு
நான்முகங்களுநன்குறப்படைத்திடலானு
நான்முகன்றனை யொத்தது நைமிசாரணியம்

30 பன்னுநான்மறைபயில்பவர் பன்னசாலைகளு
மன்னுகின்ற வட்டாங்கயோகத்தர்வாழிடமு
மின்னருட்கணுற்றிரண்டற நிற்பவரிடமு
நன்னலம்பெற நிறைந்தது நைமிசாரணியம்

31 வண்ணமேவியபூந்தவிசேந்தியவள்ள
லெண்ணிலாதவர்பிறப்புடனிறப்பெலாந்தங்கள்
கண்ணினாற்கண்டுகழிந்தபல்காலங்கள் கடந்தோர்
நண்ணிமாதவம்பயில்வது நைமிசாரணியம்

32 காலனாணையுங்காமனதாணையுங்கஞ்ச
மேலயன்றிருவாணையுமேகவண்ணஞ்சேர்
கோலமாயவன் குலவிய வாணையுமாக
நாலுநண்ணரிதாயது நைமிசாரணியம்

33 பிரமசர்யம் வானப்பிரத்தம் மெழில் பிறங்கு
மரிய நான்மறையறைந்திடுமதிவணாச்சிரமம்
பரவுகின்றனயாவையும் பற்றறத்துறந்த
லுரியவாச்சிரமங்கணான் குடையதவ்வனமே

34 புகழ்வினீடுவெண்பூதிசாதனம் புனைமெய்யர்
திகழ்செழுங்கதிரெறித்திடு செஞ்சடாமகுடர்
மகிழ்சிறந்த நல்வற்கலையுடையினர்மாறா
திகழ்தலின்றியே நாடொறுமிருந்தவமிழைப்போர்

35 எண்ணருந்திறலோர் புகழிருபிறப்பாளர்
நண்ணுமுப்பொழுதருச்சனைபுரியுநான்மறையோ
ரண்ணலுண்மகிழைவகைவேள்விகளமைப்போர்
கண்ணுதற்கருமங்கமாறுங்கரைகண்டோர்

36 ஒருமைசேர்ந்த மெய்யுணர்வினரிருவினையொழிந்தோ
ரருமைமும்மலர்நாற்கரணந்தனையயர்த்தோர்
வெருவுமைம்புலப்பகைஞரை வென்றருள்வீரர்
கருதுறாதவெண்ணெண்பெருங்கலைக்கடல்கடந்தோர்

37 சூழ்ந்தவல்வினைத்தொடர்படுகின்ற தொல்பவத்தைப்
போழ்ந்தஞானவாட்படையினர் புரிமுந்நூன்மார்பர்
தாழ்ந்தநல்லுறிதாங்குகுண்டிகைத் தடக்கையர்
வாழ்ந்தவைதிகசைவர்வாழ்நைமிசவனமே

38 பகைகடீர்ந்திடும் பன்னகவயிரியும்பாம்பு
மகிழ்வினோங்கிடும் வாலுளையரியொடுமதமா
மிகுவிலங்கினம் விரும்பியோர் துறையுணீரருந்தி
யிகலதின்றியேயின்புறமருவுமெஞ்ஞான்றும்

வேறு

39 காமாதிகள் விட்டேற்குநர் தண்டோரொருசாரார்
பூமாலை களாற் பூசனை புரிவோரொருசாரா
ரோமாதிகளுக்காவனகொணர்வோரொருசாரார்
பாமாண்புறவே பாடுநராடுநரொருசாரார்

40 யாகாதிகடருமங்களிழைப்போரொரு சாரார்
யோகாதிகள் கருமங்களுழப் போரொரு சாரார்
சாகாமூலபலந்தருகிற்பவரொருசாரார்
மாகாமந்தனை மாற்றிமகிழ்ந்தோரொரு சாரார்

41 வேதாகமநூன்மேதகவோதுநரொருசாரா
ராதாரத்தினடுக்கையறிந்தோரொருசாரார்
நாதாந்தந்தனை நாடிநவிற்றுநரொருசாரா
ரோதாவுண்மைப் பொருளையுணர்ந்தோரொருசாரார்

வேறு

42 உந்தியாரழன்மூளநற்சுழுமுனைதிறந்ததினூடுபோய்
விந்துவாரமுதம்பொழிந்து மெய்விழிசெழுந்துளிவீசவே
யந்தமாதியிலாத செந்தழலண்ட கோளகை மண்டவே
நந்தஞான சுகோதயந்தனை நண்ணுகின்றனர் சிலரரோ

43 தீதினற்றிரி புண்டரத்தொடு செய்ய கண்டிகை மெய்யினர்
காதல்கூர் தருகா மனம் பதுகனவினுந் தெறல் காண்கிலா
ரோதுநற்சுகதுக்கம் வெம்பகையுறவு நன்றொடு தீதிலா
ராதியந்தமிலாதவன்றனையன் பினான் மிக நம்பினோர்

44 நாக்கினான் மறைபோற்று வோரிவர் நண்ணுசாலை கண்முன்னரே
மூக்கினாற் பிணி முகமெடுத்தென முள்ளெயிற்றரவள்ளவே
யாக்குநற்பகுவாய்கள் கக்கிடு மலகில் செம்மணியிலகறான்
றூக்கு சோதி விளக்கினுக்கிணை சொல்லலாமலதில்லையே

45 நித்தமாதவரைத்தினந்தொறு நீங்கிடாதருளோங்கநற்
பத்தியான்மிகு பன்னகத் தொடு பல்பொறிப்புலி சேர்தறான்
சித்திமுத்திகள் சேரநல்குறுதில்லையம்பலவெல்லைசார்ந்
தத்தனாடலருட்கணாடிடவிருதபோதனரமர்தல் போன்ம்

46 தூய மாதவமே பயின்றிடு சுத்தர் நித்தர் சுகோதயர்
நேயநீடநு போகமல்லது நெஞ்சின் வேறு நினைக்கிலார்
மேயநைமிசகானகந்தனின் மேன்மையாவர்விளம்புவா
ராயிரம் பகுவாயனந்தனுநாவிசைத்திடலாவதோ

நைமிசாரணியச் சருக்க முற்றியது
ஆகச்செய்யுள் 46

*****

## சவுநகர்சூதரை வினவியசருக்கம்

47 நவில்கின்ற நைமிசாராணியந்தன்னி னற்றவத்தின் மிக்க சிவஞானவேட்கைச்
சவுநகாதியமுனிவர் கணங்களானோர்தர்க்கமோடுத்தரங்கள் சாற்றித் தாபித்
துவமனிலாமாதவன்றன் மைந்தன் மைந்தரொருமையுடனிருண் மலந்தீர்ந்திருந்தங்கோர்நாட்
சிவனடியை யடையும் வகை தெரிக்குங் காதை சேர்ந்தவர் கடாந்தம் மிற்றேருங்காலை

வேறு

48 பின்னியபின்னல் பிறங்கவிரித்தோன்
மன்னியநல்லரைவற்கலையாத்தோ
னன்னியமத்தொழினாளுமிழைப்போன்
பன்னியதீவினை பற்றறவிட்டோன்

49 பாயதலம்பெறுபல்லுயிருக்குந்
தாயினுமன்புதழைத்திடுமேலோ
னேயமிகுந்தவநீங்கலிலாதோன்
றூயவெணீறு துதைந்திடுமெய்யோன்

50 புண்டரமீது பொருந்திவிளங்குங்
கண்டிகைகொண்டகவின்றருமார்ப
னெண்டருமெண்கலையாவுமுணர்ந்தோன்
பண்டருவேதபராயணர்சூழல்

51 அங்கணிலம்புகழுங்கனுதற்சேர்
சங்கரனன் புதழைத்துறன்மானச்
செங்கைகடாங்கிய சென்னியன்மன்னுந்
துங்கமிகுந்தவசூதனடைந்தான்

52 கட்டமும்வெம்பிணியுங்களைகட்ட
சிட்டர்கடாமெதிர்செங்கைகுவித்துச்
சட்டெனவாயிடைசார்ந்திடநாப்ப
ணிட்டதொராதனமேறியிருந்தான்

53 இருந்தருள்காலையிருந்தவவாணர்
சுரந்தருண்மாதவசூதனை நோக்காப்
பொருந்தியகை நனிகூப்பினர் போற்றித்
திருந்துரையின்னன செப்புதலுற்றார்

54 நாடியகாலையினானில மெங்குந்
தேடியபூடடிசேர்ந்ததையொக்குங்
கேடிலருந்தவகேட்குதியெம்பா
னீடருளாலிவணீவரலாலே

55 மாதவமேபுரிமாதவனான
மேதகுவேதவியாதனவன்பா
லாதரவிற் கொளருங்கலையாவு
மோதியுணர்ந்தவுனக்கிணையுண்டோ

56 உன்னையலாதினியோர் கதியின்றா
னின்னருளைப் பெற நேர்ந்தவன்யானென்
றென்னை முனிட்டவிருந்தவர் முன்னென்
புன்மொழி நன்மை பொருந்தவுணர்ந்தே

57 முன்பொர்தினந்தனின் மூதறிவாலே
மன்பயில்புட்பவனத்தது காதை
மின்பயில்கின்ற சுவேதவனத்தி
னன்கதை நாப்பணவின்றிருகாலை

58 அப்பரிசங்கணறைந்தசுருக்க
மெய்ப்படநாடிவிளங்கவிரித்துத்
திப்பியமான செழுங்கதை மேன்மை
யிப்பரிசென்னவியம்பிட வேண்டும்

59 என்றிவைசவுநகனேத்தியிசைப்ப
நன்றிதுநன்றிதெனாநனிநாடிப்
பொன்றிகழ்மாமுனிபுங்கவவென்னாத்
துன்றியவன் பொடுசூதனுரைப்பான்

வேறு

60 கந்தநறும்பொகுட்டுடைவெண் கதிர்நிலாக்கற்றைக் கமலமலர்ப்பீடிகை சேர்கலைமடந்தைதனையு
முந்தமறைநான்கினொடு புராண முவாறுமுழுதுலகமிறைஞ்சவன்பின் மொழிந்த வியாதனையுஞ்
சுந்தரநற்கவுட்டுமதசலமருவி தூங்குந் தூங்கியகைத் தூங்கன்முகபடாந்துலங்குமொற்றைத்
தந்தமுறுமடிகடிகுவடிகளையும் போற்றிச் சந்ததமு மருள் புரிவான்சிந்தனை தான் செய்தே

61 வேதமொடாறங்கமாகமபுராணங்கள் மேதகுநற்கலையாவுமோதியுணர்ந்தவனி
யாதலதற்கையமிலையாயினுமென்றன்னை யவையகத்துநன்குணர்ந்தோனாக்குதற்குநினைந்தே
யோதுகவிக்காதைதனை யெனவுரைத்தியதனாலுவந்துரைப்பன் சவுநகமாமுனிவரனேயென்னாச்
சூதனருள்வியாதனுரைத்திட்ட வனமோர்ந்து தொல்கயிலைவளஞ்சிறிது சொல்லலுற்றான்மாதோ

சவுநகர் சூதரை வினவியசருக்க முற்றியது
ஆகச் செய்யுள் 61

*****

## திருக்கைலாயச் சருக்கம்

62 பங்கயன்முகுந்தன் பாகசாதனனே பரவருமிருடிகளுரகர்
புங்கவர்யாரும்புடைபரந்தீண்டிப் போற்றியே நாத்தழும்பேறத்
தங்குறையிரந்து தலைத்தலை சார்ந்து சந்ததமிடைதரத் தயங்குந்
திங்களங்கண்ணி மிலைச்சியசடிலசேகரன் றிருக்கயிலாயம்

63 மன்னியசென்னிவானுறநிமிர்ந்துமருவிய கொடுமுடிபலவா
யுன்னத நூறாயிரமியோசனை யாயுரைக்கு மவ்வளவைகீழுடைத்தாய்ப்
பன்னருமகலப் பான்மையுமஃதாயப்பயின்று சூழ்படரிருவிசும்பிற்
றுன்னுபொன்மணிகள் சுடர்விடநிவக்குந் தொல்கயிலாயநீள்சிலம்பு

64 மகரகேதனனைமருவு போனகமாய்வாரியுண்கண்ணுதற்பெருமான்
றகுமுலகனைத் துஞ்சார்ந்துயிர்க்குயிராந்தம்பிரானானவெம்பிரான்சேர்
ககனகூடத்தின் முகட்டினுஞ்சென்று கனகமாமணிவெயில்பரப்புஞ்
சிகரகோபுரங்கள் சேண்டிகழ்ந்தோங்குந் திருக்கைலாயநீள்பொருப்பு

65 பிரமன்மான்முதலோர் பெயர்ந்திடவெழுந்தபிரளயத்தினும்புடைபெயரா
துரியவானந்த வுருவமாயோங்குமுண்மையாயசலமாயொன்றாக்
கருதருமுயிர்க்குக்களை கணாய்க் கதியாங்கண்ணுதலண்ணலெஞ்ஞான்றும்
பரிவின்வீற்றிருக்கும் பதியதாய் மேலாய்ப் பயில்வதுகயிலையஞ்சயிலம்

66 வெங்கதிரவனுமீதுநண்ணுறலால் வெண்சுடராயினனென்றா
லங்கண்மாஞாலத்தாருயிர்புனிதமாவதையறைதல்வேண்டின்றே
துங்கமேவியநற்சவுநகமுனிவசொல்லுதிநன்குநீதுணிவாற்
செங்கண்மால்விடையான்றிருவருளுருவாய்த்திகழ்வதுகயிலையாமெனவே

67 அன்றியும் வெய்யோனனைதருகாலையலர்தருமருணமண்டலம்போய்த்
துன்றியகிரணமேற்படவந்தச்சுவேதவண்ணந்துதைந்ததனா
லொன்றியவுணர்வினும்பர்தாங்கீழ்வந்து ற்றிடினவ்வியல்பாவ
ரென்றஃதுணர்த்திநின்றதும்போலாமெழிறிகழ்கயிலை மால்வரையே

68 சந்திரன்றிகழுஞ்சடிலசேகரமுந்தடக்கை கணான்குமரன் மழுவுஞ்
சுந்தரப்பிரம்புஞ்சுரிகையுநுதலிற் றுலங்கியகண்ணும் வெண்ணீறு
மந்தவான் மடவார்கண்டமங்கலநாணறாது றவாலமுண்டிருண்ட
கந்தரனருளுநந்தியம்பெருமான் கைக்கொடு காப்பதக்கயிலை

வேறு

69 அடிமுடியறிதலின்றாகிநிற்றலான்
முடிவறமுகிழ்மதிமுடியிற் சேர்தலாற்
படர்புகழ்பரப்பியபால் வெண்ணீறணி
கடவுளை நிகர்ப்பது கயிலை மால்வரை

70 அரியயனமரர்களடிவந்தேத்தலா
லிருமையுமருளியே யென்றுமேவலாற்
பரனுமையொடுகலந்தருளும் பான்மையாற்
கரிமுகனனையது கயிலைமால்வரை

71 சுந்தரக்கண்ணுதறுலங்கிச் சேர்தலால்
வந்திடுஞ்சூருரமாற்றமேவலாற்
சந்ததங்குன்றமாய்த்தயங்குகாட்சியாற்
கந்தவேளனையதுகயிலைமால்வரை

72 உரியவானுறவளர்ந்தோங்கிநிற்றலால்
வரியளிமுரன்றபூமடந்தைமேவலா
லரியநான்மறைவிரித்தருளுநீர்மையாற்
கரியமாலனையது கயிலைமால்வரை

73 தோற்றியே நிற்றலாற் சுருதிபோற்றலா
னாற்றிசைமுகங்களுநண்ணுமாண்பினாற்
போற்றுநற்கலைமகள்பொருந்தலாற் புழற்
காற்சரோருகனிகர்கயிலைமால்வரை

74 தினமிகு செல்வங்கடிளைக்குஞ் செய்கையால்
வனமுறுநெடியமான்மருவுமாண்பினாற்
றனைநிகர்தாமரைத்தாளின்மன்னுகோ
கனதையைநிகர்ப்பது கயிலை மால்வரை

75 அலரும்வெண்டாமரையணைந்தபொற்பினாற்
பலகலையாகமம் பன்னும் பான்மையா
னலமிகுநான்முகனண்ணலாற்செழுங்
கலைமகளனையதுகயிலை மால்வரை

76 எண்டிசாமுகங்களுமிருளைத்தள்ளியே
பண்புறுபாலொளிபரப்புகின்றது
கண்களாலளப்பருங்கவின் கொண்டோங்கிய
வெண்படாம்போர்த்ததாம் வெள்ளியங்கிரி

77 எள்ளதரிதாயபேரின்பமீந்திடுங்
கள்ளவிழ்கடுக்கைநற்கண்ணியஞ்சடை
வள்ளனாடோறுமேல்வதிந்துதோன்றலால்
வெள்ளைமால்விடைநிகர்வெள்ளியங்கிரி

78 நாற்றிசையெங்கணுநன்னிலாத்திர
டோற்றமோடெழுந்துவான்றுருவச்செல்வது
பாற்கடறிரண்டுருப்படைத்துவிண்டொட
மேற்கிளர்ந்தனையது வெள்ளியங்கிரி

79 ஒழுகிய நிலாவுலகுந்தியங்கியாற்
சுழுமுனை திறந்துநற்றுவாதசாந்தத்திற்
பொழிதருமமுதமேபொங்கியெங்கணும்
விழுவதுபோன்றது வெள்ளியங்கிரி

80 நிரந்தரமெங்கணு நீடுபேரொளி
கரந்துயிர்க்குயிருமாய்க்கலந்து மேவிய
பரஞ்சுடர் திருவுருக் கொண்டபண்புமேல்
விரிந்தது போன்றது வெள்ளியங்கிரி

81 எண்ணருமகலிருள்விசும்பினெங்கணுந்
தண்ணருடவழநன்னிலாத்தழைப்பது
கண்ணருமமுதத்தைக் ககனங்கான்றிடும்
வெண்ணிலாத்தாரை நேர் வெள்ளியங்கிரி

82 திக்குடன் விதிக்கெனுந்திசைகளெட்டினு
மிக்குயர்முடியினும் வேறிடத்தினுந்
தக்கநற்கழைசொரிதரளமின்னுதன்
மிக்கதாரகைநிகர்வெள்ளியங்கிரி

83 கண்ணுதலண்ணலைக்காலைமாலையி
னண்ணியே வானவர் நாளும் போற்றிடப்
பண்ணு கண்ணேணி போற்பாரினின்று நீள்
விண்ணிலவுதலுறும் வெள்ளியங்கிரி

84 துந்துபியோசையுந்தூயநான்மறை
நந்தியதும்புருநாரதாதியர்
கந்தருவத்தவர்கானவோசையும்
விந்துநாதத்தருமிக்கவோசையும்

85 எண்ணரிதாயபாரிடங்களோசையுங்
கண்ணருநந்திமுன்கணங்களோசையும்
விண்ணவரோசையும் வேதவோசையும்
பண்ணவரோசையும் பயிலுமெங்கணும்

86 காமரமருச்சுநங்காகதுண்டநீள்
பூமிகுகுங்குமம் புன்னைவன்னிபொற்
றேமருவேலநற்றிகிரிகூவிள
மாமலகங்கடம்பாரமாதுளம்

87 வண்பலவரம்பைமாவகுளந்தாடிமம்
பிண்டிமந்தாரமாம்பிரநற்பிப்பிலஞ்
சண்பகந்தமரநீள்சாலஞ்சந்தனம்
விண்டிகழ்பராரைமாமரங்கண்மேவுமால்

88 பொற்புறுமணிமுடிப்புரந்தராதியர்
செற்றலுநந்திதன்செங்கை தாங்கிய
நற்பிரம்படிபடநண்ணுமாரங்க
ளற்றுதிர்குப்பைகளளப்பிலாதன

89 விரவியமாதவர் வேள்வித்தூமமுஞ்
சுரர்மடவார்கடஞ்சுரியற் சூட்டிய
பொருவருகற்பகப்பூவுமேவிய
பரிமளந்திசைதொறும் பரந்துநாறுமால்

90 காழிருங்கூந்தல் சேர் கௌரிநாயகன்
வாழிருங்கயிலைமால்வரையை மானவே
சூழிருங்கடற்புவிதுதிக்கநீண்டிடு
மேழிருபுவனத்து மெங்குமில்லையே

வேறு

91 அந்தநன்கயிலைதன்னிலன் புள்ளவரியயனமரர்களவுணர்
சந்திராதித்தர் கின்னரர்வசுக்கள் சாரணரெண்டிசாமுகத்தர்
கந்தருவத்தர் காரிமாகாளிகருடர் வித்தியாதரர்சித்தர்
முந்துறுநிகமாகமமுணர்முனிவர்முறை முறை தொழுதுநின்றேத்த

வேறு

92 சென்னிவான்றொடுசெம்பொற்கடிமதி
றுன்னுமோர் செஞ்சுடர் மணிமண்டபந்
தன்னனல்லரியாசனத்திற்றக
மின்னுவேற்கந்தன் வீற்றிருந்தானரோ

93 அந்தவேலையிலாறுமுகங்கொளுங்
கந்தவேளிருகஞ்சமலர்ப்பதம்
வந்தியாநன்மறைமுறைவாழ்த்தியே
நந்திகேசனவிலுதன்மேயினான்

94 ஈறுறாதநலெண்ணில்சிவாலயங்
கூறுகின்றதிற்கோதிலறம்பொருள்
வீறுசேரின்பவீடருளுந்தல
மாறுமாமுகத்தண்ணலருளென்றான்

95 என்றகாலையெழின்மிகுகந்தவே
ணன்றுநன்றென நந்தியை நோக்குறா
வொன்றுகாதலினுண்மைப் பொருட்கதை
மன்றகேளெனவாய் மலர்ந்தானரோ

96 கண்ணுதல் பெறவந்தருள் கந்தவேள்
விண்ணவர்க்குவிடை கொடுத்தேகியே
யெண்ணுதற்கருமின்பத்தலத்திருந்
தண்ணறன்னையகத்தினிருத்தியே

97 தனைநிகர்க்குமத்தாணுவருளினாற்
புனிதமேவிய பூவணமான்மிய
நினையுமெந்தைநிகழ்த்த நிகழ்த்துகே
னனிமகிழ்ந்தருணந்தியந்தேவுகேள்

98 என்றுகந்தனிசைத்திடவந்நந்தி
தன்றனிச் சொல்சநற்குமரன் கொடே
வென்றிவேதவியாதற்குரைக்கவஃ
தன்றெனக்கவன் சொன்னதறைகுவேன்

99 ஈதுமுன்னரிசைந்தசோபானமென்
றோதுநீதிச்சவுநகற்கோதியே
காதலாலக்கதையைவிரித்துயர்
சூதமாமுனிசொல்லத் தொடங்கினான்

திருக்கைலாயச்சருக்க முற்றியது

ஆகச்செய்யுள் 99

*****

## ஆற்றுச்சருக்கம்

100 முன்னவனருளினாலேமுக்குறும்போட்டிமேலாந்
தன்னிகரருந்தவத்துச் சவுநகமுனிவகேண்மோ
பன்னுசெந்தமிழ்சேர்சங்கப்பாண்டிநன்னாடுசூழ்ந்த
தொன்மைசால் பொருநைவைகை வளஞ்சில தொகுத்துரைப்பாம்

101 பன்னிறங்களினுஞ் சென்றுபடிகந்தான்பற்றுகின்ற
வந்நிலைபோல்வெண்மேகமார்கலிபடிந்தருந்தித்
துன்னியெம்மருங்குமார்த்துச் சூன்முதிர்ந்திடித்துமின்னி
மைந்நிறங்கவர்ந்து கொண்டுவானகத்தெழுந்ததன்றே

102 இகம்பரமிரண்டுஞ் சேரவெடுத்ததநூற்கடன்மடுத்திட்
டகந்தெளிந்துணர்ந்த மேலாமறிவுடைக்குரவரானோர்
பகர்ந்தமாணாக்கர் தம்பாற் பரிந்து நல்லருந்தமிழ்ச் சொற்
புகன்ற போற்பொதியவெற்பிற் பொழிந்தனபுனலின்றாரை

103 மருவியவரசன்றன் பால்வண்கொடைக்கடலையுண்டு
பரவருமகிழ்விற்றத்தம்பதியிடைப்புலமைமிக்கோர்
விரைவொடுபடர்வதென்னமிகுவனங்கவர்ந்துவிண்டோய்
தருமுயர்மலயவெற்பிற்றண்முகில் பொழிந்தமாதோ

104 கிளர்தருபொதிய வெற்பிற் கேழுறு பொருநை நீத்தந்
தளையவிழ்ந்துயர்பூங்கொம்பர்த்தருக்குலஞ் சாய்த்துருட்டி
யளவில் பல்கால் கடோறுமடைத்தநெட்டணையுடைத்து
நெளிதிரைக்கடலைநாடி நெறிக் கொடு சென்றதன்றே

105 பொருவரும்பொருநைமன்னும் புனிதநீர்குடையுமாதர்
குருமணிக்கலசக் கொங்கைக்குங்குமமளைந்து சேறாங்
கருதுநல்லறிவின் மேலோர் பேதையர்க்கலந்தகாலை
மருவுதன்னிலை கலங்கும் வண்ணமே போலமாதோ

106 மகிழ்சிறந்தியாவர்க்கேனும் வழங்கிடும் வள்ளலேபோன்
மிகுநலமணியும் பொன்னும் வீசுந் தெண்டிரைக்கரத்தா
லகமலர்ந்தங்கண் ஞாலத்தாருயிர்க்கருள வேண்டிப்
புகழ்தருபொருநைநீத்தம் பொருந்து கால் பரந்ததன்றே

107 கொலைகெழுகூர் வேற்றாங்குங் குமரவேள் பதமேல்கொண்டு
கலைவரு கன்னிதாள்கை கூப்பி மால் கழலிறைஞ்சி
வலனைவென்றவன்றாள் கண்டு வருணனை வணங்கி நீத்தம்
பலசமயத்துளோரும் பரவுற வொழுகுமன்றே

108 பருப்பதந்தன்னினோங்கும் பராரைமாமரஞ் சாய்த்தீர்த்துப்
பொருக்கெனப் பொருநைசெல்லப் பொந்தில் வாழ்புட்கள் போத
லுரைக்கரும்பகைஞர் வெம்போர்க்குடைந்திடுமரசனோடு
தருக்கறச் சூழ்ந்து நீங்காத்தானையை மானுமன்றே

109 வான்முகங்கிழிய வோங்குமலய நீர்ப்பொருநைமண்மேற்
றான்முகங்கொடுநடந்துதலைத்தலைமயங்கிமள்ளர்
கான்முகம்பரந்து மிக்ககருங்கடல்படியுந்தன்மை
நான்முகன்படைப்ப நண்ணிநானிலமொடுங்கல்போலும்

110 பொருதிருப்பொருநையோடு புரிசடைப்பெருமான்றன்னான்
மருவியமகிழ்வினீடும் வைகைமாநதியையுந்தான்
றருணவெண்ணிலாக் கொழிக்குந் தரளமாலிகை போற்றாங்குந்
திருமிகுவண்மைசான்றசெந்தமிழ்ப்பாண்டிநாடு

ஆற்றுச் சருக்க முற்றியது
ஆகச் செய்யுள் 110

*****

## திருநாட்டுச் சருக்கம்

111 பூண்டதண்பொருநையின்சீர்புகன்றன
நீண்டிலகுஞ்சடைநிமலர்மேவிய
வேண்டிகழ்பதிகளேழிரண்டியைந்திடு
பாண்டிநாட்டணிசில பகர்கிற்பாமரோ

வேறு

112 புரங்குன்றச்சிலைகுனித்துப் பொறியரவுநாணாகப் பூட்டி மூவர்
தரங்குன்றக்கருதாதுதழலெழவே நகைசெய்துதரைமேற்றூங்குங்
கரங்குன்றம்படைத்தனையகரடமதகரியுரி போர்த்தருளுங்காமர்
பரங்குன்றஞ்சார் கூடற் பரமனருளாலோங்கும் பாண்டிநாடு

113 பன்னுமலயத்துவச பாண்டியன் பண்டிழைத்ததவப்பயத்தினாலே
முன்னொருகாலவதரித்து மும்முலையாண்முடிதுலங்கமுறையிற்காக்கு
மந்நிலையிலமர்புரிந்தங்கவளை மணம்புணர்ந்தருளியங்கணாளன்
மன்னுநற்சுந்தரமாறனெனவரசுபுரிந்துளதுவமுதிநாடு

114 கொண்டலூறழ்மின்கூந்தற் கொண்டமணங்கொங்குதேரென்றெடுத்து
மண்டலமெண்மாகீர்த்தி வழுதி பெற வெழுது திருமுகமாம் வண்டீந்
தண்டமிழின் பொருள் விளங்கச் சங்கத்தின் கீழ் நின்று பரனுஞ் சாற்றும்
பண்டருமத்தமிழ்ச் சங்கப்பாடன் மணங் கொழித்திடுந் தென்பாண்டிநாடு

115 குலவுவடவேங்கடந்தென்குமரியெனத்தமிழெல்லைகூறுகின்ற
தலமதனிற்றலைமை பெறு தலமீரேழ்தயங்குறுசெந்தமிழ் நாடென்றே
யிலகுமரியயனமரரிந்திரன் வந்திறைஞ்சவருளேற்பநல்கு
மலைமகணல்லரசினறம்வளர்க்கவளஞ்சுரந்தளிக்கும் வைகைநாடு

116 தவலறவேயொருநான்கு தலையிட்டவறுப஁துதந்தலீலை
சிவபெருமான் செய்தருளிச் செங்கயற்கண் மங்கையொடுஞ் சேர்ந்தநாடு
கவுணியர்தங்குலத்துதித்தகாளையமண்கையர் தமைக்கழுவிலேற்ற
மவுலிதிகழ் வழுதிமகிழ் வண்டமிழேடெதிரேறும் வைகை நாடு

117 தென்மதுரைபரங்குன்றந்திருவிராமேச்சுரமாடானைபுத்தூர்
பன்னுதமிழேடகநெல்வேலி பகர்குற்றாலமாப்டீஊர்பார்
மன்னுபுனற்சுழியல்புனவாயில் கொடுங்குன்றமெழின் மருவுகானை
பொன்மதில் சூழ் பூவணமும் பொருந்துகின்ற புகழ்ப் பொதியப் பொருப்பனாடு

வேறு

118 மண்டுகின்றவன்மள்ளர்தம்மோசையும்
வெண்டிரைப்புனல்வெள்ளத்தினோசையும்
பண்டருங்கிளைப்பாடலினோசையு
மண்டகோளகைக்கப்புறஞ்சாருமால்

119 கொண்டலொன்றைமின்கூறுசெய்தென்னவே
மண்டுமோரிருவன்பகட்டின்பிடர்த்
திண்டிறன்மள்ளர் பொன்னுகஞ் சேர்த்தியே
கண்டுவைரக்கலப்பை தொடுத்தனர்

120 வேண்டுநீர்கொடுமேவநிரப்பியே
கீண்டுழுஞ்சாற்கிளர்மணிக்குப் பையைப்
பூண்டநல்வரம்பின்புறம் போக்குவார்
பாண்டிநாட்டுறும் பண்ணையின் பாங்கெலாம்

121 தக்கநற்றசும்பின்றதியென்னவே
நெக்குநெக்குநிறைநறுஞ்சேற்றின்மன்
றிக்கினிந்திர தெய்வதம் போற்றியே
மிக்கமள்ளர்விதைத்தனர் வித்தையே

122 மறுவிலாதுயர்மாதருமைந்தருஞ்
சிறுவர்தம்மைவளர்த்திடுசெய்கைடோ
லுறுமிகழ்ச்சியினோங்குமுழுநர்தா
நறியசெந்நெலினாறு வளர்த்தனர்

123 பொய்யின்ஞானப்புகலிப்பிரானமண்
கையர்தம் மைக்கழுவினிலேற்றுவான்
கொய்து சேர்த்தகுவான்முடியென்னவே
செய்யநாறுபறித்தவை சேர்த்தினார்

124 வள்ளத்தேயுறவாக்குமதுநுகர்ந்
துள்ளத்தேயுணர்வோடிடவோடிவீழ்ந்
தள்ளற்பள்ளத்தழுந்தினர் மள்ளர்தாங்
கள்ளுண்பார்க்குக்கதியுமுண்டாங்கொலோ

125 மள்ளரானவர் வான்மதிவள்ளத்திற்
றெள்ளிதாநறவுண்டு தெவிட்டியே
யுள்ளநாடியுழத்தியர்க்கூட்டுவார்
கள்ளின்மிக்ககளிப்புமுண்டாங்கொலோ

126 ஓடிமீளுவருண்டிடுகள்ளினைத்
தேடியோடித்தியங்கி மயங்குவார்
பாடியாடுவர் பண்ணைகளெங்கணுங்
கூடுமள்ளர் குழாத் தொடுங்கூடியே

127 மாறின்மைந்தரைமாதருமைந்தரு
மீறில் செல்வமொடில்லறஞ் சேர்த்தல்போல்
வேறுவேறு விளம்பிக் கடைசியர்
நாறுசேறுநடுவான்றொடங்கினார்

128 கந்தவார்குழற்கள்ளுண்கடைசியர்
சிந்தைநொந்துதியங்கித் தெளிந்துவந்
திந்திரன்றனை யேத்தியிறைஞ்சியே
நந்து நென்முடிநாட்செய்து நாட்டுவார்

129 எண்களோடிய லெண்டிசையெங்கணுங்
கண்களோடிக்கடைகள் சிவப்பவே
யுண்களோடியுழத்தியருண்டுதாம்
பண்களோடிசைபாடிநடுவரால்

130 உற்ற பண்ணையுலாவுமுழத்தியர்
மற்றையாரொடுமதுவுண்மயக்கினா
லற்றம்யாவையுமங்கைகள் கொட்டியே
குற்றமீதென்று கூறிநகைப்பரே

131 துள்ளுசேலினந்தூம்புடைக்கும்புனல்
வெள்ளமாமருதந்திகழ்வேலிசூழ்
மள்ளர்தந்தவளவயனாறெலாங்
கள்ளுண்காமக்கடைசியர் நாட்டினார்

வேறு

132 மிடைபடுசெஞ்சாலிதிகழ்மிகுந்தபுனற்பண்ணைதொறும்
புடைபெயர்ந்துபுனனிறுவிப்புகழ்பெறு செந்நெற்சாலி
தடைபடுந்தாட்டடங்கமலந்தன்னாலென்றுளந்தளர்ந்து
கடைஞர்கடைக்கண்காட்டக்கடைசியர் பூங்களைகளைவார்

வேறு

133 அங்கணுழத்திய ரள்ளியகழ்ந்த
செங்கமலங்கள் செழுங்கதிர்கண்டு
பொங்குதணீரிடைப் போந்தனசேரத்
தங்கிளை கண்டனர் தம்முகமொக்கும்

134 மங்கையர் தம்முகமானுவவென்றே
செங்கமலங்கடெரிந்து தெரிந்தே
யங்கண்மிகுந்தலமந்தமர்வுற்றே
தங்கவரிற்சிலர் தாங்களையாரால்

135 விட்டிடுகாமன்வியன்கணையொன்றே
யுட்கொடுமேவுமுழத்தியர் சில்லோர்
மட்டவிழ் செங்கமலத்தொடு காவி
கட்டனர்மிக்ககடுங்களையெல்லாம்

136 பந்தவிலங்குபரிந்தவர்தம்பால்
வந்துநன்ஞானம்வளர்ந்திடுமாபோற்
கந்தமலர்க்களை கட்டலினோங்கிற்
றந்தவியன்பணையார்தருபைங்கூழ்

137 செந்நெல்வளர்ந்துசெழுங்கதிர்சாய்தல்
பன்னுதமிழ்ப்புகல்பாலனை முன்னா
ளின்னருளானதியேடெதிரேற
மன்னனெழுந்துவணங்குதல் போலாம்

வேறு

138 வரம்பருறுமுழுங்கொலிவாய் மருதநிலக்கிணை கறங்க
வரம்பொருதகதிரரிவாணிரைபூட்டியாங்குழவர்
பரம்பியரிந்தரிபரப்பிப்பணிலங்கடருமுத்தஞ்
சொரிந்திடவேயவைதிரட்டிச் சொன்னமலைபோற்குவித்தார்

139 மேருகிரிசாய்த்திடல்போன்மிகுசெந்நெற்போர் சரித்துக்
காரிணங்குங்கருமேதிக்கணத்தினை நன்குறப்பிணித்துப்
பாருறவேபலகாலுஞ்சூழ்ந்து பலாலந்தெரிந்து
மாருதநேருறத்தூற்றி மன்னியநென்மலை வளர்த்தார்

140 அழகியசீர்ப்புகழ் வேந்தற்காறிலொன்று கொடுத்தைந்தில்
வழிபடுதெய்வம் பிதிரர்வருவிருந்துவான்கிளைகள்
விழைவுறவேயளித்ததற்பின்மிகுமொன்றால் வியன்குடிமை
பழகிய செல்வம் பெருகும் பாண்டிவளநன்னாடே

வேறு

141 கொண்டல்சேர்பொழில்களெங்குங் குலாவுநற்பொழில்களெங்கும்
பண்டைநான்மறைகளெங்கும்பகர்ந்திடுமறைகளெங்குந்
தண்டமிழ்மணங்களெங்குந்தகுகடிமணங்களெங்கு
மண்டராலயங்களெங்குமணிகொளாலயங்களெங்கும்

142 மாதர்தம்பண்ணையெங்குமருதநீர்ப்பண்ணையெங்கு
மேதமில்செல்வமெங்குமிந்திரசெல்வமெங்கு
மோதுமஞ்சுகங்களெங்குமுரைக்குமஞ்சுகங்களெங்கு
மேதகுமுலகமெங்கும் விரும்புநல்லுலகமெங்கும்

143 வண்டமிழ்ச்சங்கமெங்கும்வார்புனற்சங்கமெங்குஞ்
சண்பகவனங்களெங்குந்தகுமடவனங்களெங்கும்
விண்படர்வேழமெங்கும் வியன்கழைவேழமெங்கும்
பண்டருபாடலெங்கும் பதமிதிப்பாடலெங்கும்

144 வேதமந்திரங்களெங்குமிக்கதந்திரங்களெங்கும்
போதலர்வாவியெங்கும் புண்ணியதீர்த்தமெங்கு
மோதுபண்ணிசைகளெங்குமுரைக்கும் யாழ்ப்பாணரெங்கு
மாதர்தம்வண்ணமெங்கும் வண்டமிழ்வண்ணமெங்கும்

145 தேமலர்பயில்வசெந்தேன் செவ்வழிபயில்வசெந்தேன்
காமநூல்பயில்வர்மாதர்கமலமாமுகமொண்மாதர்
நாமநூல்பயில்வநாவே நாவலர்பயில்வநாவே
தாமமேபயில்வவன்னந்தாமரைபயில்வவன்னம்

146 முள்ளரைநாளஞ்சேர்ந்தமுண்டகக்கையானீவி
யெள்ளருங்கருவிபம்பயாழ்நரம்பிசைத்தியார்த்தே
யுள்ளமிக்குவகைகூர்ந்தாங்குரைக்கும் யாழ்ப்பாணர்பாடற்
றெள்ளமுதனையதீஞ்சொற்செவியுறவாக்கின்றாரும்

147 குழலிசைபயிற்றுவாருங்குஞ்சரம்பொருத்துவாரு
மழவர்சொன்மாந்துவாருமனையறம்புரிகிற்பாரும்
விழவணிவிரும்புபவாரும் விருந்தெதிர்கொள்கிற்பாரு
முழவிசைவிரும்புவாருமுற்று மெய்த்தவஞ் செய்வாரும்

148 வாரணப்போர்சேர்ப்போருமைமறிப்போர் காண்போருந்
தேரணியூர்குவோருஞ்சிலைத் தொழில்பயிலுவோரு
மாரணந்தேர்குவோருமஞ்செழுத்தறைகுவோருங்
காரணங்கருதுவோருங்காரியந்தேர்குவோரும்

வேறு

149 கன்னலஞ்சிலைகையேந்துங்காமனூறன்னைத்தாமே
யின்னிசைபாடுவோருமிருசெவிமாந்துவோரும்
பொன்னகர்தன்னின்மன்னும்புலவரிற்பொலிந்துசூழத்
தன்னிகராகியோங்குந்தண்டமிழ்ப்பாண்டிநாடே

வேறு

150 தீதின்மாதவர்சேர்ப்பனசாலையே சிறப்பின்மல்குந்தினமன்னசாலையே
காதல்கூருங்கடிபொழின்மாலையே கருதுநீறொடுகண்டிகைமாலையே
மாதர்காதன்மிகுமந்திமாலையேவண்டுகிண்டியுறங்குவமாலையே
யாதரம்பெறுமாலெங்குமாலையே யார்வமோங்குங்கழைக்கரும்பாலையே

151 சேய்கணின்றெளவைக்கீவதுமுத்தமேசிற்றில்கோலிச்சிதைப்பதுமுத்தமே
பாய்புனற்றிரைசேர்வது பண்ணையேபாடலெங்கும்பயில்வது பண்ணையே
வாய்திறந்துவழங்குவவள்ளையேமானனார்கடம்வார்காதும்வள்ளையே
யோய்மருங்கிலுடுப்பது சேலையேயுற்றகண்களொப்பாவது சேலையே

152 கோலமாந்தரணிவதுமாரமேகுங்குமக்கொங்கைசேர்ப்பதுமாரமே
சாலவெங்குந்தவம்பயில்வாரமேதரங்கநீர்த்தரளம்புரள்வாரமே
மாலுலாவிவளருமந்தாரமேமன்னுதீஞ்சொல்வழங்குமந்தாரமே
சீலமாதவர்சிந்தையுமாரமேசேர்ந்தபண்ணைமருதமுமாரமே

153 புண்டரீகம் பொருந்துநற் சங்கமே பொங்கி யெங்கம் பொருந்துநற்சங்கமே
பண்டமாறுவபாவையராரமேபயிலுங்காமவிழாவாரவாரமே
வண்டுபாடுமலர்க்கருங்கோதையேமைந்தர் செங்கைமருவுவகோதையே
யெண்டிசாமுகமுஞ்சிவதானமேயிசைந்திடுந்தருமத்தொடுதானமே

வேறு

154 சோலையின்மறைசொல்லுவவஞ்சுகங்
கோலவேள்விருதூதுவகோகில
நீலமாடநெருங்குவமேகங்கண்
மாலைசேர்வனவண்டின்குழாமரோ

155 நீடியோங்குநிலாமுற்றமோங்குமே
மாடமுடுங்கலாபமயில்களே
பாடல்சேர்ந்திடும் பண்ணுடனோசையே
யாடுநீர்த்துறையன்னக் குழாங்களே

156 அள்ளல்வேலையகலிடமெங்கணுந்
தெள்ளுசெந்தமிழ்ச் செல்வந்திளைக்கவே
கொள்பொருள்வெஃகிக்கொள்பவரின்மையால்
வள்ளியோர்கணமண்டலத்தில்லையே

157 செம்மைநல்குறுசெந்தமிழ்சேரலால்
வெம்மைசேர்ந்தவெளிற்றுரையில்லையாம்
டுபாய்ம்மையென்றும்புகன்றறியாமையான்
மெய்ம்மையென்றும்விளம்புவதில்லையே

158 கோதின்மாமணிகுப்பைகொழிப்பன
வோதுதேன்மதுவுண்டுகளிப்பன
பாதமேபயிலும்பரதத்துடன்
மாதரோடுநடிக்குமயிற்குழாம்

159 தென்குலர்வியதேமொழியார்கடம்
பொன்குலாவியபூண்முலைதாங்கலாற்
றுன்பமேவுந்துடியிடையன்றிமற்
றின்பமேயலதேதமங்கில்லையே

160 மேவுகின்றவிலங்குவிலங்குகள்
காவலென்பகடிமதிற்காவலே
யோவில்வன்சிறையுற்றபுனற்சிறை
தேவர்கோன்புகழ்தென்னவனாடெலாம்

161 வங்கவாரிதிசூழ்கின்றவையக
மெங்கணும்பகையின்றியிருத்தலாற்
றுங்கமேவுவெஞ்சூரருந்தோன்றிலர்
பங்கமேய்பண்ணைப்பாண்டிநன்னாடெலாம்

வேறு

162 கண்டவளவான்மிகுகலைப்பொருளினாலும்
வண்டவளநாயகிவழுத்தரிடதென்றாற்
கொண்டவளவில்புகழ்குலச்செழியராளு
மண்டவளநாட்டணியையாரறையவல்லார்

திருநாட்டுச் சருக்க முற்றியது
ஆகச் செய்யுள் 162

*****

## திருநகரச் சருக்கம்

163 ஆவணத்தணிதிகழலங்கனாற்றுபூங்
காவணங்கற்பகக்காவினீழல் செய்
தீவணமிலங்குசெஞ்சடிலசேகரன்
பூவணத்தணிசிலபுகலுவாமரோ

வேறு

164 நீடுதிரைக்கடலாடைநிலவேந்தர் நேரிழையார் நெருங்க வெங்குஞ்
சூடகக்கைச்சுரர்மடவார்துணைவரொடும் விமானத்திற்றுவன்றுமூதூ
ரேடலர்தாரிட்டருச்சித்திந்திரன் வந்தனைபுரியுமெழில்கொண்மூதூர்
மாடமலிமறுகுதிகழ்வளமைசாறமிழ்ச் சங்கம் வளருமூதூர்

165 தேவர்களுந்திசை முகனுந் திருமாலுந்திசை யோருஞ் செங்கை கூப்ப
மேவுதிருநடராசர் மீனவன் றன் விழிகளிப்பவெள்ளிமன்றுட்
டாவின்மலாப்பதமாறித்தாண்டவஞ் செய்தருள்கின்றதருமமூதூர்
மூவுலகும் புகழ்மதுரைமிகவிளங்குநிலமகடன் முகமே போல

166 அன்னதிருப்பதிக்கங்கிதிக்கினில் யோசனைக்கப்பாலமர்ந்து தோன்றுஞ்
சின்மயமாஞ் சிவலிங்கஞ் செங்கதிர் வெய்யோன் பூசை செய்யவைகு
மன்னுநவமணித்தேரூர் மறுகு தொறுமாளிகை சூளிகைநெருங்கும்
பொன்மதில்சூழாலயஞ்சேர் பூவணத்தின் வளம் யாவர் புகலற்பாலார்

வேறு

167 அரியயன்முநிவரயின்முகக் குலிசத்தமரர் கோனளகையம்பதியான்
பரவருமிருள்கால்சீத்திடத்தோன்றும்பல்கதிர்ப்பரிதிவானவன்சேர்
தருணநல்லமுதகிரணசந்திரனற்றானவரானவரானோர்
திருமகடினமுமருவிடத்திகழுந் தென்றிருப்பூவணநகரம்

168 மேவியசடிலம் வெண்ணிலாவெறிப்பவிடையுகந்தேறிடும்விமல
னாவலர்புகழ்நான்மாடநீள்கூடனாயகனந்திருவெம்பெருமான்
பூவுலகேத்தும் பொன்னனையாடன்பொருவருமனைவருகமலச்
சேவடிமணமெண்டிசாமுகம்வீசுந்தென்றிருப்பூவணநகரம்

169 பகவலன்பூசைபடைத்திடுபலனோ பண்ணவர்பண்ணுநற்றவமோ
இகம்பரம்வீடுமும்மையுமுயிர்கட்கினிதருளெம்பிரானருளோ
மிகும்புகழ்சாலுமிவற்றுள் யாதென்று விரித்திடற்கரியதாய் விளங்குஞ்
சிகரகோபுரங்கடிகழ்ந்து சேணோங்குந் தென்றிருப்பூவணநகரம்

வேறு

170 தொல்லைமாபுகழ்துன்றுஞ்சுராதியர்க்
கெல்லையில்லநலின்பமளித்திடு
மல்லலோங்கிவளர்ந்திடுமந்திரஞ்
செல்வமல்கிய தென்றிருப்பூவணம்

171 குன்றமன்ன நற்கொங்கைசுமந்துநேர்
மின்றயங்கிடைமின்னனையாளுடன்
கன்றுமான்கரமேந்திய கண்ணுத
றென்றமிழ் பயிலுந்திருப்பூவணம்

172 அங்கண்வானத்தகடுகிழிபட
மங்குறோய்மணிமாடத்துங்கூடத்தும்
பொங்கரோங்கும் பொழில்களிடத்தும்வெண்
டிங்கண்மேவுறுந் தென்றிருப்பூவணம்

173 பொற்பதந்தனைப்பூசுரர்க்கீதலாற்
சொற்பதங்கடந்தோங்கியசூழ்ச்சியாற்
கற்பகத்தைவளர்த்திடுகாட்சியாற்
சிற்பரன்னிகருந்திருப்பூவணம்

174 எந்தையின்னருண்மேனிகொண்டெய்தலாற்
புந்திகொண்டதளித்திடும் பொற்பினாற்
கந்தமேவுங்கடாம்பொழியுங்கவுட்
சிந்துரந்நிகருந்திருப்பூவணம்

175 ஏய்ந்தவங்கணனங்கணியைதலால்
வாய்ந்தபொய்கையிடத்தில் வளர்தலாற்
போந்தவாறுமுகந்தருபொற்பினாற்
சேந்தன்போன்றது தென்றிருப்பூவணம்

176 பொங்குமாமலர்ப்பூங்கொடிமேவலாற்
சங்கமோங்கத்தடக்கை தரித்தலா
லெங்கணாதனிடத்திலிருத்தலாற்
செங்கண்மானிகருந்திருப்பூவணம்

177 இசையநான்மறையின்னிசை பாடலாற்
கசடறுங்கலைமங்கைகலத்தலா
னசையுடனன்னதானநணுகலாற்
றிசைமுகன்னிகருந்திருப்பூவணம்

178 புந்திகொள்ளும் பொற்பூவிற்பொருந்தலா
லந்தமற்றசெல்வங்களளித்தலால்
வந்தெஞ்ஞான்றுநன்மாலுடன் மேவலாற்
செந்திருந்நிகருந்திருப்பூவணம்

179 நல்லெழில்வளர்நான்முகனண்ணலா
லெல்லையில்கலையாவுமியம்பலா
லல்லிசேர் தவளாம்புயபீடிகைச்
செல்விபோன்றது தென்றிருப்பூவணம்

வேறு

180 ஆரண நான்கு மங்கமோராறுமளவிடற்கரியபேரொளியாய்
நாரணனவனுநாற்றிசைமுகனுங்கனவினுநண்ணுதற்கொண்ணாக்
காரணமாயக்காரணவுருவாங்கண்ணுதலன்றுகொண்டருளும்
பூரணஞானச்சுடர்ப்பிழம்பெனவேபொன்மதின் மன்னியதன்றே

181 எண்டருசரியையாதியோர் பயின்றங்கிருத்தலாலிறைபதம்போலும்
பண்டருவேதம்பாடிடுபரிவாற்பன்னுநான்மறையையும்போலுந்
தெண்டிரைக்கடற்பாற்றிசைகளோடுதலாற்றிசைமுகன்றன்னையுஞ் சிவனுங்
கொண்டிடுமண்டகோளகைக்கப்பாற்குலவுபொற்கோபுரவாயில்

182 பல்லுயிரெல்லாம் பரிவுறவோங்கப் படைத்தலாற்பங்கயனொக்குஞ்
செல்வமோங்கிடவேதினந்தொறும் வளர்க்குந் திறத்தினாற் செங்கண்மாலொக்குந்
தொல்பவமனைத்துந்துடைத்தலான் மறைக்குஞ்சூழ்ச்சியா லருள்புரிதொடர்பாற்
சொல்லரும்புகழ்சேருருத்திரன் மகேசன் றொழிலறுசதாசிவனொக்கும்

183 வேலொடுசெறிந்தமிகுபொறிமயிற்கண் விரவலால்வேலனையொக்குங்
கோலமேவியநற்சூல மேல்கொண்டுகுலாவலாற் கொற்றவையொக்குஞ்
சாலவும் படைகடாங்கலான்மிக்கசமர் பொருநிருதரையொக்கு
மேலுநன்னிதியமீட்டலான்மன்னுமிருநிதிக்கிழவனை யொக்கும்

184 விரவுவானிமிர்ந்துமிக்கபொன்முடிகண்மேவலான்மேருவையொக்கும்
பரவமேற்கண்கள்படைத்தலாலணிசேர்பாகசாதனன்றனையொக்கும்
பொருவிகந்தோங்கிப்பூந்தனம்பொருந்துபொற்பினாற் பூமகளொக்கும்
கருதியேகாண்டற்கருமையான்ஞானக்கண்ணுதலண்ணலையொக்கும்

185 நாடுறயார்க்குநனிசிறந்தோங்கு நற்பொறியுடுத்தபொற்புரிசை
மாடுறுசீரார்வாரி சேர்கின்றவண்மையையாதெனவகுப்பா
நீடுபல்லுலகைநிரப்பியுன்னதமாய் நேமிமால்வரையதன்பாங்கர்ப்
பீடுறமன்னும் பெரும்புறக் கடல்போற்பிறங்கு பேரகழிசூழ்ந்திலகும்

186 தண்டரளங்கள்வெண்டிரைகொழிக்குந்தடங்கரைமருங்கினிலுடுத்த
மண்டியசெல்வப்பெரும்புனற் சீரார்வாரியின் வானவருலகங்
கண்டவருள்ளங்களிமிகத்தூங்கக்காண்டகு மாட்சியின்மிகுமா
லண்டர்நாடதனினண்டர்நாடடைந்ததென்பதுமற்புதமாமோ

187 பள்ளமார்பயத்தாற் பயந்தரும்பரிகப் பாங்குறுபித்திகைப்பளிக்கு
வெள்ளிவான்றகட்டின்விளங்கும் வெண்டாளம் விரிசுடர் வெண்ணிலாவெறிப்பத்
தள்ளருபெருஞ்சீர்த்தபநியப்புரிசைதன்னிறந்தான்றணந்ததனால்
வள்ளல்சேர்கயிலைமால்வரையென வே மன்னிய தென்னலாமாதோ

188 கோலமாரகழிற்குளித்திடுகுன்றக்குஞ் சரந்தனைத்திமிங்கலந்தான்
சாலும் வெம்பசிதான்றணிந்திடவிழுங்கித் தன்னகட்டடக்கிடுந்தன்மை
வேலைகளேழும்விரவியொன்றாகிமேவிடுமந்தநான்முகுந்தன்
சேலுருவாகிச்செறிந்தபல்லண்டஞ்சிறுசெலுவடக்கியபோலும்

189 தக்கசீர்க்கப்பறரங்கமாங்கரத்தாற்றண்டரளஞ்சொரிந்தளப்பத்
தொக்கபொற்புரிசைசூழ்ந்திடுஞாயில் சுற்றியபித்திகைதனக்குப்
பக்கமோடிடுநற்பாரெலாமடங்கப்பதித்திடும் பளிங்கின்மேற்பதித்த
மிக்கநல்வயிரவெண்ணிலாக்கற்றை வெண்படாம்போர்த்தது போலும்

190 அன்னபேரகழிகன்னமுகொமுகு மங்கண்வானத்துயர்ந்தோங்கு
மன்னியதேரூர் மணிமறுகின்பால்வயிரவான்றூணிரைநிறுவித்
துன்னுசெம்பவளப்போதிகை தாங்குஞ்சுடர் மரகதத்துலாஞ்சேர்த்திப்
பொன்மதிலமைத்துப்புலமணியழுத்திப்பொற்புறச்சித்திரம் பொறித்து

191 தகுமொளிபரப்புஞ்சந்திரகாந்தந்தரையெலாஞ்சீர்பெறச் சமைத்துப்
புகழ்பெறமிகு செம்பொன்னினால்வேய்ந்துபொற்சிகரம்பலவமைத்துத்
திகழ்பெறுகமலபீடிகைமருவுதிருமணிவாயில்கடோறு
மகிழ்தருமாடகூடமண்டபங்கண்மாளிகைசூளிகை நெருங்கும்

192 அன்னமென்னடையா ராடுமாடரங்குமணிமணிக்கோபுரநிரையு
மன்னவர்திறைகளளக்குமண்டபமும் வண்டமிழ்க்கழகமண்டபமு
முன்னையாரணங்கண்முழங்கு மண்டபமும் முரசதிருமண்டபமுந்
தன்னிகர்தருநற்றான மண்டபமுஞ் சார்ந்தபல்வீதியு நெருங்கும்

193 மந்திரமொடுநற்றந்திரம்பயிலும் வைதிகசைவநன்மடமுஞ்
சந்ததம் பயிலுஞ்சதுர்மறைமுனிவோர் சதுக்கமும் வணிகர்சந்திகளுஞ்
சிந்தையின் மகிழ்ச்சி யோங்குபல்பண்டஞ்சேர்ந்திடுங்கோலமார்தெருவு
மந்தமில்குடிகளமர்ந்து வாழ்கின்ற வாவணமெங்கணுநெருங்கும்

வேறு

194 ஆனவைதிகசைவமுமண்ணறன்
பான்மைசேர்ந்தபஞ்சாக்கரமும்பயின்
ஞானமாதவர்நற்கரத்தேந்திய
தானமுந்தவமுந்தழைத்தோங்குமால்

195 நல்லதும்புருநாரதரின்னிசை
வல்லவீணையினோசையுமைம்பலன்
வெல்லுமாதவர்வேதத்தினோசையுஞ்
சொல்லுமாதர்தந்துந்துபியோசையும்

196 வம்பறாநன்மணிமுழவோசையும்
பம்பியேயெழும்பல்லியவோசையுஞ்
செம்பொன்மாமணித்தேரினதோசையுங்
கம்பமேவுகடாக்களிறோசையும்

197 விந்துநாதம்விளங்கியவோசையுஞ்
சந்தநான்மறைதாமுழங்கோசையு
மிந்திராதியரேத்திடுமோசையு
மந்தவார்கலியோசையடக்குமால்

198 ஓங்குபூங்கமுகும்முயர்வாழையுந்
தூங்குபைங்குலைத்தெங்குந்துருக்கமுங்
கோங்குமாரமுங்குக்குலுவும் மனந்
தாங்குசெஞ்சந்தனமுஞ் சரணமும்

199 புன்னை சம்பகம்பூதவம்பூங்கழை
மன்னுசூதமந்தாரம் வருக்கைமேற்
பன்னுகின்றபராரை மரங்களுந்
துன்னுதண்டலைசூழ்ந்திடுமெங்கணும்

200 பற்பகறொறும்பாங்கினிலோங்கிய
நற்பொழிறிகழ்நண்ணியபூவணன்
பொற்பதத்திற் புரந்தரன்போற்றிடுங்
கற்பகச் செழுங்காவுமணக்குமால்

201 கோடரங்கள் குயில்விளையாடலே
நீடரங்கினிலாவிளையாடுவ
மாடமேல்விளையாடுவமஞ்ஞைக
ளாடுநீர்விளையாடுவவன்னங்கள்

202 வாவிநீர்விளையாடுவர்மாதர்கள்
காவிமேல்விளையாடுங்கயற்கண்கள்
பாவின்மேல்விளையாடிடும்பண்ணெலாம்
பூவின் மேல்விளையாடுவள்பூமகள்

வேறு

203 துறுமலர்பொதுளுஞ்சீர்ச்சோலைகண்மேலெங்கு
நிறைபுனலுறுசங்கநீணிலவொளிதங்கு
மறுவறுபுகழ்மன்னும் வாவிகடொறுமேவு
மறுபதமிசைபாடுமாயிதழரவிந்தம்

204 பங்கமதறநாளும் பாயுறைவாய்நீத்தந்
தங்கியபுதுவாசச்சததளமதுமாந்திப்
பொங்களின்பண்பாடும் புண்டரிகக்கோயின்
மங்கையை நிகர்மாதர்மங்கலமிடமெங்கும்

205 பிறைநுதலதுவொக்கும் பிடிநடையதுவொக்குஞ்
சிறுகிடைதுடியொக்குந்திரண்முலைமலையொக்கும்
வெறிமுலைமுகையொக்கு மென்னகையதுநீண்ட
கறைகெழுவேலொக்குங் கண்ணிணையது மாதோ

206 முயலுறுமுதயஞ்சேர்முழுமதிமுகமொக்குங்
குயில்குழலதுவொக்குங் கோகிலமொழியொக்கு
மயிலியலதுவொக்கும் வாய்பவளமதொக்கும்
பயிலரவது வொக்கும் பரவருமகலல்குல்

207 தங்கியதிருமால்கைச்சங்கதுகளமொக்கும்
பைங்கழையதுவொக்கும்பரவுறுபசுந்தோள்க
ளங்கைகள் செங்காந்தளம்மலரதுவொக்குஞ்
செங்கமலமதொக்குஞ் சேவடியதுதானே

வேறு

208 செல்வந்தான்விளையாடுமனைகளேசேய்கடாம்விளையாடம்மனைகளே
மல்குமம்மனைவாயினற்கோலமேமாதர்வாயின்மணக்குந்தக்கோலமே
பல்பெருங்கதைபன்னுந்தமிழ்களேபயிலிடங்களும் பன்னுந்தமிழ்களே
நல்லசெல்வங்கணாடொறுநந்துமேநல்லதல்லது நாடொறுநந்துமே

209 தலமலிந்துவிளங்குந்தடங்களே தங்குவாசந்தரும்பூந்தடங்களே
யலகில்வாசமுநிவர்மடங்களேயடைந்தவர்க்கருளன்னமடங்களே
கொலைபுரிந்திடுங்கும்பகடங்களேகுலாவுமெங்குநிலாவுகடங்களே
முலைமுகந்தருமுத்தின்படங்களே மொழியுமும்பன்முகமும்படங்களே

வேறு

210 அங்கண்மிகவோங்குபுகழந்நகரிதன்னுட்
டுங்கநெடுமாலைநிகர்சொல்லுமிளைஞோருஞ்
செங்கமலமங்கைநிகர்திங்கணுதலாரு
மங்கலவிதத்துடன்மணத்தொழின்முடிப்பார்

211 மோகமிகுமாடமணிமுன்றின்முகமெங்கும்
பூகமொடுபூங்கதலிபொற்பினடுகிற்பார்
நாகரிகமாலிகைகணாலவணிசெய்வார்
மாகமுயர்மாமகரதோரணநிறுப்பார்

212 மேலுறவிதானமணிமேவுறவிரிப்பார்
கோலமணிமன்னுநிறைகும்பநடுவைப்பார்
மாலிலகுமட்டமணமங்கலநிரைப்பார்
பாலிகைகளெண்டிசைமுகத்திடைபதிப்பார்

213 கண்டவர்மனங்களிகொள்காமனனையாருங்
கெண்டைதனையுண்டுவளர்கேழ்கிளர்கண்ணாருங்
கொண்டசதியோடுமகிழ்கூர்ந்துகுலவிச்சேர்
பண்டருவிபஞ்சியிசைபாடிநடமேய்வார்

214 குழையிடறுகன்னியர்கள் கோலமதனன்னார்
மழையகடுகிழியவெழுமாமணிபதித்த
வெழுநிலைநன்மாடமிசையின்புறவிருந்தே
கெழுமிமிகுகின்னரநலொழுகுமிசைகேட்பார்

215 பண்களினொடின்னிசைபயிற்றியிடுகிற்பார்
மண்கணெரியச்சகடவையமதுகைப்பார்
விண்கணுறுகோபுரநல்வீதிகள் விளங்கக்
கண்களிகள்கூரவிடுகாவணநிரைப்பார்

216 திங்கணுதலிற்றிலகமும்புனைதல்செய்வார்
பொங்குதலிணங்கவணிபொற்பினணிகிற்பார்
தங்குகலவைத்தொகுதிதன்னொடுகுழைத்துக்
குங்குமசுகந்தமுலைகொண்டணிதல்செய்வார்

217 மற்றுநிகரற்றிலகுமாடமிசைமுன்றிற்
சிற்றில்களிழைத்துவிளையாடியிடுசேய்க
ளற்றதிருமாமணியனைத்தினையும்வாரிக்
குற்றமெனமுச்சிகொடுகுப்பைகள் கொழிப்பார்

218 கோதைகொடுகோலமிகுகோதையணிசெய்வார்
காதைகளளந்துசெவிகாதலினிறைப்பார்
போதுநியமஞ்செய்துபோதுகள்கழிப்பார்
மாதர்களுமைந்தர்களுமாதருடன்வாழ்வார்

219 விழைவுறுநன்மாடமதின்மிக்கிலகுதீபம்
பழகியசெல்வத்தினுயர்பரிசனநிரைப்பா
ரிழையிழைகொழுகுபுகழிட்டிடையினார்தங்
குழலின்மிகவகிலிடுகொழும்புகைநிறைப்பார்

220 மைக்கரியெனப்பிளிறுமால்களிறிணைப்பார்
தக்கதகரைப்பொருசமர்த்தொழில்விளைப்பார்
மிக்கமணிகுண்டலம்விளங்குகதிர்வீசக்
குக்குடமிசைத்துமிகுகுரவையிடுகிற்பார்

221 விஞ்சியவிண்முகடுதொடுமேருமுலைகண்டே
யஞ்சுமிடைசேர்ந்தமடவன்னநடைமின்னார்
மஞ்சரியின்வண்டுமதுவுண்டினிசைபாடக்
கொஞ்சுகிளிமழலையொடுகுயிலின்மொழிபயில்வார்

222 மருவுமணிமன்றுதொறுமன்னவர்கள் சேர்வர்
தரியலர்கள்வாயிலிடைதகுதிறையளப்ப
ரரிவையாரங்குதொறுமாடல்பயில்கிற்பார்
திருமறுகுதொறுமினியசிலதியர்கடிரிவார்

223 மங்குலைநிகர்க்குமிவர்வார்குழல்களென்பார்
வெங்கடுவிடத்தைநிகர்மேவும்விழியென்பார்
செங்கிடையையொக்குமிவர்செய்யவிதழென்பார்
பங்கயமதொக்குமிவர்பாதமலரென்பார்

224 வெய்யமணிமேவுமுலைமேருமலையென்பார்
கைகளிவையல்லதிகழ்காந்தண்மலரென்பார்
நையுமிடையன்றிஃதுநற்றுடியதென்பார்
பொய்யில்புறவடிபுதியபுத்தகமிதென்பார்

225 இன்னபரிசெங்கணுமியைந்தமுறையாலே
பொன்னகருநாணமிகுபொற்புடனிலங்குந்
துன்னுபொழில்வைகைநதிசூழ்தரவிளங்கு
மந்நகரிதன்னணியையாரறையவல்லார்

226 சுந்தரமிகுந்திடுசுராதியர்விரும்பு
மந்தமில்சிறப்பினளகாபுரியிதென்னச்
சந்ததமுமிம்முறைதயங்குகவின்மூதூ
ரிந்திரசெல்வத்துடனியைந்திடுமெஞான்றும்

வேறு

227 பங்கமற்றமறைவழுத்துபானுகம்பனாயிரஞ்
சங்கவாயினாலுமித்தலத்துமேன்மைதானுரைத்
தங்கையாயிரத்திரட்டிகொண்டுதீட்டவமைகிலா
திங்கொர்நாவில்யான்விரித்தெடுத்தியம்பலாகுமோ

திருநகரச்சருக்க முற்றியது
ஆகச்செய்யுள் 228

*****

## பாயிரம்

228 செங்கதிர்வெய்யோன்பூசைசெய்தவாறுந் திகழ்திரணாசனன்வீடுசேர்ந்தவாறும்
பொங்குமணிகன்னிகைநீர்பொருந்துமாறும்புகலருந்துன்மனன்கதியிற்புக்கவாறுந்
தங்குதருமஞ்ஞன் முத்திசார்ந்தவாறுந் தன்னிகருற்பலாங்கிபதிசார்ந்தவாறும்
பங்கமில்பாற்கரபுரப்பேர்படைத்தவாறும் பன்னுமெலாப்பவங்களையும்பாற்றுமாறும்

229 செங்கமலன்சாபமுற்றுந்தணந்தவாறுந் திருமகடன்சாபந்தான்றீர்ந்தவாறு
மங்கையவதாரஞ்செய்தமர்ந்தவாறும்வார்சடையோனவளைமணம்புணர்ந்தவாறுந்
தங்கியதக்கன்வேள்விதகர்த்தவாறுஞ் சங்கரிபூவணத்தில்வந்தவாறுந்தீர்த்தங்
கொங்கணிசுச்சோதிதானாடுமாறுங் கோதில்பிதிர்களைமுத்திசேர்த்தவாறும்

230 அருளுடனே தீர்த்தங்களாடுமாறுமருங்கலியின்வலியை நளனகற்றுமாறுந்
திருவிழாவணிபெறச்செய்வித்தவாறுஞ் சிதம்பரநல்லுபதேசஞ்செய்தவாறுந்
தருமுலகிற்சகாத்தமாயிரத்தைஞ்ஞூறு தங்குநாற்பான்மூன்றுதந்தவாண்டிற்
பொருவருநற்புலவோர் சொற்புலமைகாட்டப் புட்பவனபுராணமெனப் புகலலுற்றேன்

பாயிரமுற்றியது

ஆகச் செய்யுள் 230

*****



## முதலாவது
## சூரியன் பூசனைச்சருக்கம்

231 ஓசைகொளித்தலத்துலகியாவையும்
வீசியகனையிருள்விழுங்குகின்றவான்
றேசுடைத்தினகரன்சிவலிங்கந்தனைப்
பூசனைபுரிந்ததுபுகலுவாமரோ

232 பன்னருமாதவம்படிவமாகியே
மன்னியசவுநகமகிழ்ந்துகேண்மியா
வென்னலுமன்னவனியம்பருந்தவந்
துன்னுநற்சூதனைத்துதித்தன்மேயினான்

233 உன்றனக்கிணையிலையுலகமூன்றினு
முன்றனக்கிணையிலையுரைக்குங்காலையி
லுன்றனக்கிணையுனையுரைக்குமாதலா
லுன்றனக்கொன்றுளதுரைசெய்வாமரோ

234 அங்கண்வானகத்திருளகற்றுமாரழற்
பொங்குவெங்கதிரவன்பூசையாற்றவே
சங்கரன்விரும்பியேதானிலிங்கமா
வங்கவணடைந்தவாறருளுநீர்மையால்

235 ஒன்றியகலையெலாமோதியேயுணர்
வென்றிமேவியபுகழ்வியாதன்றன்னரு
டுன்றியவருந்தவச்சூதமாதவ
வின்றெமக்குரையெனவியம்பினானரோ

வேறு

236 கங்கைதங்கியசெஞ்சடிலசேகரன்முன்கண்ணகன்கதம்பமாவனத்திற்
கங்கிதிக்கதனிலறைந்திடுகின்றவரைதலையிட்டகாவதத்தின்
மங்குறோய்புட்பவனமதிலென்றுமன்னுமெம்பிரான்மகிழ்ந்தருளுந்
துங்கமாதவநற்சவுநகவென்றுசூதமாமுனிவரன்சொல்வான்

237 அந்தநல்வனத்தினாதிகாலத்திலரியயன்முதற்கடவுளர்கள்
வந்துபோற்றிசைக்குமாண்பினதாகிமலைமகள்வளர்க்கும்வான்றருவாய்ப்
புந்திகொள்பாரிசாதமென்றொருபேர்புனைந்துநீங்காதுபொங்கொளியா
யிந்திராதியர்சேரெண்டிசாமுகத்துமெங்கணும்பரந்துமிக்கிலகும்

238 கெழுதருநன்னீர்க்கிருதமாலையெனுங் கேழ்கிளர்வைகையங்கரைமேன்
மொழியுமத்தருவின் மூலத்தினோங்கி முளைத்தெழுசிவலிங்கவடிவாய்
வழிபடுமடியார்மனங்கொளநினைந்தவரந்தனைநினைந்தருள் புரிந்து
விழைவினெஞ்ஞான்றும் வீற்றினிதிருப்பன்விண்ணவன்கண்ணுதற்பெருமான்

239 செங்கண்மால்விடையூர்சிவபிரான்றனக்குத்தெக்கிணதிக்கதிற்றிகழந்து
மங்கலவிளைவான்மறைமுறைவழாதுமன்னியவத்தலந்தன்னி
லங்கண்மாஞாலமெங்கணும்புகழுமழகியமின்னனையாகி
யெங்கணாயகிதானிருந்தவம்புரிந்தே யியைந்திடுமியல்பினெஞ்ஞான்றும்

240 அன்னதொல்சிறப்பி னருந்தவமிழைக்குமந்தநற்பொற்கொடியான
கன்னிதன்முன்னேகருங்கடற்றோன் றுங்கதிர்க்குலம்பரப்புமாதவன்றான்
பன்னுமான்மாக்கள்பாவத்தை யொறுப்பான்பண்புறத்திருமணிகன்னி
யென்னுநற்றீர்த்தமேமுலகேத்த வெழில் பெறத் தொட்ட தொன்றுண்டால்

241 இந்தநற்றீர்த்தந்தன்னையோரொருகாலிசைப்பவருறுபவமொழிவர்
வந்ததிற்படிந்தமாத்திரையதனின்வருபிறப்பனைத்தையுமாற்றிச்
சந்ததம்பொருந்துசச்சிதாநந்தத்தடங்கடற்றடத்தினிற்படிந்தே
யந்தமாதியிலாவருளுடன்கலந்தேயார்வமாமுத்தியைச்சேர்வார்

242 சித்திரவலங்காரத்துடனுயர்வான்சேருமக்கற்பகமூலத்
துத்தமதவங்கட்குறுதவப்பலங்க ளுதவுமெம்பிரானுவந்திருந்தே
யத்தருமலரா லருச்சனைபுரியுமன்பருக்காயிடையருளால்
வித்தகமிகுநல்வேண்டுருக்கொண்டுவேண்டினார்வேண்டியதளிப்பான்

243 அன்னதொல்புட்பவனத்ததுநாப்ப ணதிமனோகரமிகவுடைத்தா
யுன்னதமொருநான்கரையதாய்ச்சுற்றும்பாதயோசனையதையுடைத்தாய்ப்
பன்னுமூவுலகும்பாரிசாதமெனப்பகர்வதாய்ப்பணைபலவுடைத்தாய்
மன்னியபறவைவிலங்குகடம்முள்வருபகையொழிந்திடவைகும்

244 அத்தருநிழற்கீழமரிலிங்கத்தினருளினாலாயிரங்கதிரோ
னித்தமாய்த்தனாதுபதம்பெறுகிற்பா னினைந்துநெஞ்சகங்கொண்டே
சித்திரைத்திங்கட்சித்திரைத்தினத்திற்றேசுறப்பூசனை புரிவான்
சுத்தநீராடித் தூயநீறணிந்து துலங்குகண்டிகைமணிபூண்டு

245 பொங்குலகேத்தும் பூர்வலிங்கத்திற் பொருந்தவாலுகங்கொடுதிரட்டி
யங்கையினொன்றினமைத்ததினிகழ்த்துமாறு போலங்கணன்றனைக்
கங்கைதங்கியசெஞ்சடிலசேகரமுங்கதிர்த்திரணிலவு கான்றொளிருந்
திங்களங்கொழுந்துஞ்செங்கண்வாளரவுந்திருமுகமண்டலமைந்தும்

246 கண்கண்மூவைந்துங் கரங்களீரைந்துங் கவின்றிகழ்படைக்கலங்களுநஞ்
சுண்டிருள்பரந்தகண்டமும்பகுவாயுற்ற நற்பன்னகாபரணங்
கொண்டதிண்டோளுங்கோலமார்பகமுங்குலவுசங்கக்குழைக்காதும்
புண்டரிகத்தினுரிபுனையரையும்பொருந்திய பொற்பதாம்புயமும்

247 சுத்தமாமிதயகமலத்தினின்றுஞ்சுழுமுனாமார்க்கத்தினாலே
சித்தநேர்நிறுவித்துவாதசாந்தத்திற்சேர்ந்துறுசிறந்தமந்திரத்தா
லத்தகுபிராணவாயுவால்வாங்கியலர்தருகரத்தினிலமைத்துச்
சத்தியோடுரியசதாசிவமூர்த்திதன்னையே நன்குறநிசித்து

248 வண்ணமேவியநன்மதுமலர்தன்னைவண்கரங்கொண்டுபின்கூப்பி
யுண்ணிகழ்சமனையுன்மனைக்கப்பாலோங்கியே நிட்களமாகித்
தண்ணிலாவெறிக்குஞ்சந்திரரநேகர்தந்தநூறாயிரவொளிசே
ரெண்ணருஞானவுருவமாஞ்சிவனையிலிங்கமத்தியத்தினிலிருத்தி

249 தாபனஞ்செய்தபின்றகுசந்நிதானஞ்சந் நிரோதனந்தந்து
மாபரன்னறக்குச்சுவாகதார்க்கியமும்வழங்கியே காளகன்னிகையுஞ்
சோபனவிலிங்கமுத்திரையுடனே துலங்குகைகூப்புமுத்திரையுந்
தூபமுமலிங்குதீபமுங்கொடுத்துச்சுகந்தநன்மஞ்சனமாட்டி

250 திலந்தருதயிலந்தேனுவைந்துவந்து சிந்தைகொள்கின்ற வைந்தமுத
நலந்தருமான்பானண்ணிடுந்ததிநெய்நன்மதுகன்னலின்சாறு
பலங்குளிர்தெங்குசந்தனக்குழம்புபத்தியினாட்டி நீராட்டித்
துலங்கியவைகைத்துறையினீர்சுமந்தசுரிமுகச்சங்கநீராட்டி

251 மகிழ்தருதிருவொற்றாடையுஞ் சாத்திமருவுசெம்பட்டுடன் மன்னு
மகமகிழ்கலவையாரமேலணிந்தேயரவகங்கணங்கரத்தமைத்துப்
பகர்நவமணிகள்படர்வெயிற்கிரணம்பரப்புமாபரணமுமணிந்து
திகழ்மணிமகுடஞ்செங்கதிரெறிப்பத்திருமுடியிலங்குறச் சேர்த்தி

252 பரவிடுநைவேத்தியம்பலவளித்துப் பாத்தியாசமனமுங்கொடுத்துத்
திருமிகுதூபதீபமுங்காட்டித்திருவெழுத்தஞ்சையுஞ்செபித்தாங்
குரியநற்பூசைப்பலனரற்குதவியோரிருகாலமுஞ்செய்து
குருமலர்கொண்டுபணிந்தெதிர்முக்காற்கும்பிட்டுத்தட்டமுமிட்டு

253 நிருத்தனுண்மகிழநிருத்தமுஞ் செய்து நீடுநற்கனவதிலின்னுந்
திருத்தகுமயன்மாறேடியுங்காணாச்சிவலிங்கதரிசனங்காணுஉ
வருத்தியாற்கண்களருவிநீர்பொழியவாநந்தபரவசனாகித்
தரித்திடுஞ் சென்னிக்கரத்தினனாகிச்சதுர்மறைத்துதிபடித்தனனால்

வேறு

254 சுகரன்புடையானேதுதிசொல்வார்புடையானே
யிகல்சார்படையானேகுறளெழுசூழ்படையானே
திகழ்கண்படையானேயுறுசெனனம்படையானே
புகழ்மன்றுடையானேபொருபுலித்தோலுடையானே

255 அண்டங்கரியானேயரியயர்கட்கரியானே
விண்டங்கொளியானேசதுர்வேதத்தொளியானே
பண்டங்கிசையானேயுறுபவமொன்றிசையானே
கண்டங்கரியானேநுதற்கண்டங்கரியானே

256 மேவும் பொருவில்லாய்மகமேருப்பொருவில்லாய்
சேவின்றுவசத்தாயருடினமொன்றுவசத்தா
யோவில்லுயிர்க்குயிராய்திருவுருவம்பரமுயிராய்
தாவில்சிவபதத்தாய்திகழ்தருதாமரைப்பதத்தாய்

257 கதிநல்குசங்கரனேயுலகவைநீக்குசங்கரனே
விதிநல்குகங்கையனேசடைமிசைதாங்குகங்கையனே
கதநல்குமங்கணனேயுமிழ்கடுநாககங்கணனே
திதனானவங்கியனேதிகழ்திருமேனியங்கியனே

258 மனமொன்றுமெம்மானேமழுமானேந்துமெம்மானே
புனல்சேர்சடையானேபுவிபுகழ்மாசடையானே
சினமால்விடையானேயடிசேராவிடையானே
கனலேந்தினகரனேயெனத்துதித்தான்றினகரனே

வேறு

259 அன்னதோர்காலைதன்னிலவ்விலிங்கத்துநாப்பண்
கன்னியாயுலகமீன்றகௌரிமெய்கலந்துதோன்றச்
சென்னியிற்றிகழ்ந்தகற்றைச் செஞ்சடாமகுடவேணி
மன்னியமதிக்கொழுந்தும்வாளராவிலங்குமார்பும்

260 அங்கண்மாஞாலங்காக்குமபயமும்வரதமுஞ்சேர்
பொங்கொளிதிசைவிளங்கும்போர்மழுப்படையுமானும்
வங்கவாரிதியினஞ்சமருவுகந்தரமுமேனி
தங்குவெண்ணீறுமிக்குத் தயங்குகண்டிகைநற்றாரும்

261 கோடிசூரியருங்கோடிகுளிர்மதித்திரளுமொன்றாய்
நீடியவொளியும் வேங்கைநிகழ்பொறியதளுந்தோன்ற
மாடுறுமயன்மால்விண்ணோர்மாதவர்முநிவர்போற்றத்
தேடரும்பொருளையந்தத்தினகரன்றெரியக்கண்டான்

262 நித்தமாயருள்சுரக்குநிருமாலன்றனைக்காணுஉ
வத்திரமின்றியானேயதிபதியாகவேண்டுஞ்
சுத்தமாமென துமிக்கதொல்லிரும்பதத்திற்கென்னாப்
பத்தியாற்சததளச்செம்பங்கயபதத்தில்வீழ்ந்தான்

263 பதந்தனில்வீழ்ந்திறைஞ்சும்பரிதிவானவனைநோக்கிக்
கதங்கொடுகாமற்காய்ந்தகண்ணுதல்யாருங்கேட்ப
விதங்கொளீரேழ்பொழிற்குமிக்கிறையாயிலங்கி
வதிந்துநீவாழ்நாள்காறும்வாழ்கெனவரங்கொடுத்து

264 திக்கிலகொளிப்பரப்புந்தினகரகேளெமக்கிங்
கக்கினிகோணந்தன்னிலரும்பெருந்தீர்த்தமொன்ற
மிக்கபூமுகையவிழ்ந்து வெறிகமழ்தரவிளங்குந்
தக்கநின்னாமந்தன்னாற்சதுரமதாகத்தந்து

265 மலர்தலையுலகம் போற்றமணிகன்னியென்னுநாம
நிலையுறநிறுவிநாளுநீடொளியிலங்கக்காண்டி
குலவிடுநின்னாற்பூசைகொண்டுநல்லருளால்யாமு
மிலகினமித்தலத்திலென்று மிவ்விலிங்கந்தன்னில்

266 வீசியவிருள்கால்சீக்கும் வெஞ்சுடர்ப்பரிதிநின்றன்
பூசனைபுரிந்தமேலாம்புண்ணியபரிபாகத்தா
லாசைகூர்ந்தருளாலிந்தவணிகிளர்பாரிசாதத்
தேசுறுதிருநிழற்கீழ்ச்சேர்ந்துடன் றிகழாநின்றோம்

267 இச்சையாலுருவங்கொண்டேயிருக்கும் நம்மிலிங்கத்திற்குப்
பச்சிமதிக்கினோங்கும் பாரிசாதத்தின்மூல
நிச்சயமுறயாமென்று நிகழ்ந்தினிதிருத்தலாலே
யச்சுரதருமுன்செய்தவருந்தவம்யாதோவென்றான்

268 கருணைகூர்கனலிதெய்வகம்மியன்றனையழைத்து
விரிகடலுலகுக்கெல்லாமேதகுவிழைவுடைத்தாய்த்
திருமிகுகின்றசெம்பொற்சிகரநீள்கோயிலாக்கித்
தரைபுகழ்தீர்த்தமொன்று தன்னிகராகக்காண்டி

269 காண்டிநீயிருந்ததான கண்ணகன்ஞாலந்தன்னில்
வேண்டுபுமிகவுமேலாய்விளங்கிடவெந்தஞான்று
நீண்டகலிருவிசும்பினிறையணிகுறைபாடின்றிப்
பூண்டநின்பதத்திற்பின்னர்ப்போதியாலெனபுகன்று

270 பன்னரும்புவியின் மேலாம்பான்மைசேர்தானந்தன்னி
லுன்னருந்தவத்தின்பேற்றாலுத்தமோத்தமமித்தான
மன்னுமித்தலத்தின் யாவர்மருவியேமகிழ்வின்வாழ்வ
ரன்னவர்க்குண்டாமுத்தியென்பதற்கையமின்றால்

271 சந்ததம்விளங்கியாமித்தலந்தனிலிருத்தலாலே
வந்திவெண்வைகுவோர்க்குமருவுநம்மருளினாலே
யந்தமொன்றின்றிநாளுமறம்பொருளின்பம்வீடென்
றிந்தநால்வகையுமுண்டாமென்றனனெவர்க்கமேலோன்

272 பூதலத்திருள்விலங்கிப்பொங்குவெங்கதிர்பரப்பு
மாதவன்றனக்குநாதனருளுருவாகத்தோன்றி
மேதகுமந்திரத்துண்மிக்கமந்திரமாயுற்ற
வோதருமஞ்செழுத்தைவிதிப்படியுபதேசித்தான்

273 அவ்வுபதேசந்தன்னையங்கணனருளக்கேட்டுக்
கவ்வையொன்றின்றிமிக்ககருத்தினையொருக்கிநேராய்ச்
செவ்விதினுணர்ந்து மேலாந்திருவருள்கண்ணாக்காணு
மிவ்விறையிருந்தவாறிங்கிப்பரிசெனத்தெளிந்து

274 வானந்தத்தருவின்மூலமருவிவெம்பரிதிவானோன்
ஞானந்தானிஃதென்றோதுநற்றிருவஞ்செழுத்தான்
மோனந்தானாகியன்பின்மோகித்துமுடியாவின்ப
வானந்தத்தழுந்தியொன்றாயற்புதமடைந்திருந்தான்

275 அருளுடன்கூடியொன்றாயானந்தத்தேனருந்தும்
பரிதிவானவனையெங்கோன்பங்கயச்செங்கைதன்னாற்
கருணையிற்பரிசித்தந்தக்கதிரவன்கண்டாக்காமுன்
றிருவருள்பிரகாசிக்குஞ்சிவலிங்கந்தனின் மறைந்தான்

276 தீதறப்பரிசிக்கின்றசிவகரவிசேடந்தன்னா
லாதரத்துற்ற நேயமதினின்றும்விழித்துப்பாரா
வோதுபுத்தேளிர்தம்மாலொருவராலறியவொண்ணா
நாதனைநேடிக்காணனற்றியானத்தினுற்றான்

277 நீடுமத்தியானநீங்கிநேரில்பஞ்சாக்கரத்தைப்
பீடுறவுபதேசங்கொள்பெருகொளிப்பரிதிப்புத்தேள்
வாடுநுண்ணிடைசேர்கின்றமங்கைபங்கொழித்த வெங்கோன்
கூடுமன்பினிலெடுத்துக் கூறியதகத்துக் கொண்டான்

வேறு

278 அந்தவாறருளினாலமைப்பனென வண்ணறன்றிருமுனண்ணுசீர்
சுந்தரம்பெறநிறைந் திலங்குகதிர்துன்றுதன்றனது செங்கையாற்
கந்தநீர்மருவவுந்துகாதலொடுகல்வியுற்பலசுகந்தநேர்
சந்தமேவுமரவீந்தமாகமிகுசதுரநன்கொடுசமைத்தரோ

279 நானமேவுநர்தமக்குநன்குமிக நண்ணநெஞ்சகமதெண்ணியே
யூனமில்கருணைஞானதேசிகனுரைத்தமந்திரமதுற்றசீர்
மோனஞானமுடன்மூழ்கியத்துவிதமாகியின்புடன்முயங்கியே
வானளாவிவருகங்கையாதிதிருமன்னுதீர்த்தமவையுன்னியே

280 தற்பரம்பொருளினாணையாலுரியதாபனஞ்செய்துதருக்கினான்
மற்றுமோரிணையிலாதவேதநெறிமந்திரந்தனைமொழிந்துசங்
கற்பபூருவமதாகநெஞ்சினிடைகருணைகூர்ந்துவகைகருதிநன்
குற்றதீர்த்தமடுமூழ்கினானுலகினோங்குபேரொளியினும்பரான்

281 மாதிரம்பரவுமாதிபுட்பவனவைபவத்தினதுசெய்தியாற்
சோதிகட்குமிகுசோதியாயிலகுதுங்கமேவுதிரளங்கமா
யோதுயிர்க்குமுதலோனுமாகியுயருத்தமத்துறுவரத்தையேய்ந்
தாதபக்கடவுணாதனுற்றவுலகாதிபத்தியமடைந்தனன்

282 மன்னுநல்விசுவகன்மனைக்கருதிவம்மினென்றுகொடுவல்லைகூய்ப்
பொன்னினோங்குவளர்புரிசையைந்தினொடுபொற்பினீடுமுயர்கோபுரந்
துன்னுகின்றசிகரங்களோடிலகுசோதிமாமணிகொளாலயம்
பன்னுமாடமிகுமண்டபங்கள் சிலபண்டுபோற்பரிதிகண்டனன்

283 பொற்பினீடியசதாசிவத்தின்மகிழ் பூவணத்துறைபுராதனர்க்
குற்சவந்தனைநடாத்தவெண்ணிமன்னுவகைபூத்தெழுசுவேச்சையால்
வெற்றியானைமுகனாதிவிக்கிரகம்வேறுவேறுமறைவிதியினா
லற்பின்மேதகையசெம்பொனாலுருவமைத்துநன்மணியழுத்தியே

284 கதிரவன்றனதுபெயரினானிலகுகாந்திநாயகனெனும்பெயர்
மதிவயங்கவணிமகுடசேகரநல்வானவன்றனையுமன்றினிற்
சதியினிற்றன்மிகுதாண்டவஞ்செயருடம்பிரான்றனையளித்துநூல்
விதிபதிட்டை செய்துவேதபூசையும்விழாவு மேத்திடவிளக்கினான்

285 வையகத்தின்மலமாயைகன்மமறமாற்றியேவதியுமந்தணீர்
பொய்யிலன்புகொடுபொங்கிலிங்கமதுபோற்றிசெய்துபுரிபூசையாற்
றெய்விகந்தருவிமானமீதுகொடுசெஞ்சுடர்ப்பரிதிவானவன்
வெய்யமாமணியின்மிக்கிலங்கணிவிளங்குதன்னுலகின்மேயினான்

286 பொருவில்புட்பவனவை பவத்தணிபுகழ்ந்திடும்புவனமெங்கணு
மரியவப்பதியின்மேன்மையீதெனவளந்துரைக்கவெளிதாகுமோ
பரவுமப்பதியின்வைகுநர்க்குரியபரபதம்பகர்தல்சரதமாந்
தருணமிக்கபுகழருண்மனத்திடைதருக்கிவாழ்மிகுதவத்தினீர்

287 யாதொர்புட்பவனவத்தலத்தினரனஞ் செழுத்தையருள்செய்தனன்
யாதொர்செங்கதிர்தனக்குமந்திரவெழுத்தினிற்பலமேய்ந்திடும்
யாதொர்நற்றலமதென்பதொன்னறுதற்குநேர்புகலலாவதோ
யாதொர்நற்றலமதுண்டெனப்புகறலாவதோர் தலமுமில்லையே

288 ஞாலமீதிலருண்மேனிகொண்டுவருஞானதேசிகனதருளினா
லாலநீழலறநால்வருக்கருளுமண்ணறன்றிருமுனண்ணியே
சீலமோடுதிருவஞ்செழுத்தையொருகால் விதிப்படி செபித்துளோர்க்
கேலுமுத்தியி·தையமென்பதிலையிருபிறப்பின்வருமிருடிகாள்

289 மண்ணுகின்றமணிகன்னிகைப்புனலில்வந்துமூழ்கியருணந்துசீர்த்
தொன்மரத்தினுறுநன்னிழற்கண்மகிழ்துன்னுசோதிதிருமுன்னரே
பன்னுமன்னதுபதேசம்யாவர்சிலர்பண்ணினோரதுபரித்துளோ
ரின்னபான்மைநிகழிருவரும்பொருவிலீசனல்லுருவிசைகுவார்

290 இந்தநற்பதியிடத்தினீறணியுமெண்ணிலாருயிர்களுக்கெலா
மந்தமிக்கதிருவஞ்செழுத்தினுபதேசமெய்தலரிதரிதரோ
விந்தநற்கலியுகத்தினிந்தவுபதேசமானதுபலிக்கிலிங்
கிந்திரப்பதவியின்பமுற்றுமிகவுடையவன்கதியடைவரால்

291 வெந்தழற்பொடியையொக்குமித்தலம் விளம்பிலென்றவையுளங்கொளா
வந்துபொற்பின்மணிகன்னிகைக்கமலவாவிமூழ்குபலமேவலா
லந்தமற்றதிருவஞ்செழுத்தைவிதியடைவினிற் கொடுசெபித்தருட்
செந்தமிழ்ப்பொதியமுநிவனங்கை கொடுசிந்துவைப்பருகினானரோ

292 பன்னுகின்றவறுபதமுரன்றிசைகொள்பங்கயத்திருமடந்தைசேர்
பொன்னினீடுமுயர்புரிசைசூழ்ந்திலகுபூவணப்பதியின்மேவியே
மன்னுகங்கைமுதலாதிதீர்த்த மனமகிழ்வின்வைகுபுகழ்மாமணி
கன்னிகைப்புனலின் மூழ்குமன்னவர்கள்கயிலைவெற்பினிடைபயில்வரால்

293 மங்கலங்கொடனுமாகநற்றலை வழங்குகின்றதொருதிங்களிற்
பங்கயத்தினொடுபானல்செங்குவளைபன்மலர்கொண்மணிகன்னிகைப்
பொங்குநற்புனிததீர்த்தமாடுதல்பொருந்துமாறுகொடுபோதறான்
றங்கியங்கடையகிற்பரேலவர்கள்சங்கான்றனுருவங்கொள்வார்

294 சிவபிரான்றனதுதிருமுன்மேவுநதி தீர்த்தமன்னுமொருசார்பினி
னிவறல்சேர்தருமொரெய்யும்வெங்கணையெழுந்துசென்றுவிழுமெல்லைவாய்ப்
பவமெனும்பரலையெரிகொளுத்துமிகுபாவநாசமதெனும்பெயர்
நவையிறீர்த்தமதினாடினர்க்குலகநாடுமுத்தியதுகூடுமால்

295 சித்திரைகொள்சித்திரைமெய்திங்கள்கலைசேர்நாள்
வைத்தபுகழாதபனன்மந்திரநவிற்றி
யுய்த்தமணியோடையினினுச்சிதனின்மூழ்கி
நித்தனை வணங்குநர்கணீடுகதிசேர்வார்

296 இந்தநலிரும்பதியிருந்தகையியம்பின்
முந்தையொருநான்மறைமுடிந்தபொருடானாய்
நந்துசிவஞானமதுநன்குறுவதாகி
நிந்தையறுநின்மலமதாய்நிகழ்வதாகி

297 ஏதமிலதோர்பிரணவச்சொருபமேயாய்ப்
பாதகமறுத்திலகுபஞ்சவனமாகி
யாதிநடுவந்தமறியாதபரமாகி
யோதரியவாதிசைவசித்தாந்தவுருவாய்

298 பொருந்தியிருமின்பமிகுபூவணமதன்கட்
டிருந்துணர்வின்யாவர்சிலர்சென்றுதரிசிக்கி
னருந்தவமிழைத்தருளினங்கிருடிகாளே
யருக்கதியவர்க்கடையுமையமிலையம்மா

299 கிட்டுபெயர்மன்னியகிரேதநலுகத்திற்
சிட்டர்தினமும்பரவுதேவிபுரமென்று
மிட்டமுறுகாமியமியாவுமருள்செய்யும்
புட்பவனமென்றுமுலகம்புகழுமாதோ

300 தேற்றமுறவேதிகழ்திரேதநலுகத்திற்
சாற்றிடுமிலக்குமிதனாதுபுரமென்றே
தோற்றமுறுமன்னியதுவாபரயுகத்தி
னாற்றலைப்பிரானகரமென்றுபெயர்நண்ணும்

301 ஈற்றின்வருகின்றதொரிருங்கலியுகத்தி
னாற்றிசைகள் போற்றிசெயுநன்குறுதவத்தோர்
மேற்றிகழும்வெஞ்சுடரின்மேதகையபேராற்
பாற்கரபுரப்பெயர்படைத்ததுபடிப்பால்

302 பூரணமெய்ஞ்ஞானமதுபுந்திகொடுவஞ்சம்
வேரறவகழ்ந்திடுநல்வேதியர்கண்மன்னோ
வேருறுமானந்தவனமென்றுமெணவொண்ணா
வாருயிர்கண்முத்திபெறுமாச்சிரமமென்றும்

303 திக்குலகெலாம்புகழ்சிதம்பரமதென்றும்
பக்கமுறுதக்கிணகாசிப்பதியதென்றுந்
தக்கசதுர்வேதபுரமென்றுமதுசார்பேர்
மிக்கபிதிர்முத்திபுரமென்றுநனிமேவும்

304 இத்தலநரர்க்குறவிருந்திருவளிக்கு
மித்தலமிரும்பவமியாவையுமொழிக்கு
மித்தலமிலங்குசிவஞானமதுநல்கு
மித்தலமநாதியுளதாயியையுமன்றே

305 தொக்கவுயிர்கட்கிலகுதொன்னகரிதனுட்
டக்கவரமிக்குதவுதந்திமுகவெந்தை
யிக்குலவுநற்பதியிரும்பெருமையாலே
முக்கணிமலன்றனையருச்சனைமுடித்தான்

306 வென்றிதருமித்தலநன்மேன்மையுறலாலே
யென்றனதுவாய்மையினிசைக்கவெனதன்றே
மன்றவொருநூறுவருடந்தனினுமாதோ
துன்றுகதைவல்லபடிசொல்லமுடியாதே

307 நிகழ்மறையுணர்ந்தசவுநகமுநிவநீடு
புகழுலகெலாம்பரவுபூவணமிகுஞ்சீர்
மகிழ்பிரமகைவர்த்தமாகியபுராணந்
திகழெழுபதென்னுமத்தியாயமிதுசொல்வார்

308 இந்தவகைகந்தனருணந்திபெறவின்பா
லந்தமில்பெருங்கயிலையின்கணருள்செய்தா
னர்துமறையீர்களௌனநைமிசவனத்திற்
சுந்தரமிகுந்ததவசூதனுரைசெய்தான்

வேறு

309 இந்தனத்திடைசெந்தழல்வந்தபோலிந்தநற்பதிமுந்தவியந்ததோ
ரந்தநற்சிவலிங்கம்விளங்கவேயந்தரத்தவர்செங்கதிர்கண்டசீர்
தந்தவிக்கதைகண்டுபுகன்றுளோர்தங்குநற்செவிகொண்டுபுகழ்ந்துளோர்
புந்தியிற்கொடுவந்துபுகழ்ந்துளோர்பொங்குமுத்தியின்வந்து பொருந்துவார்

சூரியன் பூசனைச்சருக்கமுற்றியது

ஆகச் செய்யுள் 309

*****

## இரண்டாவது

## திரணாசனன் முத்திபெற்ற சருக்கம்

310 ஓதரியவுண்மையதாயோங்குபரி பூரணமாயுவமையின்றாய்ச்
சோதியதாய்ச்சுகவடிவாய்ச் சொல்லரிதாய்ச் சுருதிகளுந்தொடரொணாதாய்க்
காதலினாலனைவர்களுங்காண்பரிதாய்க்காரணகாரியங்கடந்த
வேதமறுபொருளினையாமிதயகமலத்திருத்தியிறைஞ்சுவாமே

வேறு

311 சத்தியஞானமார்சவுநகாதிப
வுத்தமராந்தவத்தோர்கள்சிங்கமே
சித்தநன்குணர்திரணாசனன்றிகழ்
முத்தியையடைந்தது மொழிகுவாமரோ

312 என்னலுமன்னுயிர்க்கிரங்கு...ன்னரு
ணன்னலந்தயங்கிய....கமுகத்தனாய்த்
தன்னிகரரு.... வச்சவுநகன்புகழ்
துன்... சூதனைத்துதித்தன்மேயினான்
(...குறியிட்டுள்ள இடங்களில் எழுத்துக்கள் அழிந்துள்ளன)

வேறு

313 எம்பிரானருளினாலேயாவையுமுணர்தலானு
மம்புவியிடத்துரோமகருடணனெனும் பேரானு
மும்பருமுணரவொண்ணாவொரு பொருளுடைமையானு
மிம்பரினுனக்குநேராமிருந்தவவாணரின்றால்

314 உலகெலாம்பணிந்து போற்று முயர்தவத்தும்பரானே
நிலவுபேரின்பநல்குநீடருட் பெற்றியானே
குலவியநண் பெஞ்ஞான்றுங்கூட்டியகொள்கையானே
கலையுடையோர்கடம்பாற்கழிபெருங்காதலானே

315 சைவமார்க்கண்டங்காந்தந்தங்கியவிலிங்கங்கூர்மம்
வையகம்புகழ்வராகம்வாமனமருவுமச்சம்
பொய்யறுபிரமாண்டஞ்சீர்பொருந்துநற்பவுடிகத்தோ
டெய்தியபிரமம்பாற்பமிசைத்திடுமிவற்றினோடும்

316 காதல்கூர்நாரதீயங்காருடம்வயிணவஞ்சூழ்
மாதிரம்புகழும்பாகவதத்துடன்மருவுமேத
பேதமிலாக்கிநேயம்பிரமகைவர்த்தமியாவு
மோதிடநின்னாற்கேட்டோமொன்பதிற்றிருபுராணம்

317 ஆங்கவைதன்னின்மேலாயறைந்தனையலர்ந்தசெம்பொற்
பூங்கொடிபடர்ந்துநீடும்பூவணமதனைப்பின்னு
மோங்கியகாதைநாப்பணுரைத்தனைபூருவத்திற்
பாங்கினாற்கும்பகோணமென்றொருபதியதன்றே

318 மக்களுக்கிழைத்தநீதிமாதவம்பலிப்பதாகித்
தொக்கவெம்பிறப்பிற்சூழுந்தொல்பவந்துடைப்பதாகித்
தக்கசெல்வங்களெல்லாந்தானருள்புரிவதாகித்
திக்குடையுல்கம்போற்றுந் தீர்த்தங்கள் பலவுமாகி

319 கலிவலிதொலைப்பதாகிக்கண்ணகன்ஞாலந்தன்னி
னலகிலாவுயிர்கட்கெல்லாமாநந்தமளிப்பதாகிப்
பலமுநிகணங்களோடுபண்ணவர்பணிவதாகிக்
குலவுமாச்சரியமாகிக்கோதிலாச்சிரமமாகி

320 சோதியாயுலகமெல்லாஞ்சுத்தமாக்குவதாய்மேலா
யாதிதெய்விகத்தினோடுபவுதிகமான்மிகத்தைப்
போதல்செய்பெற்றித்தாயபூவணந்தன்னின்மன்னு
மேதகுதானமுண்டேல்விரித்திவண்விளம்புகென்றான்

321 விளம்புவனென்றுவேதவியாதன்மாணக்கன்சொல்வா
னுளங்கொளுந்தவத்தோரேறேயுற்றநின்பாக்கியத்தாற்
களங்கமின்றாயதோர்நற்காரணந்தன்னான்மாதோ
வளந்தறிவொண்ணாப்புந்தியடைந்தனையன்றோவென்றான்

322 மண்ணிலாயிரம்பிறப்பின்மனமொழிகாயந்தம்மாற்
பண்ணிடுங்கருமத்தாலேபல்பெரும்பதியினென்று
மெண்ணும்யாகாதிகன்மமியற்றியேதீர்த்தமாடி
நண்ணுபுண்ணியதானத்தினற்றவம்புரிந்துமாதோ

323 சொல்லருமின்பமுற்றுச்சுவர்க்காதிபோகந்துய்த்துப்
பல்பயனருந்திப்பின்னர்ப்பாரிடைநரர்களாகி
யல்லலொன்றின்றிநாளுமரியநற்றருமந்தன்னி
னல்லதொல்குலமுற்றோற்குநண்ணிடும்புந்திதானே

324 புந்திதானுடையதாகப் பொருவிடைப்பாகன்மேவு
மந்தணமானதானமான்மியந்தனைவினாவுஞ்
சிந்தனையுண்டாமீதுதீமையோர்க்கடையலாகா
திந்தநீர்முறைமைநீசெயிருந்தவப்பேறேயன்றோ

325 அந்தணர்தமக்குமேலோயானுநன்கடைந்தேனாக
நந்துநின்னளியென்றோதுநாரினாற்பிணிக்கப்பட்டேன்
முந்துசெல்வத்துச் செல்வமுழுதொருங்குடையோய்நின்னாற்
புந்திகொள்செல்வம்பெற்றோனாதலாற்புகல்வன்கேண்மோ

326 உலகெலாமொடுங்கும்போதினுததிகளேழுமொன்றாய்த்
தலைதடுமாற்றந்தந்துதாபரசங்கமங்க
ளிலயமதடைந்தகாலையிருந்தரைதனக்குநாளு
மலகில்காரணத்தினோடங்கமைந்தகாரியமுமாகி

327 பெற்றிடுமமுதகும்பம்பிரளயசமுத்திரத்தி
னுற்றதனாப்பணின்றுமுலாவுபுவதியுங்காலை
மற்றையததனைவிண்டுவந்துமுக்கூறுதந்து
சிற்சிலகாலஞ்செல்லத்தெருண்டவானனுகிமாதோ

328 பூவுறைதிருவின்மேலாம்பூவணந்தன்னின்முன்னுந்
தாவில்சீர்க்கும்பகோணந்தன்னிலாங்கதற்குப்பின்னு
மேவியததன்பினாமம்விளங்குநற்றலங்கடோறு
மூவுலகங்கள் போற்றுமுக்கணனருளின்வைத்தான்

329 நாமநீர்வையம்போற்றுநல்லமிர்தாம்மிசத்தொன்
றேமமாம்புட்பமாகியின்னமுதுருவமன்னிப்
பூமகள் பொருந்திவாழும் பொழிறிகழ்பூவணத்தின்
மாமணிகன்னிகைக்கண்வந்ததுவீழ்ந்ததன்றே

330 நிகழ்தருமருளினாலேநிறைந்தநன்னேயத்தோடு
மகிழ்சிறந்தோங்குமாதிவருணகேண்மருவுதீர்த்தந்
திகழ்மாயாதீர்த்தமென்றுஞ்செங்கண்மால்விடையின்பாகன்
புகழ்மணிகன்னியென்றும் பொருந்தியதிரண்டுநாமம்

331 தருமமாம்பொருடனக்குத்தங்கியவங்கிதிக்கிற்
றிருந்தழகியமின்னன்னைதிகழ்திருமுன்னர்ப்பாங்காற்
பொருந்துதெய்வீகமாமப்புநிததீர்த்தம்படிந்தோர்க்
கரும்பிரமகத்தியாதியாம்பவமனைத்துநீங்கும்

332 பொழிறிகழ்புராதனத்தெம்பூவணங்கோயில்கொண்ட
குழகனைத்தொழுமுன்செம்பொற்கொடிதனைக்கும்பிட்டோர்க
டொழுதிடுமக்கணத்திற்றொடர்புறுந்தோடந்தன்னால்
விழுவர்களகோரமென்னும்வெங்கொடுநிரயந்தன்னுள்

333 ஆதலினன்புகூர்ந்தேயரும்பெருங்கலைதெரிந்த
மூதறிவுடையோர்முக்கண்மூர்த்தியைத்தொழுகமுன்ன
மாதலினீதியாலேமங்கையையங்கைகூப்பிப்
பாததாமரையிற்பின்னர்ப்பணிந்திடக்கடவரன்றே

334 மெய்முநிகணங்கட்கெல்லாம்விழைவுறுந்தவத்தின்வேந்தே
யெய்தியதெனதுசிந்தையையமொன்றிதனையின்னே
பொய்யறுகேள்வியோய்நீபோக்குவதன்றியிந்த
வையகந்தன்னில்வைகுமாதவரில்லைமாதோ

335 என்னெனிலியம்பக்கேண்மோவிறைவியையிறைஞ்சுமுன்னர்த்
தொன்னெறிசிவலிங்கத்தைத் தொழார்க்குறுந்தோடமென்றி
யன்னதுதான்வந்தெவ்வாறடைந்திடுமீதுபூர்வந்
தன்னில்யான்கேட்டதின்றாற்சாற்றுதிதவத்தோயென்றான்

336 சாற்றுகேன்சநற்குமாரன்றானுமீதையமுற்றே
நாற்றலைப்பெருமான்றன்னை நணுகுமுன்னயந்துகேட்ப
வேற்றமாமிதிகாசத்திலெடுத்தவனிசைத்ததொல்சீர்
மாற்றமில்காதையொன்றுமாதவத்தலைவகேண்மோ

வேறு

337 முன்னாதியுகந்தனின்மோதுதிரைத்
தென்னார்ந்தகௌதமிதீரமுறு
மந்நான்மறையோர்குலமாதவனாம்
பன்னாசனன்றன்பரிவின்வருவோன்

338 திருவின்மகிழுந்திரணாசனனென்
றருமந்தபெயரதுதந்துடையோன்
றருமந்திகழ்வைதிகசைவனுளங்
குருவின்சரணங்குடிகொண்டிடுவோன்

339 வழுவாதருளின்வழிநின்றிடுவோன்
பழுதானவையொன்றுபகர்ந்தறியான்
முழுமாதவமென்றுமுடித்திடுவான்
செழுநான்மறைசேர்திருவாயுடையான்

340 மிகுமேதகுநல்விரதந்தருவோன்
றொகுமாதருமத்துறைநின்றிடுவான்
புகல்வேள்விகணன்குபுரிந்திடுவான்
சகவாழ்வுதணந்திடுதன்மையினான்

341 வேதங்கரைகண்டருள்வித்தகனீ
டேதந்தருசெய்கையிசைந்தறியா
னோதும்புவனத்துயிருக்குயிரா
நாதன்புகழன்றிநவின்றறியான்

342 செவ்வான்மதிபோற்றிகழ்நன்னுதலா
ரவ்வாழ்வெனுநீடலையாழியிடைக்
கவ்வாதுயருங்கதிதன்னையினி
யெவ்வாறடைவோமெனவெண்ணினனால்

343 பொய்வாழ்வினையேபொருளென்றுதின
மெய்வாழ்வினையேவிடுகின்றனமா
லைவாய்வருபொருளினவாவினைநீத்
துய்வான்வழியாமுணர்கின்றிலமால்

344 பேராதுறுநற்பொண்ணாசையினா
லாராதுலகத்தடையக்கடவே
னேராருமிலாநிமலன்னருளாற்
சீரார்கதியெவ்வழிசேர்குவனால்

345 விண்ணாடர்களும்மேலானவரும்
பெண்ணாசையினாற்பிழைபெற்றனராற்
பெண்ணாசைவிடப்பெறுகின்றவரே
கண்ணார்நுதலான்கழல்சேர்குவரால்

346 சிறைசேருடலின்செயன்மாண்டிடவோர்
குறிதானருளுங்குருதேசிகனா
லறிவாலறியுமருளாலறியப்
பெறுபேறினியான்பெறுமாறெவனோ

347 கைம்மான்மழுவுங்கனல்சேர்விழியு
நம்மாதரவானனிநாடரிதா
லிம்மானுடர்போலிம்மாநிலமேற்
பெம்மானருளப்பெறுமாறெவனோ

348 என்னாவிவைபன்னியிரங்கியெழா
முன்னான்மறையோதியமூதறிவாற்
றன்னாசிரியன்றனை யெய்திடுவா
னன்னாமநவிற்றிநடந்தனனால்

வேறு

349 கோடிவான்மதியமுங்கோடிபாநுவு
நீடியபேரொளிநிறைந்தமெய்யனை
வீடருந்தவத்தினான்மிகச் சொலித்திடும்
பீடுறுதேசினாற்பிறங்குவான்றனை

350 படர்புவியிடத்துயிர்க்கருளும்பான்மைசேர்
நடையனைநான்மறைநவிற்றுவான்றனைத்
தடைபடாதருளினாற்சார்ந்தநெஞ்சனை
யிடருறுமில்லறமிறப்பிப்பான்றனை

351 புண்டரநீற்றணிபொலிந்தமுண்டனை
வெண்டிருநீறதுவிளங்குமெய்னைக்
கண்டிகைகொண்டிடுகவின்கொண்மார்பனைக்
குண்டிகைதாங்கியேகுலவுங்கையனை

352 முருகவிழ்தாமரைமுகத்தினான்றனைப்
புரிமணமிசையினிற் பொருந்துவான்றனைத்
திரிபுரமெரிசெய்தசிவபிரான்றனின்
மருவியதிருவுருவயங்குவான்றனை

353 விட்டிடும்வேணவாவேட்கையான்றனைச்
சிட்டர்கள்பரவிடுந்தேசிகன்றனைக்
கட்டுவார்சடையனைக்கருதருந்தவ
முட்டறுரோமசமுநியைக்கண்டனன்

354 மூண்டெழுகாதலான்முடுகிக்கண்ணுறீஇப்
பூண்டபேரன்பின்மெய்புளகம்போர்த்தனன்
மாண்டகுசிந்தையன்வரம்பின்மாதவங்
காண்டகுமுநிவரன்கழலிறைஞ்சினான்

355 அருள்பெறுமாசையாலடியற்றேவிழு
மரமதுவென்னவேவல்லைவீழ்ந்தெழீஇக்
கருணையங்கடலதாங்கடவுள்கேளெனாக்
குருபரனோடிவைகூறன்மேயினான்

வேறு

356 மங்கையர்மைந்தரென்னும்வங்கவாரிதியின்மூழ்கிப்
பங்கமதுற்றியான்செய்பவத்தினாலழுந்துகின்றே
னங்கதினழுந்தலாலேயறம்பொருளின்பம்வீடென்
றிங்கிவையொன்றுந்தேறேனியம்பிடினிவற்றினென்னாம்

357 இல்லிடையிருந்தலாலேயில்லதேயுண்டாம்பின்னர்ச்
செல்வம்வந்தடையுமந்தச் செல்வமுந்தேயும்பின்ன
ரல்லல்வந்தடையும்பின்னரகமகிழ்வுண்டாம்பின்னர்ப்
புல்லுதற்கரியமேலாம்புத்திரராவரன்றே

358 புத்திரராயகாலைப்பொருந்திடுங்கீர்த்திமிக்கா
மத்தகுமதனானிந்தையடைந்திடுமடைதலாலே
மெய்த்தகுவியாதிவந்துமேவிடுமேவலாலே
நித்தமும்வருத்தநீடுநீடநித்திரையுண்டாகும்

359 நித்திரையான்மூதேவிநிகழுமங்கதனால்வேறோர்
மெய்த்தனம்விருப்புமத்தான்மிக்கிடுந்துன்பமுற்றுச்
சித்தநன்னிலைதிரிந்துதிபங்கிநாடொறுமயங்கி
யத்தமாஞ்சுழியிலாழ்ந்தேயறவுமெய்வருந்துமன்றே

360 வருந்தவேநாளும்பாந்தள்வல்விடவடிவதாகி
யிருந்திடருழக்குமிந்தவில்லிடையியைந்துநாளும்
பெருந்துயர்கொடுகீழ்மேலாய்ப்பிறந்திறந்துழன்றேனானே
யருந்தவமியற்றினெவ்வாறடைந்திடுமின்பமுத்தி

361 குருபரவெனக்குநீயேகூறிடுகதிவேறின்றான்
மருவும்யாகாதிகன்மமாவிரதங்கள்சாந்தி
யரியநற்றவந்தானங்களன்றியேயெளிதிற்சேரு
முரியதோர்கதிக்குபாயமுண்டெனினுரைத்தல்வேண்டும்

362 சுந்தரத்தவத்தாலங்கஞ்சொலித்திடுஞ்சோதியானே
சிந்தையினுணர்ந்துவல்லேதிருவருள்புரிதியென்ன
வுந்துகாதலின்மிக்கோங்குமுரோமசமுநியுவந்தே
யிந்தவாறுரைப்பக்கேட்டியெனத்திருவாய்மலர்ந்தான்

363 நந்துநான்மறைதெரிந்தநற்றிரணாசனப்பேர்
மைந்தனேமதிவயங்குமாட்சிமையுடைமையானே
யிந்தமாநிலத்தெஞ்ஞான்றுமெண்ணிடினரர்களாலே
வந்திடுமுபாயந்தன்னான்மருவியதருமமெல்லாம்

364 மெய்ம்மையதாகியிந்தமேதகுமுலக்குக்கெல்லாஞ்
சம்மதமாகிமுன்னஞ்சாற்றிடுமுபாயமின்றி
யம்மநிற்கறைதல்வேண்டியன்பினேமாய்ப்புகுந்தே
மிம்முறைமையினாற்சேருமென்பதுமதித்தாமன்றே

365 நற்பதிபலவுஞ்சென்றுநான்மறைவிதிவழாம
லற்புதமருவுதீர்த்தமாதடிநீயாங்காங்குற்ற
சிற்பரமாகியோங்குஞ்சிவலிங்கங்கண்டுசூழ்ந்தே
யுற்றபேரன்பினோடுமுவகையினுறப்பணிந்து

366 மதிவலோய்வாரிசூழுமலர்தலையுலகம்போற்ற
விதிமுறைவிசேடித்தன்பின்மிக்கதானங்கணல்கித்
துதிகொடிம்முறையினாற்றிற்றொல்பவமொல்லைநீங்குங்
கதிபெறலாகுமின்றேற்காணலாந்தகையதன்றே

367 எனமுநிகழறியன்போடின்னருள்விடையுந்தந்தே
முநிவனன்றுரைக்குமந்தமுதிர்பழச்சுவையின்சொல்லா
லினிதுடல்புளகம்போர்த்தாங்கில்லறந்துறந்துவல்லே
புனிததீர்த்தங்களாடிப்புந்தியிற்கொண்டுபோந்தான்

வேறு

368 நயிமிசங்கெயைநற்பிரயாகையே
யயர்வில்புட்கரம்ரோமகருடணம்
பயிறருஞ்சுரபாண்டம்பைசாசமே
யியல்கன்மோதகேச்சுரமிராக்கதம்

369 கோதில்கோகன்னங்கோமுகைகட்கமே
நாதனன்குறுஞானகுண்டங்கதை
காதல்கூர்பிரபாசங்கபிலையே
பாதகந்தவிர்க்கும்பாபமோசனம்

370 கோபருப்பதங்கோவர்த்தனம்புகழ்
சீபருப்பதந்தீர்த்தந்தினந்தரு
மாபுகழ்க்காமசாரமாசற்றசீர்த்
தூபமிக்கெழுந்தூயசோணாசலம்

371 கேடிலாதகிருட்டிணவேணிநல்
வீடுநல்கிடும்வேகவதிம்மிகும்
பீடிலங்குசொற்பேசுப்ரயாணமாஞ்
சேடதீர்த்தந்திகழுந்திருநகர்

372 மிக்ககாஞ்சிகாவேரிவிலாளமே
தக்கசம்புதலமயறீர்த்தங்கள்
பக்கமோடுபடிந்துவிதிமுறை
தொக்கலிங்கங்கள்யாவுந்தொழுதரோ

373 பன்னுசெந்தமிழ்ப்பாண்டிநன்னாட்டினின்
மன்னும்வைகையின்வந்துபடிந்தபி
னன்னமென்னடையங்கயற்கண்ணியோ
டென்னையாளுடையானையிறைஞ்சியே

374 முன்பகர்ந்ததோர்யோசனைமூண்டிடும்
பொன்பயின்றதென்பூவணமேவியே
யின்பமாமணிகன்னிகையிற்படிந்
தன்பினன்னையையஞ்சலிசெய்தரோ

375 மிக்கவூழ்வந்துமேவிடவாயிடை
முக்கணன்றிருமுன்சென்றுதாழ்ந்தெழீஇப்
பக்கமோடுபதம்பணியாமலே
தெக்கிணாவர்த்ததென்றிசைசென்றனன்

376 சென்றுகாவதத்திற்றிகழ்திருச்சுழியற்சிந்துதீர்த்தம்படிந்தியல்பிற்
பின்றிகழ்பின்னல்பிறங்குவானவனைப்பெரிதருச்சனைமுடித்ததற்பின்
பொன்றிகழ்புரிசைப்பூவணத்தடைந்தப்புனிதநீர்படிந்ததன்கரைமே
லொன்றினனாகவோரிராக்கதனாயுழன்றுதன்னலமிழந்தன்றே

377 இருளறவுலகத்திருங்கதிபெறுவானெழில்பெறுபுனிதநீராடி
விரவுநல்லந்தவேதியன்றனக்குவிபரீதமாகவேமேவுங்
கருதருகிரமங்கடந்ததோடத்தாற்கதுமெனக்கலங்கியேயுள்ளம்
பரவழன்றினும்பைசாசமெய்கொடுவெம்பசியினாற்பரிதபித்திருந்தான்

378 ஆனதோர்காலையருவினைப்பயத்தாலங்கணனற்பதங்காண்பான்
றேனிவர்வாசந்தினங்கமழ்பொழில்சூழ்தென்றிருப்பூவணந்தன்னிற்
பான்மைசேரிரண்டாம்பரிதிகண்டாங்குப்படர்ந்தபேரொளிநிழற்படிவ
நான்மறைபயிலுநல்லிசைவீணைநாரதமுநிவனண்ணினனால்

379 ஆயவன்றன்னையந்தமாமுநிகண்டையவென்றமுதமாமொழியாற்
பேயினதங்கம்பெற்றனையாரேபெரும்பசியுற்றனைபோலா
நீயுரைவிளம்புகென்னலுமவன்பினீடுபேருவகையிற்கூடித்
தூயமாதவனைத்தொழுதுகாண்கையினாற்றொல்லுணர்வடைந்திவைசொல்வான்

380 காதல்கூருலகிற்கனைகதிர்ப்பரிதிக்கடவுளையனையநாரதனே
யோதுமில்வாழ்வாமுததியினடர்ப்பட்டுறுகதிபெறுகுவான்விரும்பித்
தீதறுதீர்த்தம்யாவையும்படிந்தித்திருநகர்மருவுதீர்த்தந்தோய்ந்
தேதமாகியமின்னெனுமனைவாழ்வையெறிந்திடவெண்ணியானியைந்தேன்

வேறு

381 காதலுடன்மேவுவடுகக்கடவுடன்னைப்
பாதகமலங்கண்மிசைசென்றுபணிவுற்றே
கோதறுநன்னீர்கொண்மணிகுண்டமதின்மூழ்கி
யாதரவினேறினனகன்கரையினம்மா

382 அந்தவமையந்தனினல்லந்தணர்தமன்னா
சிந்தனைகலங்கிமெய்திரிந்தனனியானே
முந்தைவினையோவலதுமூண்டபவமேயோ
விந்தவிதிவந்ததெதுவென்றறிகிலேனே

383 நெருக்கியுதரத்தினுறுநீடுபசியாலே
யிரக்கமறமுன்பினியையாதனபிதற்றி
யரக்கவுருவாயிவணலக்கண்மிகவுற்றேன்
விரிக்கினிதுமுன்விதிவிலக்கிடவொணாதே

384 பரம்புபணைகொண்டெழுபராரைமரநீழல்
விரும்புமொருவன்றலைவிழுங்கனியையொக்கு
மிரும்புனலியாத்திரையினெண்ணமுறுமென்முன்
புரிந்ததவநீமகிழ்பொருந்திவரலாலே

385 உன்னையலதோர்கதியுரைத்திடவுமுண்டோ
வன்னதினின்முன்னிகழுமாயிரசென்மத்தின்
மன்னுபவநின்னடிவணங்கிடவகன்ற
தின்னினிமகிழ்ந்திவணிரங்கியருளெந்தாய்

386 என்னலுமிரங்கிமிகுமின்னருள்சுரந்தே
யன்னவனை நின்னிலெனவங்கையினமைத்தே
மன்னியசெழுங்கமலவள்ளல்பெறவந்த
நன்மகதிவீணைபயினாரதனிசைப்பான்

387 அந்தணர்குலத்தலைவவஞ்சலினியஞ்சல்
வந்துளதொர்காரணம்வகுத்திடுவனின்னே
புந்திகொண்மெய்பூவணபுரத்தினிதாக
முந்தியுரைதந்தபரமுத்தியதுவுண்டே

388 நீவிதிவசத்தினவணேர்ந்துமணிநீடும்
பூவணபுரேசனிருபொன்னடிதொழாதே
தேவியிருபாதமலர்சென்றுதரிசித்தே
மேவினைபின்வேறொர்பதிவென்றியுடனன்றே

389 வேதியர்குலாதிபவிளம்பிடுவனீயிப்
போதுமலர்மாதுதிகழ்பூவணபுரஞ்சேர்
நாதனைவணங்கியபினாயகிசெழும்பொற்
பாதமலரன்பொடுபணிந்துபவநீப்பாய்

390 காசிகெயையீசனடிகாமர்புனன்மூழ்கி
நேசமொடிறைஞ்சினர்கணேர்ந்தபலனெல்லாம்
பூசுரர்களாசைதருபூவணமெனும்பே
ராசில்பதிவந்தடையுமையமிலையம்மா

391 ஓர்கவினுமோதிடுவமுண்மையிஃதுண்மை
பூர்வமதுவாகியதொர்பூவணமதன்க
ணேர்தருமெம்மானைமுனிறைஞ்சுதல்செயாரே
லூர்கிருமியார்நிரயமுற்றிடருழப்பார்

392 அவ்வளவதன்றுலகிலாய்வருவர்நாயா
யிவ்வுரைநன்மந்தணமியம்பிடுவதன்றால்
வெவ்வினைகடிந்துதவமேன்மைபெறலாலே
செவ்விதினினக்கிதுசெப்பினமியாமே

393 பன்னுதுமியாமுனதுபாவமறவீடு
முன்னினுலகம்புகழுமோர்புனிததீர்த்த
மின்னதெனவேயறிவதெம்மிறைவனன்றி
யன்னதனின்மேன்மைதனையாரறியகிற்பார்

394 பூர்வமுறுமீசனதுமுன்னமுறுபூர்வத்
தோர்தருமைஞ்ஞூறுவரிவிற்கிடையினுற்ற
தேர்கொள்கடிவாசநனியியற்றியததற்குப்
பேர்பிரமதீர்த்தமெனவேயுலகுபேசும்

395 புத்தியொடபுத்திதருபூர்வகருமங்க
ளித்துயர்வருங்கிரமபங்ககருமங்க
ளுத்தமகுலோத்தமவிஃதுண்மைபடிவுற்றாற்
சித்தமகிழப்பிரமதீர்த்தமதகற்றும்

396 அருந்தவரைநிந்தனையறைந்தவதிதோட
மிருங்குலவொழுக்கமதிகந்தகனதோடம்
பரந்திடுமந்நீர்விழிபரப்புவதனாலே
பொருந்துமரனாணையதனாலிவைகள்போக்கும்

397 கார்த்திகைநன்மாதமுறுகார்த்திகைநன்னாளிற்
றீர்த்தர்தினமும்படிசெழும்பிரமதீர்த்தங்
கூர்த்தவறிவோயதுகுளித்திடுகளித்தே
யார்த்திடுமரக்கவுருவக்கணம்விடுப்பாய்

398 நாடிநவில்கின்றமறைநாலுமுகனன்னீ
ராடியிடினன்றியிவரக்கவுருவந்தான்
வீடலரிதாகுமுயர்மேதினியின்மீதோர்
கோடிசனனங்களவைகூடினும்விடாதே

399 இன்னதொருதீர்த்தமதிளின்னலமியம்பின்
முன்னுரிமைசேருமுகமுற்றுமதினின்றாம்
பின்னுறுமுகத்தில்வருபெற்றியினுமின்றா
மன்னதனின்மூழ்கினெவரும்மதிகராவர்

400 ஆதலினரும்பவமகன்றிடுமதன்க
ணீதகைமையோடமர்திநீடுகதிகூடும்
பூதலமெலாம்பரவுபுட்பவனமேமுன்
னோதுபலநற்பதியினுத்தமமதாகும்

401 பூர்வமதின்மேவிவளர்பூவணமதன்கட்
டேர்வருமருட்குறிச்சேவையதனாலே
பார்மிசைபடர்ந்துவருபாவமவையாவும்
நேர்படுதலாவதொருநிமிடமதினீங்கும்

402 காசிநகரிற் செய்தகடுங்கொடியபாவம்
பூசுரர்தினம்பரவுபூவணமதிற்போ
மோசைதருபூவணமுஞற்றியிடுபாவ
மாசரியபூவணமதன்கணதுதீரும்

403 ஈதுசரதம்மெனவியம்பியருளாலே
போதுவமெனாவினிதினாசிகள்புகன்றே
நாதமுறுவீணைபயினாரதனலங்கூர்
கோதிறிருமாலதுவைகுண்டமதடைந்தான்

404 பொற்சுவருடுத்துலகுபூவணமமர்ந்த
தற்பரனொடுற்றபரைதன்னையடிபேணிப்
பற்பகலுமன்பொடுபணிந்தருளின்வாழ்ந்து
நற்பரமமுத்திதிரணாசனனடைந்தான்

405 காதன்மிகுபிரமகைவர்த்தம்தினொன்று
போதவெழுபஃதெனப்புகலத்தியாயத்
தோதுமிக்காதைசவுநகவுணர்தியென்றான்
சூதனெனும்பேர்பரவுதொல்லுணர்வின்மேலோன்

வேறு

406 மருவுமிந்தநன்மந்தணமானதோர்மிகழ்பெருங்கதைவன்பவமானகா
னெரிபொருந்திருமென்பர்கண்மேலையோரிணையிகந்துறுமிங்கிதன்மேன்மைதான்
பரவுகின்றவர்கள்பண்கொடுபாடினோர்பகரிரும்பொருடந்துசொல்பான்மையோர்
திரமுடன்செவிகொண்டிதுதேர்குவோர்சிவபெரும்பதிசேர்வதுதிண்ணமே

திரணாசனன்முத்திபெற்றசருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 406

*****

## மணிகன்னிகைச் சருக்கம்

407 நற்கதிபெறுந்திரணாசனன்கதை
யற்புதங்கேட்டுநெஞ்சமைதிகொண்டிலன்
சொற்றகுமாதவச்சூதயான்புகல்
கிற்பனாலின்னமுங்கேட்குமாசையால்

408 ஓதருமுலகிலாருயிர்கள் செய்திடு
பாதகமனைத்தையும் பாறல்செய்யுமக்
கோதறுமாமணிகுண்டமேன்மையை
யேதுவினோடெடுத்தியம்பல்வேண்டுமால்

409 உற்றமன்பதைக்குபகாரியாவது
மற்றுநீயல்லதிவ்வையத்தில்லையாற்
சொற்றிடென்வாய்மொழிதுணிந்துநாடியே
யிற்றெனவேவிரித்தினிதினாலரோ

410 என்றிவைசவுனகனியம்பக்கேட்டரு
டுன்றியதுகளறுசூதன்சொல்லுவான்
கன்றிடுமறுபகைகடிந்துநாடொறும்
வென்றிகொளந்தணர் வேந்தர் வேந்தனே

411 அத்தலப்பெருமையையாயிரம்பெரும்
பைத்தலையனந்தனும் பங்கயத்தனுஞ்
சித்திரமலர்த்திருமாலுந்தேவரு
மித்திறமெனவுணர்ந்தியம்பலாகுமோ

412 ஆயினெம்மாலிஃதறையப்பாலதோ
தாயினுமுயிர்க்கருள்சவுனகாதிப
தூயவாசான்றனாற் சொல்லுமந்தண
நேயமோடதிற்சிலநிகழ்த்துவாமரோ

413 அண்டமோர்விராட்புருடன்றனங்கமாம்
புண்டரீகத்திருப்பொருந்தும்பூவணங்
கொண்டபேரெழில்குடிகொண்டவன்முக
மண்டலமாகவேமறைந்துவைகுமால்

414 பண்டைநாளமுதகும்பத்திலாரமு
தெண்டகுமணிமயமாகியிப்புனல்
விண்டலநின்றதுவீழ்தலான்மணி
குண்டமென்றொருபெயர்கொண்டிலங்குமால்

415 துன்னுதற்கரியவத்தூயதீர்த்தமா
மன்னதினாடினோரமுதருந்தியே
பன்னுபத்தயன்றன்கற்பம்பரிந்துதாம்
பொன்னுலகத்தினிற்பொருந்திவாழ்குவார்

416 அரியயனுருத்திரனமரர்கோன்கடற்
றரைபுகழ்நாரதன்சனகனாதியர்
கருடர்கந்தருவர்நற்கபிலரேனையர்
திருமணிகன்னிகைத்தீர்த்தம்வாழ்வரால்

417 கோலமன்னுதீர்த்தமாடுகுலவுபூர்வமுகமதாய்
வாலுகந்தனான்மிகுந்தவானிலங்குவெய்யவன்
சீலமோடுசெய்யிலிங்கதெரிசனஞ்செய்வோர்கொடுங்
காலன்மேனிதானிரண்டுகண்கள் கொண்டுகண்டிடார்

418 அந்தலிங்கதரிசனத்தினானன்முத்தியடையுமால்
வந்துநாளுநாளுமேவணங்கினோர்கள்யாவரும்
புந்தியாற்செய்பாவமும்புண்ணியம்மதாகுமா
லிந்தநீர்மையுண்மையுண்மையென்பதையமில்லையே

419 எண்ணிறைந்தநன்மணிகனிகையினெய்தியாடுதல்
கண்ணினண்ணுபூவணக்காசிலிங்கதரிசனம்
புண்ணியம்புரிந்துளோர்தமக்குநேர்பொருந்திடும்
பண்ணுபாதகர்க்கொர்காலமும்பலித்திடாதரோ

420 இருடுரந்தருள்சுருக்குமிம்மணிகன்னிகைநதி
யருடவத்தினானதானமதனினாலுமன்புகூர்
தெரிசனத்தினாலுமிக்கசீர்தயங்குகங்கையின்
பரிசனத்தினாலும் வெய்யபாதகங்களழியுமால்

421 தெரியினரியபிரமகத்திதீர்க்குமுரியதரிசனம்
பரவுமமுதநாளுமுண்ணல்பண்ணுமேவுபரிசன
மரியபலமெலாமளிக்குமத்திருத்தநானமே
விரவுமமுதமணிமயங்கொண்மணிகனிகையின்மான்மியம்

422 தந்தைதாய்தமக்கிழைத்ததணிவில்பாதகங்களும்
பந்தமாற்றுகின்றதோர்பராபரன்றுரோகமுஞ்
சுந்தரங்கொள்வேறொர்மாதர்தோளணைந்ததோடமும்
முந்தையோரைநிந்தைசெய்தமுடிவிலாதபாவமும்

423 வேதியர்க்குவெகுளிசெய்தன்மிசைதலல்லமிசைதல்வெம்
பாதகங்கண்மாடபத்தியங்களாதிபாதக
மோதுகோள்களாதிபாவமொழியுமாலிப்பூவணந்
தீதிலன்பினோடுவந்துதெரிசனஞ்செயளவினில்

424 இத்தலத்தில்வைகியேயிடும்பையில்குடும்பியா
யுத்தமகுலத்தனாகியொற்கமிக்குடையனாய்
முத்திகாமனானசீவன்முத்தனங்கையிற்றில
மத்தனைச்செழும்பொனல்கினோர்பலத்தையறைகுவாம்

425 தூயவுலகினேமருவுசுகமெலாமடைந்தவ
ணேயபுத்திரர்புத்திரர்களோடுநீடுவாழ்ந்
தேயநற்சிவபுரத்தினேறியின்பமுற்றதின்
மேயநாளிருந்துமேதினிக்குவேந்தராவரால்

426 ஊனநீங்குமையர்கையிலுள்ளொருமையோடுகோ
தானநல்கினோர்கணீடுதரையிலின்பமருவியே
தீனமின்றிவாழ்ந்துபின்றிருந்தருந்தவத்தினா
லானகாமதேனுவின்றனமுகநன்கருந்துவார்

427 பின்னர்நற்றவந்தனிற்பெருங்குலத்துதித்துநேர்
பன்னுபுத்திரர்பவுத்திரர்களோடுபரிவினான்
மன்னுசெல்வமுடன்மகிழ்ந்துவாழ்ந்துமீண்டுமாசிலாச்
சின்மயன்றினம்பொருந்துசிவபுரத்தையடைகுவார்

428 ஓதுமுத்தராயணத்தினோடுதக்கிணாயன
மீதினுற்றகதிர்கடம்மைவெவ்வராவிழுங்குநாண்
மாதவுற்பவத்தினமதிவிரிந்தொடுங்குநா
ளாதிவாரம்பஃதொர்பக்கமவ்வெதிபாதத்தினம்

429 ஏலுமாறுதலையிலிட்டவெண்பஃதுசேர்ந்தநற்
காலமோடுசங்கிராந்திகாலமட்டமீதனின்
வாலசங்குதங்கிநன்குவளருமணிகன்னிகையினின்
மாலகந்தைகொன்றசூலவயிரவன்றனருளினால்

வேறு

430 இலகொளிபரப்புமெல்லோனெதிர்முகந்தரவிருந்து
மலருடன்றூர்வைமிக்கவண்கனிதண்டுலங்கொண்
டலகிலாப்பவங்கணாயேற்காடுமித்தீர்த்தந்தன்னாற்
றொலைவுசெய்தருளவேண்டுஞ்சோதியேயெனப்பணிந்து

431 சூரியவிலிங்கந்தன்னைச் சொல்லுமந்திரத்தினாலே
சீர்பெறச்செபித்துத்தேவதேவனைப்பிரார்த்தித்தன்பாற்
பேர்பெறுதீர்த்தமூழ்கிப்பிதிர்களோடிருடிகட்காங்
கேர்பெறுதர்ப்பணங்களிரவிமந்திரத்தினாலே

432 யாவனிம்முறையிற்செய்வானவன்கடலுடுத்தபார்மேற்
றேவர்கண்முனிவர்மிக்கதென்புலத்தவர்கடன்செய்
மேவியபிரமசாரியெனின்விருப்பறுத்தேயொல்லை
மூவுலகங்கள்போற்றமுத்தியையடைவனன்றே

433 அருமணமுடித்தோன்ட
கிரியைநூற்கிடக்கையானேகேடில்பூசனையமைத்தே
திருமகள்சுவர்க்கஞ்சேயாற்சேர்வனீதொருவினாலும்
பெருகுமத்தீர்த்தமூழ்கிற்பிதிர்கடன்றரும்பேறுண்டாம்

434 தீதிலாவேள்விசெய்தோன்றேவனாந்தன்மைபோல
வோதுமத்தீரத்தம்பொனுகவுவோனும்பனாவா
னாதலாலத்தலம்போலரும்பிதிர்கடன்கடம்மைப்
போதல்செய்தலங்களிந்தப்பூதலத்தில்லைமாதோ

435 இத்தலமன்றிவேறோரிருங்கதியளிக்குந்தான
மித்தலமதனிலின்றாமியம்பிடினாகையாலே
யித்தலமதிகமாமாயிரங்கோடிநற்றானத்து
ளித்தலங்கண்டாலிம்பரிருங்கதியிரண்டுமுண்டால்

436 கற்றுணர்வுடையோர்கண்டகண்ணிமைகைநொடித்தல்
பெற்றிடலமையுமேலும்பிறங்கிடுஞானந்தன்னா
லுற்றவஞ்ஞானந்தன்னாலோதுபூவணத்தில்வாழ்வோர்
நெற்றியிற்றிகழந்த வொற்றைநேத்திரராவரன்றே

437 நல்லதோர்தளிர்தானாதனவிலொருகனிதானாதல்
வில்லிலங்கியபுரூரமின்னிடையன்னைபாகம்
புல்லியபூவணத்தெம்புனிதனுக்கினிதளிப்போர்
சொல்லுருத்திரனாய்ப்பின்னர்ச்சுத்தமாமுத்திசேர்வார்

438 வோறொருதலத்தினின்று மெய்யுயிர்வியோகமெண்ணி
மாறிலாவித்தலத்தின்வைகுறின்மரணகாலை
கூறிதாயசெம்பொற்கொடியிடைமடவாளோடுந்
தேறிடவந்தவன்றன்றெக்கிணகன்னந்தன்னில்

439 பாரிடைப்பிதாமகற்குப்பயப்பயப்பரிதல்போலச்
சீருடைக்கடவுடன்பொற்றிருமேனிசாத்திக்கொண்டு
பூரணமகிழ்ச்சியோடுபுத்திரன்றன்னைத்தேற்றித்
தாரகப்பிரமந்தன்னைத்தானுபதேசஞ்செய்வான்

440 சாற்றுதுமரன்றனாணைசத்தியமீதுசாற்றி
லாற்றல்சான்முனிவகேண்மோவாதலாலரிதினேனு
நாற்றிசையுலகமேத்துநற்றிருப்பூவணத்திற்
போற்றியேயெவரும்வாழ்கபுந்திகொண்டெந்தஞான்றும்

441 மருவியகாசிவாசமக்கண்மிக்குடல்வருந்தும்
பொருவிறென்பூவணந்தான்பொருந்திடாமெய்வருத்த
மரியனபொருளொன்றில்லையாதலாலைந்தவித்தீர்
கருதிலப்பூவணந்தான்காசியிலதிகமாகும்

442 பவமில்பஞ்சாமுதத்தாற்பஞ்சகவ்வியத்தான்மிக்க
சுவைதருநன்னீர்தன்னாற்சோதியையாட்டுவிப்போன்
சிவனதுவடிவமென்றேசெப்பிடுமுலகமெல்லா
மவனதுபெருமைதன்னையறிகுவனமலன்றானே

443 கதிர்விடுமணிகுண்டத்தின்கரையினிற்கடவுண்முன்னர்ப்
பிதிர்மகிழ்சிராத்தத்தோடும்பிண்டநற்றிலோதகத்தை
விதிமுறைபிதிர்கட்காற்றின்வெஞ்சுடர்ப்பரிதிவானோன்
மதிதருவாழ்நாள்காறுமனமிகமகிழ்ச்சியுண்டால்

444 பொங்குவெங்கதிர்பரப்பும்புனிதமாமணிகுண்டத்திற்
றங்குநீரிடைப்பிதிர்க்கடங்களங்கங்கிடந்தா
லங்கவர்மகிழ்ச்சிகூர்ந்தாங்கக்கணந்தன்னின்முக்க
ணெங்கணாயகனாற்பெற்றேயிடபவாகனத்தராவார்

445 ஆதலாலரியமைந்தரத்தியைப்பத்தியாலே
யோதிடும்பிதிர்கடாம்போயுயர்பதிகதியிற்சேர்வான்
காதலால்வருந்தியேனுங்கடைப்பிடிகருதிமாதோ
கோதிலாமணிகுண்டத்திற்கொண்டிடக்கடவரன்றே

446 முந்தொருகாலந்தன்னின்மொழியினோர்கங்கமங்கந்
தந்திடந்தணனங்கத்தைத்தசையென நசையிற்கொண்டே
யந்தநற்றீர்த்தத்திட்டாங்ககன்றதக்கணத்தினன்னோ
னிந்தநற்றீர்த்தந்தன்னாலிருங்கதியேறினானால்

447 இந்தநற்றீர்த்தம்வேதத்தியம்பிடுஞ்சாரமாகு
மிந்தநற்பிறப்புக்கீறுசெய்திடுகடவுளாகு
மிந்தநற்கதைச்சுருக்கமியம்பினனீவிருந்தா
மிந்தநன்மாணக்கர்க்கிங்கிசைத்திடுமெந்தஞான்றும்

448 சந்தமாமறைதேர்கின்றசவுனகமுனிவகேண்மோ
வந்தநற்பிரமகைவர்த்தந்தருமத்தியாய
மிந்தவாறடைவிற்றேர்தியெழுபதின்மேலிரண்டாம்
புந்திகொள்புகழ்செறிந்தபூவணக்காதைமாதோ

வேறு

449 சேனுலாவியதிங்கடருங்குடைசேருமாமதன்றன்றனைவென்றதோ
ரேனுலாவியவின்பசுகம்பெறுமேசிலாவருடந்திடுமந்தணீர்
மானுலாவியமண்டலமெண்டகுமாசிலாமணிகுண்டமடைந்தசீர்
பானுலாவியசெஞ்சொல்பகர்ந்தவர்பாகசாதனன்றன்பதிதங்குவார்

மணிகன்னிகைச் சருக்க முற்றியது

ஆகச் செய்யுள் 449

*****

## நாலாவது

## துன்மனன்சருக்கம்

450 தூண்டுகின்றசெஞ்சுடர்கொள்சோதிதாள்
பூண்டவன்புசேர்பொற்பின்மேலையோன்
காண்டகுந்தவச் சூதன்கண்ணுறீஇ
மீண்டுமோர்கதைவிளம்பன்மேயினான்

451 வீரவேடனைவென்றசௌனக
வோர்கநீயிஃதுரைப்பக்கேட்டிடி
லாருயிர்க்கெலாமாயுணல்கிடுஞ்
சேரும்வல்வினையாவுந்தீர்க்குமால்

452 வேதநன்குணர்வியாதன்முன்னரே
யோதிநெஞ்சகத்துவகைகூர்தருங்
கோதிலாமணிகுண்டமான்மிய
மேதுவாற்சிறிதியம்புவாமரோ

453 தருமநன்கதைதஞ்செவிக்கொளார்
நரகவாதிகளாவர்நாளுமே
திருமிகுங்கதைசெவிமடுத்துளோர்
மருவிடுஞ்சுவர்க்கத்தின்வாழ்குவார்

454 நவிற்றுகின்றவெந்நரகமென்றுநற்
சுவர்க்கமென்றுமேற்சூதமாதவ
வெவற்றினாலிவையேயுமாலரோ
வவற்றைநீவிரித்தருளவேண்டுமால்

455 தந்தைதாய்புகழ்தருமதேசிகன்
முந்தைநான்மறைதன்னைமுற்றுண
ரந்தணாளரையறிஞர்தங்களை
நிந்தியார்தமைநிந்தைசெய்துளோர்

456 பொருவினான்மறைபுகலுமந்தண
ரானரும்பொருளபகரித்துளோர்
கருதிவந்துபொய்க்கரிபகர்ந்துளோர்
பரவுகன்னிகைதனைப்பழித்துளோர்

457 மதுநுகர்ந்திடுமங்கையானன
மதனைமோந்தவரவளைமேவினோர்
கதுமெனப்ப்ரமகத்திபண்ணினோர்
விதமுறுவிடர்விரவுகாதலர்

458 நன்குலத்திலாசாரநந்திடாத்
தன்குலக்கொடிதனிபுலம்பவே
பொன்பறிப்பவர்தோளைப்புல்குவோர்
மின்குலத்தியைப்பெட்பின்மேவுவோர்

459 கொழுநரைப்பிழைத்தோர்கள்கூடுறா
மழலையின்சொல்வாய்மைந்தர்பூணணி
விழைவின்வவ்வினோர்வெஃகிநன்பொருள்
பழுதிலாதுயர்பசுவைவிற்றுளோர்

460 புண்ணியப்புனல்புண்ணியத்தல
மெண்ணிடும்பதினெண்புராணநூ
றண்மையாகநிந்தனையிசைத்துளோ
ரண்ணலாலயமிலயமாக்குவோர்

461 அண்ணறன்னைநிந்தனையறைந்துளோர்
பண்ணிடுந்தருமம்பழித்துளோர்
திண்ணமாயவைசிதைவுசெய்துளோ
ரெண்ணறம்பொருளெண்ணிவிற்றுளோர்

462 அன்னம்விற்றுளோரதுபழித்துளோர்
முன்னை நூல்வருமுறைதிறம்பினோர்
சொன்னவாசகந்தோமுறுத்துளோர்
பன்னலாக்கொடும்பழிபகர்ந்துளோர்

463 கருதுகின்றதங்காரியத்தினான்
மருவினோர்கடம்மன்னுகாரியம்
பெருகுகாதலிற்பிழைபடுத்தினோர்
பரிவுகூர்ந்துளோரவரைப்பார்த்துளோர்

464 நந்தனவன நறியகூவனீர்
தந்திடேரிதான்றந்திடக்கருத்
துந்துகாதலினுரைத்துளோர்தமை
நிந்தைசேர்ந்தசொன்னிகழ்த்திநின்றுளோர்

465 தந்தைதாய்திவசஞ்செயாதவர்
வந்துநம்பினோர்தமைவதைத்துளோர்
சுந்தரந்துதைந்திலங்கு தொன்மைசால்
வெந்தநீறணியாதமெய்யினோர்

466 சிந்தையின்மகிழ்தந்திடுந்திரு
வைந்தெழுத்தினையவமதித்துளோ
ரெந்தைகண்டிகையினையிகழந்துளோர்
நிந்தைசேரிவர்நிரயவாணரே

467 திருகுசிந்தனைதீர்ந்தமாதவ
மருவுஞாலமேன்மன்பதைக்கெலாம்
பெருகிநாடொறும்பீழைமம்மர்செய்
நரகுறுந்திறநவிலுவாமரோ

வேறு

468 கும்பிபாகங்கராளங்கூடுவிட்டாசனத்தோ
டம்புவியிகழ்லாலாம்புசேவனமறையுங்கீலம்
பம்புவெங்கிருமியுண்டல்பகர்ந்தவிகராளங்கண்டங்
கம்பதப்ரகரங்காலசூத்திரங்கரியகாகம்

469 ஒட்டகம்புலியயத்தோடுறுமயிடத்தின்றுண்டம்
கொட்டிடுதத்தாங்காரங்கொல்லயபாத்திரஞ்சேர்
தட்டலகுட்டனந்தீசேர்ந்தசைகத்தினில்வறுத்தல்
பட்டுருவசிபடைத்தபத்திரமூத்ரபானம்

470 மன்னியரவுரவஞ்சேர்மாரவுரவங்களாதி
தன்மைகளுணருங்காலைத்தருமராசனுந்தயங்குஞ்
சின்மயனருளாற்றேருஞ்சித்திரகுத்தன்றானு
மிந்நிலைதன்னை நாடியிற்றெனக்கிளத்தலாகா

471 ஆதலால்யாவரேனுமரும்பெரும்பாதகங்க
டீதுறமுயலிலிந்தத்தீநரகடைவரன்றே
யாதுகாரணத்தினாலுமிகபரமியைவோர்தீய
பாதகமானவற்றைப்பாற்றிடக்கடவரன்றே

472 சொற்றிடுந்தருமமுந்தான்சுருக்கியேதெரித்துச்சொல்வா
மற்றதுமுனிவகேண்மோவகிஞ்சையேவாய்மைசேர்த
லுற்றிடுகளவுதீர்தலுளமகிழ்கூர்தலோடு
பொற்புறுதேகசுத்திபூசைசன்னியாசிபூசை

473 துறவிகடமதுபூசைசொல்லிடுமதிதிபூசை
வறியரைக்கதியிலோரைமருவுமந்தகரைக்காத்த
லுறுமனச்சழக்குத்தீர்த்தலுற்றிடுசுகன்மம்பேண
லறையகிஞ்சாதியீரேழந்தணர்விதியிற்றந்தோர்

474 சரணடைந்தோர்கடம்மைத்தாங்குதன்மாகமுழ்க
லானருச்சனையியற்றலதிதியர்க்கனமீவோர்க்குப்
பரவுபகாரம்பேணல்பண்ணுகன்னிகாதானத்தோ
டுரியவான்முதிரையெள்ளோடுயர்பலதானஞ்செய்தோர்

475 தருமகாலங்கடன்னிற்றண்புனற்பந்தர்செய்தோர்
பொருவில்புண்ணியம்புரிந்தோர்புங்கவர்யாரும்பூசை
யுரிமையினியற்றவுள்ளமோர்தருங்காதல்கூர்ந்தே
திருமிகுசுவர்க்கபோகத்தெரிவையர்திரட்சியோடும்

476 நம்பிநாடகநடிப்பநவமணித்துவசமின்னக்
கிங்கிணிமாலைத்தாமங்கெழுமியேயெங்குந்தூங்கக்
கண்கொளாத்துணைவெண்கற்றைக்கவரிக்காலசைப்பமாதர்
விண்குலாவியவிலக்கவிமானத்தினாப்பண்மேவி

477 தெண்டிரைக்கடற்பாற்கொண்டதிசைவிசயஞ்செலுத்தி
வண்டருநீழல்சேர்ந்துமிக்கபூந்தேன்றுளிப்ப
வெண்டகுமுலகம்போற்றவீரேழிந்திரர்கள்கால
மண்டர்களடிவணங்கவமருலகத்தில்வாழ்வார்

478 முண்டகனனையவேதமுனிவமுன்னிறுத்தவாற்றாற்
கண்டதையன்றிக்கேட்டகாலையிற்பவங்கடீர்க்கு
மண்டலம்பரவுமந்தமாமணிகுண்டமேன்மை
யெண்டொகைபெறவெடுத்தங்கிசைக்குவமின்னுங்கேண்மோ

479 நயவுணர்வறியாதானோர்நான்மறைக்குலத்தின்வந்தோ
னெயினரோடிணங்கிவாழுமிழிதொழின்முழுதுணர்ந்தோன்
கயமுறுகபிலைநன்னீர்க்கரையினிற்கருதிவாழ்வோன்
றுயர்தருதுராசாரஞ்சேர்துன்மனனென்னும்பேரோன்

480 சீர்த்திகளகன்றவேதத்திறங்கள்யாவுந்திறம்பி
யார்த்தநல்லறிவிழந்தேயறந்தருஞ்செயன்மறந்து
கூர்த்தவெங்குன்மநோயாற்கொலைபுரியெயினரோடுந்
தூர்த்தர்களோடுங்கூடித்தொன்னெறிமுறைதுறந்தான்

வேறு

481 காதலுடன்மாதர்பயில்காமகலைதன்னை
நாதமொடுபாடிமிகநாடகநடிப்போன்
றீதில்பலதேனுவொடுசெந்தழல்வளர்க்குஞ்
சோதின்மறையோரைநனிகொன்றுயிரையுண்போன்

482 ஏற்புடையபாலகரையிட்டிடையினோரைப்
பாற்படுவாலீசரொடுபண்புடைமையோரைச்
சீற்றமொடுதேசமிசைசென்றுநனிகொன்று
கூற்றுணவிரும்பியுயிர்கொள்ளையிடுகிற்போன்

483 சொற்றகையவின்னபலதொல்லுலகினோரைச்
செற்றமொடுகொன்றவர்கள்செம்பொனவைகொண்டே
வெற்றிமிகுபாதகன்விரும்பியணையாத
கற்புடையமங்கையர்கள்காசினியிலுண்டோ

484 கொன்றுதிரியுங்கொடியகூற்றமனையான்செய்
நன்றிகளிலொன்றறியுநன்றியதுவுண்டோ
சென்றுபடிகின்றதொருதீர்த்தமதுவுண்டோ
வன்றியிவனீந்திடுமரும்பொருளுமுண்டோ

485 எண்டிசைமுகத்தினமரெக்கடவுடன்னைக்
கண்டனனெனப்பரவுகட்டுரையுமுண்டோ
வுண்டலரிதாய்வளர்தலோருயிருமுண்டோ
மண்டனில்வதைக்கரியமன்பதையுமுண்டோ

486 திண்டிறலின்வேட்டைபுரிசிந்தைமிகுதீயோ
னெண்டகவியம்பலுறினின்றுமிவன்முன்னும்
பண்டரொருபாரினிடைபண்ணவருபாவ
முண்டெனவெடுத்தினுமுரைத்திடவுமுண்டோ

487 கட்களவுபொய்மைகொலைகாமமுறுகாமத்
துட்டரெனவேமருவுதூர்த்தர்தொழுமூர்க்கன்
மட்டறுகிராதரெனுமாகுலவரோடு
மிட்டமுறநாளுமுலகெங்குமுழல்கின்றான்

488 சத்தியமொழிச்சவுனகத்தலைவநாளுந்
துய்த்தல்பழுதென்றுபகர்தூய்மதுவுமுண்டே
பத்திதருபன்னகபணாமுடிகிடந்த
வித்தலனவன்செய்பவம்யாதெனவுரைப்பாம்

489 துன்றியமதங்கர்பலதூர்த்தர்புடைசூழ
வென்றிதருவேடருடன்வேட்டைமிகுதீயோன்
மன்றலவிழ்கண்டகவனங்களொடுநாடிச்
சென்றுபலதேசமவைசிலபகல்கழித்தான்

490 மன்னுமிருவினையொப்புவந்தடைதலானு
மன்னதொர்திரோதமருளாய்வருதலானும்
பன்னருவிழாவணியெனப்பகர்தல்கேட்டுப்
பொன்னுலகெலாம்பரவுபூவணமடைந்தான்

வேறு

491 இடர்ப்பிறப்பிறப்பென்றோதுமிருங்கடற்படிந்துநாளுங்
கடைப்படாதுயிர்க்கிரங்கிக்கதியருள்புரியநீடும்
படித்தலம்போற்றுகின்றபங்குனியுத்தரத்தின்
விடைக்கொடியேற்றிமிக்கவிழாவணிநடந்ததன்றே

492 மதிதொடுசெம்பொற்றேரூர்மாடநீண்மறுகுதோறும்
புதுநறுங்கலவைச்சேறுபொலிதரமெழுகிக்கோலம்
விதிபெறவெழுதும்வாயில்வெண்ணிறப்பளிக்குத்திண்ணை
முதிர்நிலாவெறிப்பத்தூயமுளைகொள்பாலிகைவயங்க

493 சீர்மணிமாடந்தன்னிற்சித்திரகூடந்தன்னி
லேர்பெறுமாமியத்தினெழுநிலைமாடந்தன்னிற்
றோரணவீதிவாயிற்சுடர்மணிமண்டபத்திற்
பூரணகுடநற்றீபம்பொங்குவெங்கதிரிற்பொங்க

494 நீடுகோபுரவாயிற்கணிலாவுமிழ்நிலாமுற்றத்தி
னாடரங்கதனிற்செம்பொனம்பலந்தன்னிற்சோதி
கூடுநற்சதுக்கந்தன்னிற்கொடிமணிச்சித்திரஞ்சேர்
மாடகூடதினட்டமங்கலநின்றிலங்க

495 மிகுபுகழ்வேந்தர்விண்ணோர்மிண்டியவீதியின்கண்
மகுடநன்மணியின்குப்பைவயின்வயினலகிட்டெங்கும்
புகழ்பெறத்தெளித்தவாசப்புனிதநீரொடுபுத்தேளிர்
மகிழ்வொடுபொழிமந்தாரமாமலர்வாசம்வீச

496 மாமணித்தேர்களெங்குமாடமண்டபங்களெங்குந்
தாமநீள்வீதியெங்குந்தக்கபூம்பந்தரெங்கும்
பூமகளுறையுளெங்கும் பூங்கமுகரம்பைநாட்டிக்
காமர்பொன்னகரமென்னக்கடிநகரலங்கரித்தார்

வேறு

497 செங்கமலத்திற்றிசைமுகன்மாயன்றேவர்கள்சித்தர்கண்முனிவர்
புங்கவர்யாரும்புடைபரந்தீண்டிப்போற்றிநின்றிசைத்திடப்புகழ்யாழ்
மங்கலகீதவிதத்துடன்பாடிமலர்தலையுலகமங்கையரோ
டங்கண்வானத்தினழகொழுகியநல்லரம்பையூர்நாடகநடிப்ப

498 திண்டிறற்குலவுதிக்குபாலகர்தந்திசைதொறுஞ்சேர்ந்துசேவிப்பத்
தண்டலில்குண்டோதரனகல்வானிற்றயங்குவெண்மதிக்குடைநிழற்ற
வெண்டிசைவிளக்குமிருசுடர்மருங்கினிணைமணிச்சாமரையிரட்ட
விண்டலந்தயங்குவெள்ளிமால்வரைபோல்விடைக்கொடிமீதுநின்றலங்க

499 பண்டருவிபஞ்சிபாடிடுமொலியும்பல்லியந்துவைத்திடுமொலியுங்
கொண்டல்சேர்கூந்தற்குங்குமக்கொங்கைக்கொடியிடைப்பிடிநடைத்தீஞ்சொற்
றொண்டையங்கனிவாய்த்தோகையர்நடிக்குந்துணைப்பதாம்புயச்சிலம்பொலியு
மெண்டிசாமுகத்துமண்டர்வானகத்துமெங்கணுஞ்சென்றெதிரேற

500 திண்டிறற்குலவுதீர்த்தர்களேத்துந்திருவருணந்தியெம்பெருமான்
மண்டுகாதலிற்சேர்வானவர்செம்பொன்மணிமுடிதருபிரம்பொலியும்
பண்டருவேதப்பாடலினொலியும் பன்னுதேவாரத்தினொலியுங்
கொண்டசீர்வானத்தண்டகூடத்தின்கொழுந்துவிட்டதுபடர்ந்தேற

501 இன்னனவளஞ்சேரிந்திரசெல்வத்திலங்கியவீதியினலங்கூர்
பொன்னலந்தயங்குமின்னனையிடங்கொள்பூவணமேவியபெருமான்
பன்னருஞ்சிகரபந்தியின்மிக்கபைம்பொன்மால்வரையெனச்சோதி
மன்னியவலங்காரந்திகழ்ந்தோங்குமணிநெடுந்தேரினில்வந்தார்

வேறு

502 இந்தநல்விழாவணியிடத்தெயினர்சூழ
வந்தமலரோனுநெடுமாலுமறியாத
வெந்தைபெருமானுமிகுமின்னருளினாலே
சிந்தைமகிழ்வோடுநனிசென்றுதரிசித்தான்

503 நாதமுயர்விந்துவினுநாடரியநம்பன்
மேதகுவிணோருடனல்வீதிகள்கடந்தே
பூதலமெலாங்குலவுபொற்சுவருடுத்த
கோதின்மணிசோதிவிடுகோயிலிடைபுக்கான்

504 காதலுடன்மேவுகனகங்களவுகொள்வா
னேதுநிகழ்காலமெனவெண்ணிமனனூடே
யோதுமவணீடுதனியூசலெனவந்த
வீதிதனினின்றுவிளையாடல்புரிகின்றான்

505 பண்டறிவருங்கொடியபாதகனைவீதி
கண்டிடுபவத்தையுறுகாதலுடன்வெய்யோன்
றெண்டிரைகொடீர்த்தமதுசென்றொழிவனென்றுட்
கொண்டனனெனக்குடகடற்கிடைகுளித்தான்

506 முண்டகமிலங்குமணிகுண்டமதின்மூழ்கி
யண்டர்தொழுமுத்தியினடைந்திடுவனந்தோ
கண்டிடுவமென்றுவருகாட்சியதுமான
மண்டலம்விளங்குமதிவானவனுதித்தான்

வேறு

507 ஆங்கவனரையிருள்யாமத்தன்னதன்
பாங்குறுகொலைபுரிபரிசனங்களை
யீங்குநீர்வம்மினென்றெடுத்துவல்லைகூய்
நீங்கருகாதலானிகழ்த்தன்மேயினான்

508 நிகழ்த்தலொன்றுடையன்யானீவிர்கேண்மெனா
வுகப்புடன்யாமெலாமொருங்குகூடியே
புகழ்ச்சியினீடியபுரவலன்மனை
மிகுத்தநற்றனங்கொடுமீண்டுசெல்குவோம்

509 என்றவனியம்பலுமெயினர்நன்றெனா
வென்றிவேல்வேந்தனன்மனையின்மேவியே
தன்றனியிலக்கநேர்தபனியங்கொடு
மன்றல்சேர்மலர்த்திருவாயினண்ணினார்

510 கடைத்தலைவாயில்காவலர்கள்கண்ணுறீஇ
யடுத்தவர்யாரெனாவையுற்றோர்சில
ரிடிக்குரலெனவதிர்த்தெழுந்துசீறியே
படைத்தலைவீரர்கள்படையின்மூண்டனர்

511 மூண்டனர்முறைமுறைமுடுகிமுன்னரே
மாண்டகுதிறற்படைமானவேடருங்
காண்டகுகனற்பொறிகண்கள்சிந்தவே
யேண்டிகழ்வாயிலினிடைக்கணீண்டினார்

வேறு

512 இடங்கொள்வானகத்தெறிகுவரேற்றுவரீர்ப்பர்
தொடர்ந்துசுற்றுவர்பற்றுவரடுத்துமெய்துளைப்பர்
படர்ந்துசெல்குவர்மீள்குவர்படைக்கலன்வழங்கிக்
கொடுஞ்சமர்த்தொழில்புரிகுவர்குருதிநீர்குளிப்பார்

513 தெரிவருந்திறற்சாரிகைகறங்கெனத்திரிவர்
குருதிவாய்தொறுங்கொப்பளித்திடவுயிர்குறைப்பர்
வெருவியோடுவர்மீள்குவர்வெள்குறாதெதிர்ந்து
பொருவர்மீண்டுமங்கிருவருந்தோள்புடைத்தெதிர்ப்பார்

வேறு

514 எதிர்த்திருவிசும்பிடையெறிந்திடுவருள்ளங்
கொதித்திடுவர்செங்கைகொடுகுத்திடுவர்வெண்பல்
லுதிர்த்திடுவரென்பினையொடித்திடுவர்நெஞ்சின்
மிதித்துயிர்பதைத்திடவிதத்துடனடிப்பார்

515 தண்டியெதிர்சென்றுசிலர்தாடலைதுணிப்பார்
கண்டமதனைச்சிலர்கள்கண்டமதுசெய்வார்
மண்டமர்புரிந்துசிலர்வன்கரமறுப்பார்
துண்டமதனைச்சிலர்கடுண்டமதுசெய்வார்

516 ஏவரும்வெலற்கரியவீறில்பெருவாயிற்
காவலர்தமிற்சிலரையாயிடைகலந்தே
கூவிளிகொளக்கொலைஞர்கோறல்புரிகின்றார்
மேவும்விதிவந்தணையில்வெல்லவெவர்வல்லார்

வேறு

517 வீடரிதாயவெம்போர்விளைத்தலும்வேந்தன்சேர்ந்த
நீடியமணிமுகப்புநிரைதொறுமிடிந்தநீள்வான்
கூடியமணிசேர்செம்பொற்கோபுரநிலைகுலைந்த
பீடுறுகின்றமாடப்பித்திகைபிறழ்ந்ததன்றே

518 பொருவின்மாளிகையிடத்தும்பூம்பொழிலிடத்தும்பொங்கி
யருவிபாயமுதவெள்ளத்தகலிருவிசும்பிற்றோன்றுந்
தருணவெண்ணிலாக்கொழிக்குஞ்சந்திரகாந்தச்சோதி
பரவியவிடங்களெங்கும்பரந்தனகுருதிநீத்தம்

519 அந்நிலைதன்னின்மிக்கவன்னதொன்னகரினாப்பண்
கன்னவிறடந்தோள்வீரர்கம்பலைசெவிமடுப்ப
மின்னுவெம்படைஞர்யாரும்வெகுண்டனர்விரைவினீண்டி
மன்னியபுரிசைவாயில்வந்தனர்வளைந்துகொண்டார்

520 ஆங்கவர்வெருவியெங்ஙனடைகுவமென்றுகொண்டு
நீங்கரும்வாயினீங்கிநீள்கடைப்புறத்துப்போந்து
தாங்கரும்வெகுளிவீரர்தாந்துரத்திடத்தகைத்துத்
தீங்கறுமணிகுண்டத்திற்சென்றனர்திகைத்துவீழ்ந்தார்

521 இப்பெரும்புனனமக்கிங்கிருங்கதிதருமென்றேயோ
வப்பெரும்பயத்தாலந்தோவந்தநீர்குளித்தோர்யாரு
மெய்ப்படநாடியங்கண்மீண்டெழுந்திலர்களம்மா
தப்பறவக்கணத்திற்றாமுயிர்பரிந்தாரன்றே

வேறு

522 நெற்றிதருகண்ணர்திருநீறிலகுமெய்யர்
நற்சடிலசேகரர்கணான்குதடந்தோளார்
பெற்றமதுகைத்துவருபிஞ்சகனையன்றி
மற்றுமொர்தெய்வந்தனைமனத்தறிகிலாதோர்

523 சோதிவிடுகின்றதிரிசூலர்சிவதூதர்
மாதிரம்விளங்குகதிர்மன்னுமணிதுன்னுங்
கோதில்பல்விமானமவைகொண்டவண்விரைந்து
நாதனருளான்மகிழ்வினண்ணினர்கண்மன்னோ

524 தங்கொளியின்மிக்குயர்தனித்தனிவிமானத்
தங்கவரையந்நிலையினன்பினவைமேல்கொண்
டெங்கள்பெருமானுரியவின்னருளினேயோ
புங்கவர்தொழச்சிவபுரத்தினிடைபுக்கார்

525 செப்புமவரிப்புடவிதேடவருபாவ
மப்புனலொளித்ததினகற்றினர்களென்னா
வொப்பரியதீர்த்தமெனவோர்ந்துலகமாடி
னெப்பவமுமாற்றுமெனயாமொழிவதென்னோ

526 ஆதலினியாவர்களுமாதரவினென்றும்
வேதியர்தமக்குநிதிவேண்டியதொர்தானங்
கோதறவளித்துமணிகுண்டமதின்மூழ்கிற்
றீதில்சிவலோகமதுசென்றடைவரன்றே

527 பூர்வமுறுபூவணபுராணகதைதன்னைப்
பேர்பெறவழுத்துமுயர்பிரமகைவருத்தத்
தோர்வரியபேருலகுரைக்குமெழுபான்மூன்
றாரறிவளிக்குமத்தியாயமிஃதம்மா

வேறு

528 பரிதிமடுவுறுபான்மையை நாளுமேபரவையுடைதிகழ்பார்தனிலோதுவோ
ரொருமையுடன்மனனூடதைநாடுவோரூரியசெவிநுகரூனமின்மேன்மையோர்
கருணையுறுமிகுகாமருசீர்கொடேகருதியறைகுநர்பூசைசெய்காதலோர்
மருவுமுருவசிமாமுலைமீதரோவருடமொருபதினாயிரம்வாழ்வரே

துன்மனன்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 528

*****

## ஐந்தாவது

## தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்கம்

529 ஓதுநன்பலமாயுகமுறுவதாய்க்கேட்போர்
பாதகங்கணோய்பற்றறத்துடைப்பதாய்ப்பின்னுங்
காதல்கூர் மணிகன்னிகை மன்னுமோர்காதை
;சூதமாதவன்சுவுனககேளெனச் சொல்வான்

530 தெக்கிணந்தருதிக்கினிற்றிரைபுரள்பொருநைத்
தக்கதீரநீடலைமைசேர்தாபதர்நெருங்குந்
தொக்கவஞ்சிறைப்புட்குலந்துதைந்தபூம்பொதும்பர்
மிக்கதோர்தலம்வேணுநல்வனமெனவிளங்கும்

531 குலவுமவ்வனங்கொண்டதோர்குடதிசைமருங்கி
னலகில்பல்புகழுடைந்தகோலாகலமெனும்பேர்
நிலவுமக்கிராமத்தினோர்நேரிலந்தணனீ
டுலகம்யாவையுமொருங்குநின்றேத்திடவுதித்தான்

532 அந்தணர்க்கெலாந்தலைமையாயங்கமோராறுந்
தந்திடும்புகழ்தரித்தநற்சதுர்மறையுணர்ந்தோன்
முந்துகின்றவெண்ணெண்கலைமுழுதுணர்மேலோன்
சிந்தையிற்றிருவஞ்செழுத்தடைவினிற்செபிப்போன்

533 நித்தநன்னியமத்தொழினிரப்பிடுநெறியோன்
புத்திரர்தரும்பவுத்திரர்பொருவருகிளைஞர்
மைத்தடங்கண்மங்கையரொடும்வாழுநமென்னுஞ்
சித்தநன்குணர்வேதசன்மாவெனத்திகழ்வோன்

534 செங்கணேறெனத்தினந் தொறுந்தினந்தொறும் வளர்ந்து
கொங்குலாங்குழற்கோதையர்மனங்களிகூர்ந்து
துங்கமேவியகாமனேயெனவெழிறுதைந்து
மங்கலந்தருவடதிசைக்கிறையெனவாழ்நாள்

535 வந்தியாவருமணங்கமழ்மலர்ப்பதமிறைஞ்ச
விந்தமாநிலத்திரும்பொருள் யாவையுநுகர்ந்து
முந்தையூழ்வினைதிறம்பலான்மூப்புவந்தடைய
வந்தநான்மறையந்தணனாருயிர்துறந்தான்

536 அந்தவந்தணன்றந்தருளருமறைக்குலத்தோ
னிந்துவென்னநாடொறும்வளரெழிற்கலைமதியோன்
முந்தைநான்மறைசந்ததமுழங்கிடும்வாயான்
றந்தையிற்றிகழ்தருமஞ்ஞனென்னுநாமத்தோன்

537 சாற்றுகின்றவத்தருமஞ்ஞன்றனைத்தருதந்தைக்
கேற்றநூல்விதியிருக்கடனியாவையுமுடித்தே
நாற்றடந்திசையோடியனானிலமெங்கும்
போற்றுகங்கையிற்போதுவான்புந்தியிற்றுணிந்தான்

538 அத்தன்மெய்த்தகுமங்கம்யாவுந்தெரிந்தோர்கும்
பத்தமைத்துநற்படாங்கொடுபுதைத்துவாயரக்கின்
முத்திரைக்குறியிட்டுயர்முத்திதானல்கு
முத்தரத்திசைகொண்டுமாணாக்கனோடுற்றான்

539 வங்கவாரிதிவளாகத்துமருவியாங்காங்குத்
தங்குமாதவர்செங்கையிற்றானநன்கீந்து
பொங்குசீதநற்புண்ணியதீர்த்தங்களாடி
யங்கயற்கண்ணிபங்கன்மேவாலவாயடைந்தான்

540 அடைந்துமாநதியாடியேயருங்குலப்பிதிர்க
ளுடன்கலந்திடுமுனிவர்கடேவர்கட்குற்ற
கடன்கழித்துறுகண்ணிலர்கதியிலர்தரள
வடங்கொள்பூணணிமங்கையர்வனமுலையுண்போர்

541 விருத்தவேதியராதுலர்வேணவாவொழிய
வருத்தமேனியதழகுறவமைத்திடுஞ்சேதாப்
பெருத்தகாதன்மெய்த்தந்தைநற்பெரும்பதம்பெறுவான்
கருத்தனாகியாங்குதவியேகணிப்பருந்தானம்

542 வேணிமேன்மிளிர்வெண்ணிலாமிலைச்சியகூட
லேனுநாயகிதன்னைமுத்தினம்பணிந்தேத்திக்
காணுமாறரிதாகிய கடவுள்செம்பாகம்
பூணுலாமலைமங்கைசேர்பூவணமடைந்தான்

543 புடவிபோற்றுமப்பூவணங்கோயிலாக்கொண்ட
விடையுகைத்திடும் விண்ணவர்கோன்றனைவடுகக்
கடவுடன்பதங்கண்டுபின்கைகுவித்திறைஞ்சி
மடல்விரிந்தபூமாமணியோடையில்வந்தான்

வேறு

544 மண்டலம்புகழ்கொண்டமாமணிகுண்டநீரின்மணங்கமழ்
புண்டரீகமுநனையவிழ்ந்தபொதும்பர்நீடுசெய்பொழில்களு
மண்டராதியர்தானமும்புகலரியவாச்சிரமங்களும்
பண்டைநான்மறைபாடுமந்தணர்பழகிடுந்திகழ்கழகமும்

545 மன்னுமாச்சிரமத்தினிற்குநர்மாதவம்புரிமாட்சியும்
பன்னுநன்கலைபயிலுமந்தணர்பன்னசாலைகளும்பொறி
துன்னுமாமயிலாலவந்தெழுதூமமுந்தழலோமமுங்
கன்னல்வேடனைவென்றசவுநககண்டுகண்களிகொண்டனன்

546 சித்தநன்குதெவிட்டியாயிடைத்தேசுகால்வடுகேசனைச்
சுத்தமார்திலந்தூருவாக்கதைதுன்னுபூசைமுடித்துவந்
தத்திகும்பமகன்கரைக்கணமைத்தளித்தருளத்தனை
முத்திதானடைவிப்பவெய்துபுமோகமோடதின்மூழ்கினான்

547 மூழ்குமேல்வையினாழ்கடற்புனன்மொண்டுசூன்மழைபொழியவே
சூழ்தருந்திசைமாறிடும்படிதூவுமாலிகள்சிதறிநல்
வேழ்வியந்தணன்விசையெழுந்துசென்மிகுபதங்கடமிடறவத்
தாழ்தலத்திடைவீழ்தலுற்றதுசங்கரன்றிருவருளினால்

548 மிக்கவத்தடம்வீழ்தல்கண்டுளம்வெருவியோடியெடுத்தன
னக்கடத்தினினிட்டவங்கமனைத்துமக்கணமாய்மலர்
தக்கநற்சதபத்திரத்தொடுசார்ந்தவுற்பலமாகவே
தொக்கவன்பினிறைஞ்சியந்தணர்சூழலுற்றிவைசொல்லுவான்

549 அற்புதந்தனையென்சொல்கேன்மிகுமறவிர்காளரிதரிதரோ
பெற்றதாதைபிறங்கெலும்புபெருங்கடத்திலிருந்துதா
ளெற்றவிந்தவிலஞ்சிநாப்பணெழுந்துவீழுந்தரவிந்தமோ
டுற்றபானலதாகயானொருவேனுமேதிருவுடைமையேன்

550 பாசமோசனதீர்த்தமென்பதுபண்டுகண்டதுகேட்டதாய்க்
காசிமாநகரத்தினும்மிதுகட்டுரைத்திடவொண்ணுமோ
பேசின்முன்னமருந்தவஞ்செய்பிதாக்களுங்கதிபெற்றனர்
பூசுராதிபர்போற்றுமிப்பதிபூர்வமாமிதுபுகலிலே

551 ஈதுமுன்னரிழைத்தமாதவமீண்டுகண்டனனாகவிப்
போதெனன்குலவாணரும்புகழ்பொற்பின்வந்துபொருந்தினா
ராதலாலடியேனுமுய்ந்தனனதிகசற்குருவிரதனா
னாதவேதமுனகாடைந்தனனென்றுநின்றுநடித்தனன்

552 இன்னதன்மையனிந்நிலத்தினினென்னின்மேலவுறின்றெனா
வன்னவந்தணர்தம்மைநீங்கினனாலயந்தனையண்மியே
துன்னுநாகர்தலத்ததுநின்றுமொர்சோதிலிங்தாகியே
முன்னைநாளின்முளைத்தெழுந்தருண்மூர்த்தியைத் தொழுதேத்தினான்

வேறு

553 அருண்மேனிதரித்தருள்வாய்சரணமறிவுக்கறிவாமானேசரண
முரகாபரணாசரணஞ்சரணமொருமூவிலைவேற்கரனேசரணம்
பொருளேயடியார்புகலேசரணம்பூதப்படையாய்சரணஞ்சரணந்
திருமாலயனறிவரியாய்சரணந்திகழ்பாற்கரபுரவசிவனேசரணம்

554 கழைவேளையெரித்தருள்வாய்சரணங்கனகாசலவிற்கரனேசரணம்
பொழில்சேரநிறைந்தருள்வாய்சரணம்பூர்வந்தருபுண்ணியனேசரண
மொழியாவுலகமொளிப்பாய்சரணமொருவெஞ்சமனையுதைத்தாய்சரணஞ்
செழுநான்மறையின்முடிவேசரணந்திகழ்பாற்கரபுரசிவனேசரணம்

555 ஒருமானிலகோருருவாய்சரணமோதுந்தொழிலைந்துடையாய்சரணம்
புரமூன்றெரிசெய்தருள்வாய்சரணம்பொருமால்விடைமேல்வருவாய்சரணம்
பெருகாதரவேபிரியாய்சரணம்பிறைவேணியனேசரணஞ்சரணந்
திரையார்புனல்சேர்சடையாய்சரணந்திகழ்பாற்கரபுரசிவனேசரணம்

556 அடைவார்வினை தீர்த்தருள்வாய்சரணமருளாலறியும்பொருளேசரணங்
கடல்சேர்விடமுண்டவனே சரணங்கமலன்றருகங்கையனே சரணஞ்
சுடர்சேர்சுடலைப்பொடிபூசிடுநற்சுகரூபமதையுடையாய்சரணஞ்
செடிசூழ்மிகுகற்பகநன்னிழலிற்றிகழ்பாற்கரபுரசிவனேசரணம்

557 மாயாவுருவாரமலாசரணமாலானவர்பாலேலாய்சரணந்
தாயாயுலகந்தருவாய்சரணந்தன்னடியார்கட்கருள்வாய்சரணம்
பேயோடாடும்பெருமான்சரணம்பிரிவருதிவ்வியவுருவாசரணந்
தீயேந்திய செங்கரனே சரணந்திகழ்பாற்கரபுரசிவனே சரணம்

558 பொருமதகரியுரிபோர்த்தாய்சரணம்பொதுவினிடமிடுபுனிதாசரணம்
வெருவரல்விடவருள்விகிர்தாசரணம்வேதபராயணநாதாசரண
மரியயனடிபரவமலாசரணமடல்விடைதருகொடியரனேசரணந்
திருமணியுமிழ்கட்செவியணிமகுடந்திகழ்பாற்கரபுரசிவனேசரணம்

559 பத்தர்விரும்புவரத்தினைநித்தம்பரிவான்மிகவுந்தருவாய்சரணம்
புத்திகொளுத்தமர்புந்திபுகுந்தவர்பூசனைகொண்டருளீசாசரணம்
தத்துவஞானமளிப்பாய்சரணஞ்சஞ்சிதபாசமறுப்பாய்சரணஞ்
சித்தியுமுத்தியுமிக்கருள்புரியுந்திகழ்பாற்கரபுரசிவனேசரணம்

560 அட்டகுணஞ்சேரமலாசரணமாதுலர்தம்மையளிப்பாய்சரண
மெட்டுருவாகியவிறைவாசரணமெங்குநிறைந்தருளெந்தாய்சரணங்
கட்டமுநோயுங்கவர்வாய்சரணங்கதியருள்பரபதமானாய்சரணஞ்
சிட்டர்தினந்தொழுந்தேவேசரணந்திகழ்பாற்கரபுரசிவனேசரணம்

வேறு

561 என்றின்னனபன்னியிறைஞ்சுதலுமிமவானருளுமுமையாளிடமாம்
பின்றங்கியசெஞ்சடையெம்பெருமான்பெரிதுந்திருவுள்ளமலர்ந்தருளி
நின்றன்புமனத்துறுதருமஞ்ஞனேர்கண்டிடநல்விழிநல்கியரோ
வன்றங்கலராசனன்மாலறியாவத்தன்பரமுத்தியளித்தனனே

562 அந்தன்பரமுத்தியளித்தருளியமரும்பொழுதினருடங்கியநற்
சித்தங்களிகூர்செழுநான்மறைதேர்திகழ்ஞானசுகோதயமாதவர்காண்
முத்தந்திரைதத்தியதன்கரையின்மோதுங்கடல்சூழ்முதுபாருலக
மித்தன்மையையுனித்தர்மஞ்ஞனேத்துந்துதிபன்னியந்தனரால்

563 தருமஞ்ஞனைச்சந்ததமும்புகழ்வோர்சாமீபமதிற்றானெய்திடுவா
ரிருதஞ்செவிகொண்டிடுவோர்கையினல்லிலகும்பரமுத்தியையெய்திடுவார்
பரவுந்தரையிற்படர்கின்றிடுவோர்பரிவாலிவைபன்னினரேலவர்தா
முரைதங்குடல்வீடுறுகாலரன்வந்துறுதாரகமந்திரமோதுவனால்

வேறு

564 அங்கவருபதேசந்தனையுற்றேயரியவிமானத்துரிமையினேறிச்
சங்கரனருள்கூர்கிங்கரராவார்சரதமிதருள்வழிசெவியினிறைப்போர்
வெங்கனலாயிரம் வேள்வியர்வேள்விமேயநல்வாசபேயம்மோர்நூறு
பொங்குலகஞ்செய்தபுண்ணியநண்ணுவர்பொழில்புரிபாவமுமொழிகுவரன்றே

வேறு

565 பிரமகைவர்த்தமாம்பெரும்புராணத்திற்
றருமஞ்ஞன்காதையத்தியாயஞ்சாற்றிடி
னருமையிங்கெழுபஃதந்தநாலதிற்
கரைதருசவுனககருத்திற்காண்டியால்

வேறு

566 தருணமெய்ச்செழுந்தழல்வளர்த்ததர்மஞ்ஞனுக்குநற்கதியளித்தநீள்
பரிதிதொட்டபைந்தடமதுற்றசீர்ப்பரவைசுற்றிடும்படியிடத்தரோ
கருதியிற்பெருங்கதைபடித்துளோர்கருணையிற்றினஞ்செவிநிறைத்துளோ
ரருணலத்தினங்கணனுருக்கொடேயரனிடத்துவந்தருகிருப்பரே

தருமஞ்ஞன் முத்தி பெற்ற சருக்க முற்றியது
ஆகச் செய்யுள் 566

*****

## ஆறாவது

## உற்பலாங்கி பதியை யடைந்த சருக்கம்

567 தற்பரத்துடன் றிகழ்சவுனகப்பெயர்
முற்றுணரருந்தவமுநிவகேட்டியாற்
சொற்றிடற்கரும்பரிசுத்தமேவிய
நற்கதைதன்னையாநவிற்றுவாமரோ

568 இம்மைநற்றவமுழுந்தெம்பிரானிடத்
தம்மைதன்னடியிணையருச்சித்தேத்தியோர்
கொம்மைசேர்வரிமுலைக்கோதில்கொம்பனாள்
கைம்மைநீக்கியமணிகன்னிகைப்புனல்

569 முன்னருந்தவம்பலமுற்றியன்னைதன்
பொன்னடிக்கமலத்திற்பூசையாற்றிய
வன்னவள்காதையையறைதிசூதநீ
யென்னலுங்கேண்மினோவென்றியம்புவான்

570 துங்கபத்திரையெனுந்தூநதிக்கரை
தங்கியபுண்ணியகிராமந்தன்னில்வாழ்
பங்கயனனையகோபாலனென்றொரு
துங்கவேதியன்மறைக்குலத்திற்றோன்றினான்

571 அன்னவன்றன்னிடத்தவதரித்ததோர்
கன்னிமான்கன்னல்வேள்கணைக்கிலக்கனாள்
பொன்னுலகத்தினிற்புலவர்போற்றிட
மன்னியவுலகினில்வந்துதோன்றினாள்

572 முந்தைநாளிவளூறின்முகில்வணன்கடற்
செந்திருமாதினைச் சிந்தைகொண்டிடா
னந்துநான்முகனுநாமாதைநண்ணிடா
னிந்திரன்வேண்டிலனிந்திராணியை

573 கற்பகஞ்சேர்தருகாமவல்லியோ
கொற்றவில்வேளையாட்கொள்ளுந்தெய்வமோ
வெற்றியந்தணன்புரிமெய்த்தவங்கொலோ
மற்றவடன்னையான்மதிக்கற்பாலதோ

574 நிறையிருட்சைவலநீலமாமுகில்
குறைவில்சீர்க்கொன்றையின்கோலந்தாங்கியே
பிறையொடுபெருந்திருப்பிறங்கன்மேலணிந்
தறல்விரிபாளைசேரளகபந்தியாள்

575 கொம்மைசேரமுதநற்கோதிலாக்குளிர்
செம்மதிபோன்றொளிர்திருமுகத்தினாள்
வெம்மைநீடியபுகழ்வேனில்வேடிருக்
கைம்மிகுஞ்சிலைநுதற்கவினிலங்குவாள்

576 தர்மநற்றாழ்குழைதந்தபொற்புறு
மாமணியூசல்போல்வயங்குகாதினாள்
காமசங்கீதமேகலந்தகாமனூற்
பாமணமொழுகுசெம்பவளவாயினாள்

577 சேயுயர்விசும்புறுதிங்கள்போன்றொளிர்
வேயுறுநித்திலம்விளங்குமூரலாண்
மாயவனேந்தியவண்ணவால்வளை
யாயகந்தரத்திலமைந்தபூணினாள்

578 இனமிகுகயற்கண்மூண்டிகல்செய்யாமலே
துனிவழியடைத்துநேர்துலங்குதுண்டத்தாள்
புனமுறுபசுக்கழைபொருந்துகின்றதோட்
கனவளைதாங்கியகாந்தட்கையினாள்

579 கோதில்பூவணத்தினுங்கும்பகோணத்துங்
காதல்கூர்விண்ணவர்கரந்துதாங்கொணர்ந்
தாதிகாலந்தருமமுதகும்பமிப்
போதுசேர்ந்தனவெனப் பொலிந்தகொங்கையாள்

580 தூமணிகன்னிகைச்சுழிகொளுந்திமேன்
மாமணிவயிற்றுறுமயிரொழுங்கினாள்
காமருசிறப்புறுகலைவல்லோர்களு
மாமதியாலறிவருமருங்குலாள்

581 ஆர்ந்தமாமணிதிகழும்பொன்மேகலை
பார்ந்தளின்றொகுபணம்பரித்தவல்குலாள்
வார்ந்தநெட்டிலையொடுவயங்குபூங்குலை
சார்ந்திடுமரம்பைநேர்தருகுறங்கினாள்

582 கருதரியதாயகற்கடகந்தன்னைநேர்
தருமழகியமுழந்தாள்வயங்குவாள்
கிருதமாலையில்விளையாடுகின்றநற்
றிருமிகுமணிவரால்சேர்ந்தகாலினாள்

583 எண்ணுவமேயமுமிசைக்கநின்றெதிர்
நண்ணுவமானமுநடுவினாவினேர்
கண்ணுறநிறப்பவேள்கருத்தமைத்துடன்
பண்ணியபொற்றராசெனும்பாட்டினாள்

584 இரதிகாந்தன்கலையெழுதுபுத்தக
மருவியவிருபுறவடிவயங்குவா
ளருளுடனுரியபேடாடல்கொண்டிடும்
பரிபுரவொலிமிகுபதாம்புயத்தினாள்

585 நாதவேதம்பயினற்குலாதிப
காதல்கூரின்பநற்கற்பின்மேதகு
மாதராண்மலர்தலையுலகமாண்புற
வோதுமுற்பலாங்கியென்றுரைக்கும்பேரினாள்

586 இந்தநல்லுலகினர்யாருமேத்திடச்
சுந்தரமெய்யினிற்றுலங்கிநாட்குநா
ளந்தநன்மடநடையன்னமன்னவள்
சந்திரகலையெனத்தான்வளர்ந்தனள்

587 பங்கமோடன்னவட்பயந்துளோர்கடாந்
தொக்கிருந்துளங்களிதுளங்கவோர்நனாண்
மைக்கருங்கண்ணியைமாமணஞ்செயத்
தக்கவர்யாரெனத்தம்மிற்றேர்ந்தனர்

588 இன்னணந்தம்முளத்தெண்ணியெண்ணியே
யன்னவரிருவருமாயுங்காலையிற்
றன்னிகரந்தணனொருவன்றான்மகிழ்
மன்னியமணிக்கடைவாயில்சார்ந்தனன்

589 மன்றல்செய்விருப்புடைமறைவலாளன்முன்
சென்றவன்சொன்றியீகென்றுசெப்பலு
நன்றுசேரெழிலினைநாடித்தேவனென்
றொன்றியவுள்ளநின்றூசலாடினான்

590 பழகியநான்மறைபயிலுமந்தண
னழிவிலாப்பெருந்திருவழகுங்கோலமுங்
குழலுடன்யாவையுங்குறிப்பிற்கண்ணுறீஇக்
கழிபெருங்காதலான்கழறன்மேயினான்

591 மேவினையாரைநீமிக்கவன்புகூர்
யாவனின்றந்தையெங்கேகுகிற்றியென்
பாவையுமன்னமும்பரிந்துநல்குவேன்
மாவிரதீயுரைவழங்குகென்னவே

592 என்னலுமதற்கிசைந்தின்சொல்வாய்மையாற்
கன்னிசேருவகையங்கடற்குளித்தனன்
றன்னுணர்விழந்துரைதளர்ந்துதேறினன்
பின்னருந்தன்னுடன் பேசலுற்றனன்

593 மங்கலமவுட்கலியவிப்பிரன்றரு
திங்கள்போற்கலைமதிசேர்ந்தமைந்தன்யான்
றங்கியபிரமநற்சரியம்பூண்டுளேன்
பொங்குமாதவம்பலபுரியும்புந்தியேன்

594 அருமறையங்கமோராறுமாய்ந்துளேன்
குருவருளுடைமையேன்கோதினின்மகட்
டருதியேலென்கையிற்றகுவதாமென
வுரியமோனத்துடனுற்றிருந்தனன்

595 ஆங்கவன்மோனமோடிருந்தகாலையிற்
றாங்கரும்விருப்புடன்சார்ந்துதன்மனை
வாங்குவினுதலியைவரவழைத்தனன்
பாங்குடையந்தணன்பகர்தலுற்றனன்

596 நம்பெருந்தவத்தினானமதுகற்பகக்
கொம்பினைமணஞ்செய்வான்குறித்தொரந்தண
னிம்பரினடைந்தனனிருக்கின்றானென
வம்புலாமுலையவண்மகிழ்ந்துவாழ்த்தினாள்

597 அங்கதுபோழ்தினினரியகேதனந்
தங்குபூம்பந்தர்கள்சமைத்துச்சார்ந்தநற்
பங்கமில்பல்லியந்துவைப்பப்பாவைதன்
மங்கலமணவணிமரபினாற்றினார்

598 அறுசுவையடிசிலந்தணர்கட்காற்றியே
மறைவழிமணமகன்மலர்ப்பதங்கழீஇ
யறையிருகரங்களினளிக்கமாதொடுங்
குறைவில்சீர்மனைமிசைக்கொண்டுசேர்த்தினார்

599 தாவில்சீர்க்கன்னிகாதானநல்குவான்
காவிசேர்தடங்கணாள்காண்டகப்புனல்
பூவுறழ்செங்கையிற்புகாமுனன்குயிர்
மேவியமணமகன்வியோகமாயினான்

600 ஆண்டகையுயிர்பிரிந்தவனிசேர்தலு
மாண்டனனென்றுநன்மாதர்மைந்தர்கள்
காண்டலுநடுங்கிமெய்கலங்கியேங்கியே
யேண்டகவெடுத்தணைத்தினிதியம்பினார்

601 பொற்கொடிமடந்தையிப்போதுபாக்கியம்
பெற்றிலளென்றுதாம்பேசிப்பன்முறை
மற்றவட்புல்லியேவாய்புலம்பிநின்
றற்புதமெய்தினரரற்றுகின்றனர்

602 அந்தணன்மணப்பிரேதத்தையன்பினான்
முந்தைநூல்விதிவழிமுறையிற்கொண்டுதான்
றந்திடுமந்தியச்சடங்கிழைத்தபின்
வந்தனர்தம்பதிவழிக்கொண்டேகினார்

603 பளபளத்திளகிநற்பமரகுங்குமக்
களபமுங்கியமுலைக்காமர்கன்னியுந்
தளரிடையன்னையுந்தந்தையும்பெருங்
கிளைஞருநெஞ்சகங்கிலேசமுற்றனர்

604 பின்னர்முத்திங்கடான்பெயர்ந்துசெல்லவக்
கன்னியைமணஞ்செய்வான்கருதிச்சேர்ந்தரோ
வன்னவந்தணனுநீரங்கைதாங்குமுன்
றென்னிலைசேருயிர்துறந்துபோயினான்

605 மங்கையர்க்கரசியைமாமணஞ்செய்வான்
றுங்கமோடணைகுநர்தம்மைத்தூக்கினோர்
பங்கமிலாதநற்பத்திரட்டியோர்
தங்களாருயிர்தனைத்தணந்துபோயினார்

606 மற்றவள்பொருட்டிவர்மாய்ந்தபின்னரே
பெற்றருளன்னையும்பிறங்குதாதையும்
வெற்றுடம்பாகவிண்விரைந்துபோயினார்
பொற்றொடிதான்றனிபுலம்பிவைகினாள்

607 நீடியகிளைஞரானிந்தையுற்றனள்
கூடியேயணைதருகொழுநர்க்கூட்டிடும்
பீடுறும்பெரும்புனற்பிறங்குநற்றலந்
தேடியேயெண்டிசாமுகமுஞ்சென்றனள்

608 ஓதுநல்லுண்டியுமுறக்கமுங்கடிந்
தேதமிறீர்த்தங்களெங்குமாடியே
போதவிழ்பொழிறிகழ்பூவணந்தனிற்
காதலினடைந்தனள்காமர்கன்னிகை

609 படர்ந்தெரியுமிழ்கொடும்பாலைசேர்நில
நடந்திடும்வெம்மையானன்புனற்றரு
தடந்தெரிகுற்றதிதாகமோடுறா
வடந்திகழ்பூண்முலைமடந்தைகண்டனள்

610 பண்டருமறையவர்பன்னசாலையும்
புண்டரீகச்செழும்பொய்கையும்புக
ழெண்டகுமிருந்தவரியைந்திலங்குபூந்
தண்டலைசூழ்மணிகுண்டந்தன்னையே

611 வெள்ளிடைவெயிலின்மெய்வெதும்பிவேர்வர
வுள்ளநொந்தடிபெயர்த்தியங்கியேயுராய்த்
தெள்ளுதீம்புனன்மிகப்பருகித்தேக்கியே
யள்ளனீர்த்தடங்குடைந்தாடினாளரோ

612 தடமடுமூழ்கியதபோபலத்தினா
னிடைவிழுநாளறவிருந்தவம்புரி
தொடர்வுறுமருள்விடுசோதிதுன்றுமெய்
முடிவறுகாலவமுநியைக்கண்டனள்

613 பன்னிருகான்முறைபடிபஞ்சாங்கமாய்
மன்னியபொன்னடிவணங்கிவீழ்ந்தெழீஇ
யன்னவள்கழறலோடணுகலின்றியே
நின்னருள்புரியெனநேர்நின்றாளரோ

614 சின்மயமாகியசிவானுபூதிசேர்ந்
தந்நிலைதிரிந்தவனன்னமென்னடைக்
கன்னிகைதன்னைநேர்கடைக்கண்டாக்கியே
முன்னுறுகாதலான்முநிவன்கூறுவான்

615 சீர்மிகுமாதராய்சேர்கநன்குநீ
யார்கொலோவெங்கிருந்தேகுகிற்றியா
னேர்தருகணவன்யார்நிற்பயந்தவன்
பேரெதிங்கடைந்ததென்பேசுவாயென்றான்

616 அகங்குதுகலிப்பவேயரியமாதவன்
மிகுந்தபேரன்புடன்விளம்பக்கேட்டுள
மகிழ்ந்தனள்பாக்கியவதியும்யானெனாத்
திகழ்ந்தசெம்பவளவாய்திறந்துசொல்லுவாள்

வேறு

617 நெடுங்காலந்தவமுழந்துநீள்சடையோனருள்படைத்துநீண்டபார்மேற்
படர்ந்தேறும்பல்புகழ்சேர்பங்கயனையனையதவப்படிவமென்னா
வுடன்சேருமுயிர்த்துணைவருயிர்துறந்துமுயிர்சுமந்திங்குழலுமிக்க
கொடும்பாவியெனதுநிலைகூறரிதாயினுஞ்சிறிதுகூறக்கேண்மோ

618 தொன்மறையோர்புகழ்ந்தேத்துந்துங்கபத்திரையெனுமோர்தூநதிப்பான்
மன்னுமதன்கரையின்கண்மருவுபுண்ணியகிராமத்துவாழ்வோன்
கொன்னவிலந்தணர்கோமான்கோபாலன்றந்தகுலக்கொடியேனானே
யிந்நிலத்திற்பிறந்தவன்றேயெல்லோருமேசுதற்கிங்கிலக்காய்நின்றேன்

619 இங்கதுவுமிசைக்குவன்கேளெனையளிப்பவெனைப்பயந்தவெந்தையந்தோ
மங்கலமாமறைவிதியின்மணவாளர்செங்கையினின்வழங்கும்வேலைத்
துங்கமுறுமைந்நான்குதுணைவராருயிர்துறந்துதுறக்கஞ்சேர்ந்தா
ரங்கதனாலடியேனுமருங்கணவற்பெறவேண்டியடைந்திட்டேனால்

620 முன்னைவினையின்பயனோவிம்மையில்யான்செய்தபவமூண்டதேயோ
கன்னியெனப்பேர்படைத்துங்கலங்கழிந்தகாரிகைபோற்கலங்காநின்றேன்
றன்னிகராகின்றவெழிறாங்குமடமங்கையர்கடங்கண்முன்ன
ரென்னேயோவென்னேயோவின்னமும்யானுயிர்சுமந்திங்கிருக்கிறேனால்

621 மிக்கார்வத்துடன்கௌரிவிரதமநுட்டித்துமுன்னைவிதியினாலே
யெக்காலுமிழைத்திடுமுத்தியாபனநீயிழுப்பவிஃதியைந்ததென்று
முக்காலமுதலியனமுறையானேமுற்றறிந்துமொழியுமந்தத்
தக்கார்கொளம்முநிவன்ஞானக்கண்ணாலுணர்ந்துசாற்றினானே

622 அலர்கதிர்வெய்யோன்றீர்த்தத்தங்கணன்றனருளதனலாடலாலே
நிலவலயந்தனிற்செய்தநீண்டகொடும்பாதகமுநீங்காநின்று
மலிபுகழ்சேரித்தீர்த்தமான்மியத்தினான்மிகுமங்கலமுமாகு
முலகமெலாம்பணிந்தேத்தவுயர்தவநீபுரியும்வகையுரைப்பக்கேண்மோ

623 பைந்தடஞ்சேர்தருமுட்டாட்பங்கயப்பொற்பூவினொடுற்பலங்கைக்கொண்டு
மந்திரதந்திரம்பொருந்தவாலுகவேதிகைசதுரம்வகுத்தமைத்தே
யந்தரியையாவாகித்தக்கற்பவிதிபூசையாற்றினின்பாற்
சுந்தரிநேர்வந்துநிற்பொற்சுமங்கலியந்தந்தருளுஞ்சுடர்வேற்கண்ணாய்

624 என்றுமுநிவரனிசைப்பவேந்திழைநலிருங்கணவற்பெறுவான்வேண்டி
நன்றிதெனமகிழ்ந்தந்தநன்முநிவனாச்சிரமநணுகிப்பாங்கா
லொன்றியவன்புடன்விதிநின்றுமையாடன்றிருநோன்பையுவந்துநோற்றே
யன்றுடனுத்தியாபனஞ்செய்தருங்கணவன்றனையருளினடைந்தாளன்றே

625 இத்தகையதீர்த்தத்தினினிதாடவிடர்ப்பிறவிக்கடற்படாவே
யுத்தமநற்குலத்தினில்வந்துற்பவித்தவுலகமெலாமுவப்பினாலே
நித்திலத்தையொத்தநகைநேரிழைதன்வைதவ்வியநீக்கலாலே
பத்தியுடன்மடவாரும்படிந்தாடக்கடவர்தினம்பரிவிற்பாங்கால்

வேறு

626 இடபநல்லிரவிதன்னிலெழிறருமிந்துவாரத்
துடனிகழ்நடுநாளந்தவோடையினாடிமன்னுங்
கடனுறுமிக்ககாமக்கலங்கழிமகளிரானோர்
தொடர்பினால்வருபிறப்பிற்சுமங்கலியாகிவாழ்வார்

627 கோதின்மங்கலையாய்க்காதற்கொழுநரைக்கூடுகின்ற
மாதராரந்நீராடின்மகிழ்தருமகப்பேறுண்டாங்
காதலிற்கலந்தகாமர்கன்னியர்கணவற்சேர்வார்
மேதகுத்தியாபனத்தால்விரதநற்பலங்களுண்டாம்

வேறு

628 அற்பினோங்குசீரரனடிக்கண்வாழற்புதந்தருமருடவத்தினா
னுற்பலாங்கிதன்கதைபடித்துளோருய்த்துணர்ந்துதஞ்செவிவழிக்கொள்வோர்
கற்குமாண்பினோர்கலியகத்தரோகட்டவெங்கொடும்பவமகற்றியே
மற்றையாண்டையோர்வளமைபெற்றுமேல்வைத்திடுங்கதிமருவுகிற்பரே

உற்பலாங்கி பதியையடைந்த சருக்க முற்றியது

ஆகச்செய்யுள் 628

*****

## ஏழாவது

## பாற்கரபுரச் சருக்கம்

629 தன்னுயர்தவத்தின் மிக்கசவுநகமுனிவவன்பான்
மன்னியவுற்பலாங்கிவண்கதைவகுத்துரைத்தாம்
பன்னுபாற்கரபுரப்பேர்படைத்ததுபகர்வமென்னா
வின்னருட்சூதன்வேதவியாதனையிறைஞ்சிச் சொல்வான்

630 காசினியிடத்து மேலாங்காசிபன்றனக்குமிக்க
வாசிலாவழகுபூத்தவணியிழையதிதியென்பா
டேசுறநிவந்துவானிற்செறியிருள்விழுங்கியெங்கும்
வீசுசெங்கதிரோன்றன்னை மேதினிவிளங்கவீன்றாள்

631 எல்லையில்புகழ்சேர்தொட்டாவீன்றருளிலவச்செவ்வாய்
முல்லைசேர்வனமுருந்தின் முகிழ்நகைவயங்குகொங்கை
நல்லசஞ்சையேயென்னுநண்ணருங்கற்பகஞ்சேர்
வல்லியைப்பரிதிவானோன் மாமணம் புரிந்தான்மன்னோ

632 குன்றெனத்திரண்டெழுந்தகுங்குமக்குவவுத்தோளின்
மன்றலந்தொடைசேர்நல்வைவச்சுதன்றனையும்வன்கட்
டன்றனிப்பகடூர்வெற்றித்தருமராசனையுநீலந்
துன்றுமெய்யமுனையென்னுந்துடியிடைதனையுமீன்றாள்

வேறு

633 பேசியவந்தப்பெண்கொடியென்னும்ப்ரபையென்பா
டேசுறுசெங்கதிரைத் தொழுதெய்வமெனக்கொள்வாள்
வீசுசெழுங்கதிர் வெம்மையினாற்றலண்மேவாளாய்
நேசமுடன்றன்னிழறானாகநினைந்திட்டாள்

634 அந்தநிழற்றனதங்கமதாகவணங்கேநீ
யிந்தவிருத்தமியம்பலையென்னவிசைத்திட்டே
சிந்தைமகிழ்ந்துசெழுங்கதிரோனுளஞ்சேமித்து
வந்துரைதந்தனடந்தையிடத்தினில்வரலாறே

635 தன்மகடன்னிலைகண்டுவெகுண்டுதடந்தோளான்
வன்னமயிற்பெடையன்னகுலக்கொடிமாதேகே
ணின்னுறுகேள்வனையன்றியெனில்லிடைநீசேற
லுன்னகமிந்நிலையொல்லையினேகெனவுரைசெய்தான்

636 அம்மொழிகேட்டலுமக்கணமங்ஙனகன்றந்த
வெம்முனைவேல்விழிமின்மனைமேவிடவெருவுற்றே
கொம்மைகொள்பேடுறுகொய்யுளையுருவங்கொண்டந்தச்
செம்மைதரும்புகழுத்தரகுருவது சேர்கின்றாள்

637 சேர்ந்தலர்செங்கதிர்வானவன் வெம்மைதிளைப்பாளாய்ச்
சார்ந்தலரும்பொழினின்றுமுதிர்ந்துலர்சருகார்ந்து
கூர்ந்தகடுங்கதிரோனையுளத்திற்கொண்டந்த
வார்ந்தகருங்குழன்மாதுதவஞ்செய்துவருநாளில்

638 வார்தருபூண்முலைவாள்விழியாமடமயில்செய்த
தேர்வரிதாகியபட்டிமையிறையுந்தேரானா
யார்கலிவேலைமுகட்டினில்வந்தெழுமழல்வெய்யோன்
றார்குழன்மேவியசாயையையன்பிற்சார்ந்துற்றான்

639 மருவியசாவருணீயெனுமெட்டாமநுவேந்தன்
றரைபுகழ்தரவருமொருசனியீசன்றம்மோடும்
பரவருமிகுபடவரவகலல்குற்பணியின்சொ
லிருள்பருகியகுழலுறுபுத்திரியையுமீன்றாளாய்

640 முன்னவடானருண் மூவர்கடம்மையுமுனிவுற்றே
பின்னவடானருண் மைந்தர்கள் பாலருள்பெருகுற்றா
ளன்னதுகண்டுமறிந்திலன் முன்னவனனுசன்றான்
புன்மதிகொண்டுபுகன்றகடுஞ்சொல்பொறானாகி

641 தாயெதிர்வந்தவனையிடறிடவொருதாடுக்கி
நீயிதுசெய்ய நினைந்தனை நின்றாண் முரிகென்றே
யாயவனங்கணகன்றிடவவ்வந்தகனைத்தா
னேயெனுமுன்னமிசைத்தனளந்தவிருஞ்சாபம்

642 மாதுரைதந்துமுனிந்துவழங்கியவன்சாபந்
தாதையுணர்ந்திடவந்தகன்வந்தது சாற்றக்கேட்
டேதமின்மைந்தர்களேதுசெய்கிற்பினுமீன்றோர்க
டீதுறுமாமொழிசெப்பிடினங்கதுதீதாமால்

643 குரும்பைமுலைக்குயின்மென்மொழியிட்டகொடுஞ்சாபம்
பொருந்துபுழுக்களருந்தசையுண்டுனபொற்பாதந்
திருந்துகவென்றருண் மைந்தனொடங்குரைசெய்தற்பி
னருந்ததிநேர்தருகற்பினணங்கையடைந்தானால்

644 அந்தக்காலத்தலர்கதிர்கொண்டேயகல்வானில்
வந்திப்புவியில்வல்லிருள்சீக்குமார்த்தாண்டன்
சிந்தைக்கெட்டாச்சித்திரமதனைத்தேரானாய்ச்
சந்தக்கொங்கைத்தையலைநோக்கித்தான்சொல்வான்

645 மேயநம்மைந்தர்கண் மூவர்கடம்மைவெகுண்டிந்தச்
சேய்களையன்பினுவந்துரைசெய்தது செப்பென்பா
னீயெனலும்ப்ரபையன்றெனவஞ்சினனேர்நின்ற
சாயையெனும்படிசாற்றினள்கற்பின்றலைநின்றாள்

646 பொங்கியெழுஞ்சுடர்நின்னிலைகண்டுபொறாளாகி
யங்கவள்வைத்தெனையன்பினகன்றனளத்தன்பாற்
செங்கதிர்வீசு திகழ்ந்தவருட்கடல்சேரெந்தா
யிங்கடியன்பிழைநீபொறுத்தாண்டருளென நின்றாள்

647 தன்னிகர்சாயையெனுங்கொடிசாற்றியமாற்றங்கேட்
டந்நிலையின்கணறைந்திலனொன்றுமருஞ்சாப
முன்னரிதாகியபொங்கொளியாவுமொடுக்கிச்சொற்
றென்னுலகம்புகழ்மாதுலன்மாமனைசேர்ந்தானால்

648 எல்லொளிவானவனென்னொருமடமானெங்குற்றா
ளொல்லையினீயிதுசொல்லெனவுத்தரகுருவுற்றே
யல்லடுநின்கதிர்வெம்மையினாற்றலளாயோடிப்
பல்குதவந்தனையாற்றினளென்னலுமப்பானு

649 குன்றலிலாவியல்கொண்டதொராண்மாவாயேகித்
துன்றியமனையைக்கண்ணுறவெண்ணீர்த்துளிதானு
மொன்றியவிருதொளைநாசிகைவழிதரவொழுகுற்றே
பின்றொடர்காலைமருத்துவரிருவர்பிறந்தார்கள்

650 அன்ன நல்வேலையினலர்கதிர்வெய்யவனன்பாலே
நின்னையடைந்தனனின்கணவன்யானீயஞ்சே
லென்னலுநற்றவமெய்தலினிரவியொடினபுற்றாண்
மின்னெறிவிரதமிழைத்தலின்வெம்மையின்வீடுற்றாள்

651 வீடுற்றந்தவிளங்கிழையுந்திகழ்வெய்யோனுங்
கூடுற்றன்பின்முயங்குபுதன்பதிகொண்டேய்வா
னாடுற்றன்பினனாகதலத்திடைநண்ணுங்காற்
றேடுற்றங்கணடைந்தனர்பண்ணவர்திரளோடும்

652 தேவர்கள்கந்தருவத்தவரேனையர்செகமெங்கு
மேவுமநுக்கிரகந்தருவெம்மைவிருப்பாலே
யோவறுசெங்கதிர்வானவன்மேவவுவப்பிற்கூய்ப்
பூவுலகம்புகழ்பொங்கிடவாசிபுகன்றார்கள்

653 சட்டகமன்னியசர்ச்சரையைத்திகழ்சாணைக்கட்
கட்டழுகுற்றிடமற்றையவும்பர்கடைந்தொப்ப
மிட்டனரப்பொடிவீழ்தலுமத்தலமெங்குந்தான்
புட்பவனம்பெயர்பெற்றதுபாற்கரபுரமென்றே

654 அப்பொடிவீழ்பதியெத்தனையுண்டத்தனைசீரார்
மெய்ப்பதியிற்றிருமேவியபூவணமேலாகுஞ்
செப்பருமப்புகழ்சேயிழையாரொடுதிகழ்வெய்யோ
னிப்புவனங்களியாவும்வழுத்தவியைந்துற்றான்

655 உத்தமமாகியவித்தலமுற்றுநலுபவாசம்
வித்தகநல்விரதஞ்செபமுண்டநமெய்த்தானம்
பத்தியின ாலிவைபண்ணிலநந்தம்பலமாகுஞ்
சத்தியமாமிதுசத்தியஞானதவத்தீர்காள்

656 சுத்தமெய்ஞ்ஞானசுகோதயமாநீர்த்துறைமூழ்கித்
தத்துவசுத்திபிறந்திடுசவுநகதன்னேரா
மித்திகழ்பிரமகைவர்த்தத்தெழுபானைந்தாகு
மத்தகுபூவணமான்மியமறைதருமத்யாயம்

657 கருதரும்புகழ்மேவுபாற்கரபுரம்புகழ்காதைதான்
பருகுசெந்தமிழ்மேன்மையாற்பரவுபண்பொடுபாடுவோ
ரருளுடன் செவியூடுகேட்டவையுளங்கொடுதேர்குவோர்
திருமிகுந்திடுதேவரூர்தினமிருந்தரசாள்வரே

பாற்கரபுரச்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 657

*****

## எட்டாவது
## சர்வபாவமோசனச்சருக்கம்

658 சுத்தமாம்புராணந்தேர்ந்தசூதநன்மாதவத்தோய்
சித்திரமணிகுண்டத்திற்றிசைமுகன்றீர்த்தந்தன்னிற்
பத்தியினடைந்தியாரும்படிந்திடுகாலபேத
மித்திறனன்றிமாதோவிசைக்குவதின்னுமுண்டால்

659 பல்பவமகற்றுந்தானம்பண்ணிடுங்காலம்பாங்காற்
றொல்லைநூல்விதிவழாமற்றொடங்கிடுஞ்சாந்தியன்றி
மல்லலோங்கெழில்சேர்தீர்த்தமாடவல்வினைகண்மாய்க்கு
மெல்லையில்பலங்கடம்மையெடுத்துநன்கியம்புகென்றான்

660 மோனஞானந்தெரிந்தமுழுதுலகிறைஞ்சியேத்த
லானவானந்தவெள்ளத்தழுந்திடுமந்தணாள
வூனமதகலச்செய்திங்குரைக்குவமோர்கவென்னாத்
தானருள்கூர்ந்தசூதன்சவுனகற்குரைப்பதானான்

661 மேடநற்றிங்கடன்னின்மிக்கபூரணையினன்பாற்
கூடியமவுனத்தோடுவடுகனைப்பணிந்துகொன்றை
சூடியகடவுடன்னைத்தொழுதிராக்கடையில்விண்ணோர்
தேடருமணிகுண்டத்திற்சேர்ந்தவர்பலத்தைச் சொல்வாம்

662 வேதியற்கோறலாதிவெங்கொடும்பாவமாயப்
பாதகமனைத்துமங்ஙன்பாறிடும்பரிவின்முன்ன
மோதிடுமந்தநாளினொளிகிளர்மணிகுண்டத்தி
னேதமிலந்நீர்மூழ்கினின்பமாமுத்திசேர்வார்

663 அக்கிநிட்டோமமாதியரியநல்வேள்வியாற்ற
மிக்கசெம்பொன்கொடுத்தோர்மேவியபலன்களுண்டாம்
பக்கமோடரிதினேனும்பகர்ந்திடுமந்தநாளிற்
றொக்கசீர்மணிகுண்டஞ்சேர்தோயத்திற்றோயமாதோ

664 கடுங்கொடுங்குட்ட நோயன்களத்துரோமத்தன்மிக்க
கொடும்பிணியாளனந்நீர்குடித்திடனொளிக்கும்வெந்நோய்
திடம்படுமிடபமன்னுந்திங்களிற்சௌம்யவாரத்
தடைந்ததின்மூழ்கிற்செம்பொனரும்பெருங்களவுநீங்கும்

665 இந்த நீர்மணிகுண்டத்தினின் புறக்கருதியன்பாற்
புந்திகன்றனக்குப்புந்திபொருந்திடப் பொலங்கொள்பைம்பொன்
வந்துநன்கியைந்ததானமகிழ்ச்சியின் வழங்கினோர்கட்
கந்தகன்றன்னைக்காண்டலருந்தண்டமிரண்டுமின்றாம்

666 மன்னியமைந்தரானோர்வைகாசிவிசாகந்தன்னிற்
பன்னுநான்மறையோர்கையிற்பரவுதன்பிதிர்கடம்பாற்
றுன்றுவெம்பசிதணிப்பான்றூயவெட்டயிர்பான்மாடந்
தன்னிகர்குளந்தயங்குந்தக்கசித்ரான்னத்தோடும்

667 அரியனபொருளினட்டவறுசுவையுண்டிமிக்க
பரிமளஞ்சுகந்தநன்பூப்பாதுகைகுடைபூணாதி
யுரிமையினுலோபியாதங்குதவிடிற்பிதிர்கள்வான்றோ
யிரவிவெண்மதிநாட்காறுமின்பத்தினியைவரன்றே

668 தந்தைதாய்வர்க்கத்தோடுந்தகும்பெருங்கிளைஞரோடுஞ்
சுந்தரந்துதைந்திலங்குந்தூயநல்விமானநூறு
முந்துறவந்துசூழமுடுகியேகடிதினேகி
யெந்தைசேர்கயிலைவெற்பினிடத்தினிதமர்வரன்றே

669 தன்னிகர்மாகத்திங்கடக்கமந்திரிசிங்கத்தின்
மன்னுமாமாகந்தன்னின்மாமணியோடைசேர்ந்த
வன்னதீர்த்தத்தினாடியரும்பெருந்தானமீவோர்
பன்னரும்பவங்கள்யாவும்பற்றறத்துடைப்பரன்றே

670 தனைநிகர்தநுர்மாதத்திற்சதுர்முகன்றீர்த்தந்தன்னி
லினைதலொன்றின்றிநெஞ்சத்தினியதேநுவைவதைத்தோர்
மனமொழிமெய்களொன்றிமன்னொருமாதமூழ்கி
னனையதோர்காலையந்தவரும்பவமனைத்துநீங்கி

671 தக்கபன்மணிப்பதாகைத்தவளநல்விமானத்தேறி
மிக்கசீர்விளங்குமந்தவிரிஞ்சனதுலகமெய்தித்
தொக்கசெம்மணிகள்வானிற்சுடரவன்வெயின்மறைத்தொண்
டிக்கிலகொளிபரப்புஞ்சித்திரமண்டபத்தில்

672 நிறைமதிபுரையுமந்தணித்திலக்கொத்துமாலை
முறைமுறைநிவந்தமாடமுகப்பினின்ஞாங்கர்த்தூங்கக்
குறைவறுசெம்பொற்சோதிகுலவுபூங்கொடிகளாட
மறுகுசேர்நிரைகடோறுமகரதோரணம்வயங்க

673 வேதநற்புராணமாதர்மிக்கவெண்டிக்குப்பால
ரோதுகந்தருவர்வீணையுயர்தவச்சநகராதி
யேதமின்முநிவர்போற்றவீரேழிந்திரர்கள்காலங்
கோதறவாழ்ந்துபின்னர்க்குவலயத்தரசராவார்

674 கார்த்திகைத்திங்கடன்னிற்கார்த்திகைநாளிற்றிங்கள்
சீர்த்திகழ்கலையீரெட்டுஞ்செறிந்தநாள்குறைந்தநாண்மெய்க்
கீர்த்திகொள்க்ரகணகாலங்கெடுமதிதிங்கள்சேர்நா
ளார்த்தசுந்தரப்பொன்சேயிலருங்கலையொடுங்குமந்நாள்

675 வந்திடுமிவற்றையிந்தமலர்தலையுலகந்தன்னிற்
புந்திகொளறிவின்மிக்கோர்புட்கரயோகமென்ப
ரந்தநீர்மையினாலோரொன்றாயிரங்க்ரகணமொக்குஞ்
சிந்தைகூர்ந்தந்நீராடிற்சிவபுரியதனிற்சேர்வார்

676 தவலருஞ்சிவநிசிக்கட்சந்நிதிமன்னுதீர்த்தத்
தவலமதகலவுன்னியாடியேயன்பின்மிக்க
புவனநன்கியாரும்போற்றும் பூவணங்கோயில்கொண்ட
சிவபிரான்றனைவில்வத்திற்சிறப்புடன்பூசைசெய்து

677 உவமனிலந்தநாளினுண்டியோடுறக்கநீத்துப்
பவமறப்புராணம்பன்னிற்பகர்சிவநிசியதொன்றா
னுவலிலந்நியதலத்தினூற்றொருகோடிகொண்ட
சிவநிசிவதியிற்பூசை செய்திடும்பலத்தைச்சேர்வார்

678 அச்சிவசிநிக்கணானைந்தரியபஞ்சாமுதத்தோ
டிச்சையாங்குசோதகம்மோடெட்டயிலாதிகொண்டு
நிச்சயமணிகுண்டத்தினீரினாட்டினர்பதத்தை
நச்செயிற்றநந்தனாலுநவிற்றநாவசைக்கவற்றோ

679 ஆயினுமரிதுவந்ததறைகுவனவர்சாலோக
மேயபின்சாரூபத்தின்மேவியேவிளங்குங்கார்த்தி
கேயனோடொத்தநந்திகேயனுக்கிணையதாகி
யோய்விலாயிரஞ்சதுர்நல்லுகஞ்சிவலோகத்தேய்வார்

680 செய்யவொண்பட்டினாலுந்திகழ்ந்தவெண்பட்டினாலுந்
துய்யபூங்கதலிபூகமாதியதொங்கறன்னா
லைதிகழ்பூவணத்தெம்மடிகளையலங்கரித்தோர்
பையழகொழுகுந்துத்திப்பன்னகாபரணனாவார்

681 ஐம்பெரும்பாதகங்களகற்றிடுமஞ்செழுத்தை
யிம்பரினேன்றதீக்கைக்கீனனாயிருந்தானேனு
நண்பினான்வெறுப்புத்தன்னானவின்றிடினோர்கால்வானத்
தும்பரின்மேலாயன்னோனுறுபவமொழிப்பனன்றே

682 தேறிநன்கிருகாற்செப்பிற்றிகழ்திருக்கயிலைசேர்வா
னூறுடனெண்காலன்பினுவன்றிடில்வீடுசேர்வான்
மாறிலாச்சதவுருத்தரமந்திரஞ்செபிக்கின்மூழ்கிற்
கூறருநன்றிகொன்றகொடும்பவங்குலையுமன்றே

683 உருத்திரன்றனக்குமிக்கோங்கொளியுருத்திராக்கமாலை
யருத்தியினளித்தோரக்கவணிமணியொன்றினுக்குத்
திருத்தகுசிவலோகத்திற்றிகழ்தருவருடம்வாழ்ந்து
பரப்பிரமத்தைச் சேர்வர்படர்புவியிடத்துமன்னோ

684 எப்பொருளேனுமுள்ளத்தின்பமுற்றதனையன்பா
லப்பொருடன்னை மேலாமரன்றனக்காகவென்றே
தப்பறவளிப்போரிந்தத்தடங்கடலுடுத்தபார்மே
லொப்பறவாழ்ந்துபின்னருயர்பரமுத்திசேர்வார்

685 ஓதுமிவ்வத்தியாயமுறுபவமொழிக்குமேலோர்
பூதலத்துபதேசஞ்செய்பொருடருசாரமாகுங்
காதலினோதுவோர்க்குக்கருதியதளிக்குமென்று
மேதகவுரைத்தவற்றைவேட்கையின்விளக்கக்கேட்போர்

686 மேதினியிடத்தின்மேவுமிக்கதீர்த்தங்கள்யாவுங்
காதலிற்சென்றடைந்துகலந்தவைபடிந்தோராவர்
போதநன்குணர்ந்தமேலோர்புகன்றிடும்வேள்வியாவு
மாதரவதனாற்செய்தவரும்பலமடைவரன்றே

687 இந்தநற்பூவணத்தினினிதுவாழ்கிற்போர்தம்மை
யந்தரதேசநின்றுமடைந்தவரிவர்க்கண்டாங்கே
முந்துறுபவங்கஉர்ந்துமுத்தியையடைவரென்றாற்
புந்திகொண்டமர்வோர்வீடுபொருந்துதல்புகலல்வேண்டா

688 கூனலம்பிறைமிலைச்சுகோடீரபாரத்தெந்தை
யூனமிலுமையாள்கேட்பவுரைத்தருளுபதேசத்தை
யானதோர்காலைதன்னிலாறுமாமுகங்கொடுற்ற
ஞானவானதனைக்கேட்டுநந்திபானவின்றான்மன்னோ

689 நந்திதான்கேட்டவற்றைநற்சநற்குமாரற்கோத
வந்தநற்சனற்குமாரனருள்வியாதற்குரைப்பச்
சுந்தரவியாதனெற்குத்தொகுத்துபதேசஞ்செய்ய
முந்துறக்கேட்டவற்றைமொழிந்தனனுமக்கியானே

690 நுண்ணியபொருளாய்மேலாய்நுவலருமுலகுக்கெல்லாம்
புண்ணியமளிக்குமிந்தப்பொருடனைவிரும்பிக்கேட்டோற்
குண்மகிழ்ந்துரைத்ததின்றீங்குமக்கியான்றொகுத்துரைத்தேன்
கண்ணுதற்பெருமான்றந்தகணிப்பருங்கருணையாலே

691 ஈதுமக்கிறைவன்ஞானமெய்துதற்கேதுவாகு
மாதலாலருண்மைந்தர்க்குமரியநன்மாணாக்கர்க்குங்
காதல்கூர்பவர்க்குமிந்தக்கருதருபுராணந்தன்னை
யோதுதியறிவின்மேலோயுடங்கியைந்தெந்தஞான்றும்

வேறு

692 அழகியமின்னன்னையெனுமானந்தவல்லியுடனமர்ந்துதோன்றுஞ்
செழுமலர்க்கொன்றையினறும்பூந்தேன்றுளிக்குஞ்செஞ்சடிலசேகரன்சேர்
பொழிறிகழ்பூவணக்காதைபுகல்பிரமகைவர்த்தபுராணந்தன்னி
னெழுதரியமறைமுநிவவீரெழுபத்தாறாமத்தியாயமாகும்

வேறு

693 இந்தவத்தியாயம்படித்துளோரின்பமுற்றுநாளுஞ்செவிக்கொள்வோர்
சிந்தையிற்கொடேசெஞ்சொல்செப்புவோர் செங்கரத்தினானன்குதீட்டுவோர்
மைந்தர்பெற்றமாமைந்தர்சுற்றவேமங்கலத்தினான்மண்டலத்தில்வாழ்ந்
தந்தமற்றசீரண்டர்பொற்பினீடம்பொன்மிக்கவானங்கிருப்பரே

சர்வபாவமோசனச்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 693

*****

## ஒன்பதாவது

## பிரமசாபமோசனச்சருக்கம்

694 ஆயுநான்மறையுமங்கமோராறுமாகியவமுதகானனநீர்
பாயுநாவுடையசவுநகமுநிவன்படுகலியுடைதிரைப்பரவை
மாயிருஞாலந்தன்னினீறொன்பான்மருவியபுராணமோர்வடிவாந்
தூயமாதவத்தின்றுறைபெறுஞானசூதனைநோக்கினன்சொல்வான்

595 பூர்வநன்குறவேயோரொருபதினெண்புராணநின்னானன்மிகக்கேட்டோ
மோர்வுடைத்தின்றுமுரைக்குவதுண்டாலுரைக்குமிப்புராணத்தினியல்பைப்
பாரிடைநீயேபகரயான்கேட்கப்பாக்கியம்படைத்தனனாகி
லார்பதமரியவிருதயகமலமனையநின்னான்மலர்ந்தன்றே

696 ஓங்குவான்கங்கைமாநதிமதிகண்டுவட்டெடுத்தெழுந்தலைபுரட்டத்
தூங்குவார்சடிலந்துதைந்த செம்பவளச்சுடர்விடுசோதிவானவனைப்
பூங்குழலுமைமுன்பூசையாற்றியபின்போந்தருச்சித்தனர்தம்மைத்
தாங்கருவெகுளிதணந்தமாதவநீசாற்றெனச்சவுநகற்குரைப்பான்

697 அங்கண்வானத்தினகடுபோழ்ந்தவிருமணிமணிச்சிகரபந்திகளும்,
பங்கமில்பாரிசாதவாசப்பூம்பணைதிகழ்பராரைமாமரமுந்
துங்கமேவியநன்மடங்கலேமுதலாத்தொகுவிலங்கீட்டமுந்துலங்கு
கங்கைமாநதியினருவியின்முழக்குங்கதித்திடுங்கயிலைமால்வரையில்

698 கண்ணகன்புவியிற்களைகணாகியநற்கற்பகக்கடவுள்காங்கேய
னெண்வகைவசுக்களெண்டிசாமுகத்தரிராக்கதர்மருத்துவரிருவர்
நண்ணுகிம்புருடர்கின்னரர்மணிகணகுபணந்தருமுரகேசர்
வண்ணமேவியநல்வெண்ணிலாக்கொழிக்கும்வளைந்திடுமிளம்பிறைமுடித்தோர்

699 மாதிரம்புகழுமாதிகேசவன்கார்வண்டிசைகொண்டமாமலரோன்
றீதறுதேவர்கருடர்கந்தருவர்சித்தர்வித்தியாதரரியக்கர்
பூதலத்திருளைவிழுங்கிவானோங்குபொங்குவெங்கதிர்கள்பன்னிருவர்
காதல்கூரீரெண்கலைதிகழமிர்தகதிர்விடுமுடுபதிக்கடவுள்

700 சித்திரக்கலினச்செருவயப்பரியூர்திகழ்வளைசெண்டுகைக்கொண்டோ
னத்திரிவசிட்டன்முற்கலன்புகழ்பாரத்துவாசன்கவுண்டினியன்
சுத்தப்ருங்கிருடிகண்ணுவன்பாரிற்றுகளறுசுகன்சதுர்வேத
வித்தகவிணைநாரதன்சநகாதியமுநிகணமிடைந்தேத்த

701 பரவரிதாயவுருவங்கொண்டரியபண்டரும்வேதங்களோத
மருவியேதிருமுன்வணங்கியேழ்கோடிமந்திரநாயகர்வழுத்த
வருளினாற்கண்டவடியவர்நிருத்தவாநந்தவாரியிலழுந்தப்
பொருவில் பூதங்கள் புடைபரந்தீண்டிப்புகழ்ந்துடன்பாடிநின்றாட

702 அந்தரதலத்தில்வந்துதிக்கின்றவந்திமாமதியமோர்கோடி
சுந்தரந்துதைந்துசுடர்விடும்வெய்ய சூரியரோரொருகோடி
வந்திடுஞ்சென்னிவளர்ந்தெழுந்தூய வடவையங்கனலொருகோடி
தந்தவைதிரண்டொன்றாய்வளர்சோதிதருந்திருமேனியினொருபால்

703 கழையுநன்பாலுங்கண்டும்வார்தேனுங்கருங்குயிலிசையுமேழிசையுங்
குழலினதிசையுங்கோதிலாவமுதுங்குழைத்திடுகுதலையந்தீஞ்சொற்
பழமறைப்பொருளைப்பவளவாய்கொழிக்கும்பத்திசேர்நித்திலமுறுவ
லிழைதருமருங்குலேந்திளங்கொங்கையிமயமால்வரைமயிலிலங்க

704 விட்டெறிகின்றவெண்மதிக்குழாமும்வெய்யவரநேகரும்போல
மட்டறுவயிரமன்னுசெம்மணிசேர்மகுடநன்மாமுடிவயங்கக்
கிட்டியேநுதலைக்கிழித்தெழும்விழித்தீக்கொழுந்துவிட்டதுகிளர்ந்தோங்கக்
கட்செவிப்பகுவாய்க்கடுவுமிழரவகங்கணமணிக்கதிர்பரப்ப

705 முழுங்கிவந்தலைகள்புரண்டிடக்கரத்தான்முடித்தசெஞ்சடாமுடிக்கிடந்த
குழந்தைவெண்மதியின்கோடுழக்குற்றகுளிர்புனற்குறுந்துளிசிதறச்
சுழன்றுவீழ்ந்திசைகண்முரன்றுறுவாசந்துதைந்துதாதரடியுண்மகிழ்ந்து
வழிந்தநற்பசுந்தேன்வண்டுனுங்கொன்றைவாசமெண்டிசாமுகம்வீச

706 காசினிபுகழுங்கலைதிகழ்மதிபோற்கருணைநற்றிருமுகம்பொழியப்
பூசும்வெண்ணீறும்பொருந்துமார்பகத்திற்பொங்குமாரங்கணின்றிலங்க
மாசறுசோதிவயிரகேயூரமன்னியவாகுவின்வயங்க
வீசியகிரணவெம்படைக்கலங்கண்மேவியகரங்களில்விளங்க

707 நினைவருஞ்சங்கக்குழைநிலவுமிழ்ந்துநீண்டவார்காதுபூண்டெறிப்பக்
கனைகடல்வயிறுகலங்கவன்றெழுந்தகடுவிடங்கந்தரங்காட்டப்
புனிதமாகியநற்புள்ளிசேர்தருவெம்பொருபுலித்தோலுடைபொலியப்
பனகமாமுதரபந்தநன்மணிகள்பரவரும்பாயிருள்பருக

708 தங்குமால்வரையிற்றகுமருவியெனச்சார்ந்தவுத்தரீயமார்பிலங்க
வங்கையிலபயவனாமிகாங்குலியிலணிபவித்திரமழகொழுகப்
பங்கமுற்றிரைத்துப்பாய்திரைசுருட்டும்பரவைசூழ்பாரெலாமிடந்துஞ்
செங்கண்மாலின்னுந்தேடரிதாயதிருவடித்தாமரைதிகழ

709 சோதிசேர்வயிரத்தூணிரைநிறுவிச்சூழ்ந்தபொற்பித்திகையமைத்து
மீதுசேர்பவளப்போதிகையிருத்திமிகுந்தநன்மரகதந்தயங்கு
மோதுமுத்தரத்தோடுறுதுலாஞ்சேர்த்தியொளிமணிகிளர்தரவழுத்தித்
தீதில்சந்திரகாந்தந்தரைப்படுத்துச்சித்திரமழகுறச்சேர்த்தி

710 விளங்குமண்டபத்தின்மேவியேநாப்பண்மிக்கநல்லெழிலரிசுமந்த
வளர்ந்தெழுஞ்சோதிவழங்கிடக்குயிற்றுமாறிலாமணித்தவிசேறி
யளந்தறிவரியவருமறைப்பொருளாயானந்தமேதிருவுருவா
யிளம்பிறைமுடித்தவெம்பிரானமரர்தம்பிரானினிதுவீற்றிருந்தான்

711 அந்தவேலையினினந்தியெம்பெருமானங்கையிற்பிரம்பினைக்கொண்டே
வந்தவண்மிடைந்தவானவர்முனிவர்தம்மைநேர்வரன்முறைசேர்த்தி
யந்தமிலவுணர்தங்களைக்கொண்டேயணிபெறநிறுவியேயொருபாற்
சிந்தையின்மகிழ்கூர்ந்தெந்தைதன்றிருமுன்றிரிந்துநல்லருந்துதிசெய்ய

712 அரம்பைமேனகையூர்வசியழகொழுகுமரியசீர்த்திலோத்தமைமுதல
வரம்பெறுமுயர்வான்மகளிர்மந்திரஞ்சேர்மத்திமைதாரகமரபிற்
றிரம்பெறவெழுதுசித்திரமென்னத்திகழ்ந்துசெம்பவளவாய்திறந்து
நரம்புறுவீணைநன்முலைதாங்கிநாதகீதத்துடனடித்தார்

713 தீதறுகின்றதேவமாபரதஞ்சித்திரசேனனோடுலக
மோதிடுமந்தவுருப்பசிநடித்தேயுற்றிடுநாதகீதஞ்சேர்
வேதமேநுகருமிக்கநன்செவிக்குவீணையேயிசைவிருந்தளிப்ப
மாதினைமணந்துவாமபாகங்கொள்வானவன்றிருவுளமகிழ்ந்தான்

714 நானிலத்துயிர்கணன்கதிபெறுவானான்முகன்வரநினைந்தேயோ
வானகஞ்சுழலவருங்கொடுஞ்சண்டமாருதம்வந்தவைபுகுந்தே
யூனநீங்கியவவ்வுருப்பசிமருங்குலுடுத்தவொண்டுகிலினைநீக்கா
வானகாலையினிலாயிடைவெருவியனைவருமவநிதரானார்

715 உறுபெருங்காதலுள்ளமீக்கொள்ளவோங்குபேரெழினலந்தாங்கு
முறையறுகன்னன்மூரிவிற்காமன்முடுகினன்மலர்க்கணைதொடுப்பக்
கறையணற்கொடியகட்செவிப்பாந்தட்கணமணாடவியவளல்குற்
குறியிடந்தன்னைநோக்கினன்கமலக்கோயில்வீற்றிருந்திடுங்குரிசில்

716 ஆங்கதுகாணூஉவளவிலண்டத்துமகண்டிதமாயசஞ்சலமா
யோங்குபேரொளியாயுயிர்க்குயிராகியுன்னுமுன்னுணர்ந்திடுமொருவ
னீங்குகநம்பானீயெனலோடுநிலமிசைவீழ்ந்தடிபணியப்
பாங்குறுநந்திபணியினாலெழுவப்பரஞ்சுடர்பங்கயற்குரைப்பான்

717 உருப்பசியெனும்பேரொண்டொடியிவடனுரைப்பருமூருமூலத்தில்
விருப்புடனின்கண்பரப்பிணையதனான்மிக்கநன்சபைவிடப்பணித்தாந்
திருத்தகுமெமதுதெய்வநற்சபையிற்றிருகியசிந்தனையதனைப்
பொருக்கெனநினைந்தபுந்தியிலாதாய்புகல்வதொன்றுண்டதுகேண்மோ

718 அரனருட்குரவனங்கிசேர்தலத்திலாகமவேதமோதிடத்தி
னொருமைசேருள்ளத்துணர்வினிற்றூங்குமோங்குநல்லுறுவர்களிடத்து
மருமலர்க்குழலார்வனப்பினைநாடிமயங்குவார்யாவரேயெனிது
மிருடருநரகரிவர்பெரியோராலிகந்திடப்படுவரெஞ்ஞான்றும்

719 இத்தகைமையினானிற்புறம்பாகவிசைத்தனமீங்குநீயெம்பால்
வைத்தபேரன்பின்மகிழ்ந்தனமின்னேமனத்திடைமதித்திநன்மைந்த
புத்திபூருவத்தாற்பொருந்துநம்மிலிங்கபூசனைபுரிந்திடின்மாதோ
வத்தகுகணத்திலடைந்தவத்தோடமகன்றிடுமஞ்சனீயஞ்சல்

720 இன்னமுதங்கான்றிருட்குறும்பெறியுமிந்துவின்மரபினில்வந்த
பன்னுசெந்தமிழ்த்தென்பாண்டிநன்னாட்டிற்பயின்றிடும்பதிபலவுளவா
மன்னதின்மேலாயறைந்திடுங்கூடலாலவாய்ப்பதிக்குயோசனையின்
மன்னிடும்வன்னிதிக்கினோர்தலம்பூவணமெனுமணிதிகழ்நகரம்

721 உரைசெயுமந்தவோங்கெயின்மூதூரோரொருமூவுலகேத்த
மருவிடுமதன்கண்மத்திமைவயங்குவான்முகடணவுவண்பணைசூழ்
பரவரும்பாரிசாதமொன்றுண்டப்பராரைமாமரத்திருநீழற்
புரிகுழலுமைமுன்புரிதருசெயலாற்பூசைசெயிலிங்கமொன்றுண்டால்

722 அச்சிவிலங்கமருள்வடிவாகியாம்பிலத்தலத்தினின்றளிசேர்
முச்சகம்புகழமுளைத்திடுமூவாமுதலுமாய்முழுதுலகிறைஞ்ச
நிச்சயப்பொருளாய்நிமலமாய்நிறைந்துநிகழ்ந்துநங்கண்மணிவடிவாய்ப்
பச்சைமாமயிலோர்பாதிநின்றிலங்கப்பரம்பொருளாகியேவிளங்கும்

723 ஆதலாலரியவச்சிவலிங்கத்தன்பினாயிரஞ்சதுர்யுகங்கள்
பூதலமதனிற்பொருந்தியாங்கெம்மைப்பொற்புடன்பூசனைபுரியி
னீதியின்யாமுநிகழ்ந்துமுன்றோன்றிநினக்கருள்புரிகுதுமென்னா
வோதிநீபோதிமாதொடுமென்றானுயிர்க்குயிராகியவொருவன்

724 அன்னகாலையினிலன்னவாகனனுமஞ்சியேயஞ்சலிசெய்து
முன்னைநாளிழைத்தமுதிர்வினைவந்துமூண்டிடும்விதியிதுவென்னாப்
பன்னுநாமகன்றபரிசனஞ்சூழப்பதங்களிற்படிந்தெழுந்தன்பாற்
பொன்னலர்கடுக்கைப்புரிசடைப்பிரானைப்போற்றினன்விடைகொடுபோந்தான்

725 பன்னகாபரணப்பரஞ்சுடராயபண்ணவன்பண்ணவர்தமக்குந்
தன்னிகர்தத்தம்பதியிடைச்செல்வான்றக்கநல்விடைகொடுத்தருளி
மன்னியநந்திவானவன்கோயின்மணிக்கடைவாயின்முன்காப்ப
மின்னிகர்மருங்குன்மெல்லியலோடும்வெள்ளிமால்வரையில்வீற்றிருந்தான்

வேறு

726 சுந்தரமேனிதுளங்கனல்கொண்ட
வந்திவணத்தனுக்கிரகத்தாற்
புந்திமகிழ்ந்துயர்புட்பவனத்திற்
கந்தமலர்க்கடவுள்கடிதுற்றான்

727 பண்டருவேதபராயணர்மேவுந்
தண்டலைசூழ்பனசாலைகளும்பொற்
புண்டரிகந்திகழ்பூந்தடமியாவுங்
கண்டனனெண்டருகண்கள்களித்தான்

728 ஓசைகொளந்தவுருப்பசிதன்மே
லாசையளித்தவரும்பவநீப்பான்
றேசுமிகுந்ததொர்தெய்விகலிங்கம்
பூசைசெயும்படிபுந்திநினைந்தான்

729 நாமகள்சேர்தருநான்முகனன்காற்
பூமகள்போற்றிசெய்பொற்கொடிமுன்னர்க்
காமியமிக்கருள்கங்கைகலந்த
மாமணிகன்னிகைவந்துபடிந்தான்

730 வாய்மொழியொன்றும்வழங்கலனாகி
யாய்மலர்கொண்டுநலங்கணன்வைகுங்
கோயினன்வாயில்கொளுங்குணதிக்கிற்
றூய்மையுடன்சதுரங்கம்வகுத்து

731 தன்கைதரித்ததொர்தண்டதுகொண்டே
யன்பொடுகல்லினனங்கைகள்செய்ய
நன்குறுதீர்த்தநயப்பொடுகண்டே
பொன்பயிலுந்திருக்கோயில்புகுந்தான்

732 காருலவுந்திகழ்கற்பகநீழற்
சேர்தருகின்றதொர்தெய்விகலிங்க
நேர்விழிகாண்டலுநேரின்மெய்ஞ்ஞான
வாரிபடிந்துமுயங்கினன்மாதோ

733 அண்டமடங்கலுமன்னமதாகித்
திண்டிறலானனிதேடியுநானே
பண்டறியாதபரஞ்சுடர்தன்னைக்
கண்டனனென்றுகளித்தனனம்மா

734 பூருவமாயருள்பொங்குமிலிங்கத்
தேருறுமின்புருவத்திலிருத்தி
நேரில்கொடும்பவநீக்கிடுகிற்பா
னாரணபூசனைசெய்தனனன்பால்

735 சோடசபூசைதொடங்கிமுடித்தே
பாடலொடாடல்பயின்றறமங்கை
தாடனிலேவழிபாடதுசெய்வா
னாடிவருந்தினனானிலமெல்லாம்

736 மன்றவனந்துளவோன்மலருந்தி
யன்றுபிறந்தருளன்னமுயர்த்தோ
யொன்றுநல்வாய்மையுரைப்பதுகேட்டி
யென்றசொல்வானினெழுந்ததையன்றே

737 நன்மலையீன்றருணாயகிமேனாண்
முன்னவன்வாய்மைமொழிந்திடுமாற்றாற்
றன்னுறுமின்னறணந்திடவிங்ஙன்
மன்னுதவம்புரிகின்றனண்மாதோ

738 புல்லுமரன்கழல்பூசைசெய்தம்பொன்
வல்லிமணற்கண்மறைந்துறைகின்றா
ளொல்லையினீக்கியுஞற்றுதிபூசை
செல்வநலெண்டிகழ்சித்திகளுண்டாம்

739 செந்தழன்மாதவர்செப்பியசாப
நந்திடவெந்தையைநாயகியோடும்
புந்திமகிழ்ந்துசெய்பூசனையாலே
யிந்திரைதன்னையியைந்தனன்மாயோன்

740 ஆதலினின்னபராதமுமிந்த
நாதனருச்சனையாலதுநந்துஞ்
சோதியும்வந்துநினக்கெதிர்தோன்றும்
போதுதியென்றதுபோயதேயன்றே

741 அன்னதுளங்கொடரன்னருளாலே
மன்னியபொற்கொடிமாதைமறைத்த
நன்மணலுக்கிடைநாடருஞானப்
பொன்னுறுபூங்கொடிபோலெதிர்நின்றாள்

742 வெளிப்படுகின்றபொன்மின்னனையாளை
யளப்பரிதாகியவன்பொடுகண்டு
களித்தனனீள்கருணைக்கடல்சென்று
குளித்தனனின்பொடுகூடினனன்றே

743 சொற்றரிதாயசுகோதயநல்கும்
வெற்றிதருங்கதிர்வீசுமெய்ஞ்ஞான
பொற்கொடியைப்புகழ்புந்திநினைந்தே
யற்புதமெய்தியருச்சனைசெய்தான்

744 ஓதருமோங்கொளியுற்றதொர்பாரி
சாதமதின்னிழற்சார்தரலால்வெம்
போதகநீக்குநர்பொற்புறுபாரி
சாதவனேசனெனப்பெயர்சாற்றும்

745 பூவுலகம்புகழ்பொற்புறுரேகை
மேவியரூபம்விளங்குதலாலே
பூவுலகந்திகழ்பொற்கொடியென்று
மேவிய நாமம்விளம்பியதன்றே

746 பொன்னுலகந்திகழ்பொன்னனையான்பான்
மன்னுசெவ்வானிடைவந்தொளிர்கின்ற
மின்னென நின்றுவிளங்குதலாலே
மின்னனையென்றுவிளம்பினர்மேலோர்

747 நாடொறுமிம்முறைநல்லமுதஞ்சே
ரோடையினுந்தனதோடையினுஞ்சென்
றாடியருச்சனைக்காவனகொண்டன்
பூடுருகச்சிவபூசையுழந்தே

748 கோலமதாமணிகுண்டநனிருதி
மூலையினன்பரைமூண்டதலத்தோ
ராலநிழற்கணமைத்தொருலிங்க
நாலுமுகன்வழிபட்டனனன்றே

749 அத்தருநீழலினண்ணலைநண்ணிச்
சித்தமகிழ்ச்சியுடன்றெரிசிக்கிற்
புத்திகொள்பூருவமாய்ப்புரிபிரம
கத்தியென்வெவ்வினைக்கட்டறுமன்றே

750 அன்னியமாமனையாளையணைத்த
றொன்முறையல்லதுதுய்த்திடுதோடஞ்
சென்மமொர்நூறுசெய்தீவினைதீரு
மன்னதனாற்பினரன்பதிசேர்வார்

751 சிற்சிலநாளவைசென்றொழியப்பின்
புற்றருளெந்தைக்குத்தரதிக்கி
னெற்றருமெண்டலையிட்டதொர்நூறு
விற்கிடையெல்லையின்விண்டுவைக்கண்டான்

752 கண்டகவன்னவனைக்கைகுவித்தே
மண்டனில்வந்திடும்வாய்மைவழங்கி
யெண்டிசைபோற்றிடவேய்ந்திருவோரு
மண்டர்பிரான்கழல்கண்டமர்நாளில்

வேறு

753 திருமிகுமுரோமசன்சிறந்தகௌதமன்
பரவுமாங்கீரசன்பரத்துவாசனெண்
டரைபுகழ்வசிட்டனற்சனகனாதியர்
மருவினரயன்றனைவணங்கியேத்தினார்

754 ஆங்கவரனைவருமந்திவான்மதி
தாங்குசெம்பவளவார்சடிலசேகரன்
பூங்கழலருச்சனைபுரிந்துவைகலா
லோங்குமித்தலமயனுலகமொத்ததே

755 எம்மையாளிறைவனுக்கினியவாலயஞ்
செம்மையிற்குயிற்றுவான்சிறந்ததெய்வநற்
கம்மியன்றனைவரக்கருதியாங்கொரு
மும்முறைவிளித்தனன்முளரிவேந்தனே

756 அந்தநல்லுரைசெவியணைதலோடும்வந்
தெந்தைநீவிளித்ததென்னியம்புகென்றலுஞ்
சுந்தரவரியளிதுதைந்துதேனுகர்
கந்தமாமலருறைகடவுள்கூறுவான்

757 காவிசேருந்தடங்கட்படாமுலைத்
தேவியோர்பங்குறைதெய்வநாயகன்
மேவியாருயிர்க்கெலாம்வீடுநல்குவான்
கோவினீயணிபெறக்குயிற்றுகென்னவே

758 அருடருமரியபஞ்சாக்கரப்பெருந்
திருமதிலாலயஞ்சிகரமண்டபங்
குருமணிதயங்குநீள்கோபுரங்கள் சீர்ப்
பரமனாடகந்தினம்பயிலுமண்டபம்

759 கரிமுகன்கந்தவேள்கருணையேபொழி
திருமுகமண்டலஞ்சிறந்திலங்கவான்
பெருகொளிபரப்பிடும்பிரமதாண்டவ
மருள்புரிதரவெழுந்தருளுநாயகன்

760 இன்னநல்விக்கிரகங்களெண்டிசை
துன்னுசெங்கதிரொளிதுதைந்திலங்குசீர்ப்
பன்னருநவமணிபயின்றுபைம்பொனீள்
பொன்னணிமகுடவான்பொருந்துமண்டபம்

761 மன்னுதேரூர்மணிமறுகுதோறுநீள்
பன்னுமெண்ணெண்கலைபயிலுமண்டப
மன்னமன்னவர்நடமாடுமண்டபந்
தன்னிகர்தரவருதானமண்டபம்

762 நந்தனவனங்களுநறியபொய்கையுங்
கொந்துலாவுங்குயில்கூவுஞ்சோலையு
மந்தணர்மனைகளுமன்னசாலையுஞ்
சந்ததமிம்முறைதயங்கக்கண்டனன்

763 கண்டபின்றனதுளங்களித்துக்கம்மிய
னண்டநாயகன்றனக்கணிகொளாலய
மெண்டொகைபெறவினிதியற்றினேனெனாப்
புண்டரீகன்பதம்போற்றிப்போயினான்

764 போயபினுடனெழீஇப்புண்டரீகனற்
றாயினுமுயிர்க்கருடம்பிரான்றிருக்
கோயில்களியாவையுங்குறித்துளங்கொளா
வேயவெண்கண்களாலினிதுகண்டனன்

765 வன்னியோரைந்துமுன்வளர்த்துநேர்வளி
தன்னையுள்ளடக்கியைம்புலன்கடாங்கியே
பொன்னனையானடிப்பூசைசெய்துபி
னுன்னரும்பரசிவயோகுற்றானரோ

766 பாவமானவையெலாம்பற்றறுத்துமே
லாவமாணவையெலாமாகமப்படி
மாபரன்வடிவமாய்வயங்கவாங்கவை
தாபனஞ்செய்தனன்சதுர்முகப்பிரான்

767 தேனலர்கொன்றையஞ்சிகழிவானவன்
றானருள்செய்தநாட்டணந்துமாண்டதும்
பான்மைசேர்சத்திநிபாதமுற்றது
ஞானநாயகன்றிருவுளத்துநாடினான்

768 இன்னநற்றவங்கள்கண்டிரங்கியெம்பிரான்
பன்னகபணமணிப்பணிகடாங்கியே
மன்னும்வானவர்கள்பூமழைபொழிந்திட
மின்னனையாளுடன்விடையிற்றோன்றினான்

769 தோன்றலும்விழித்துமெய்துணுக்கமுற்றுமீ
வான்றொடுபராரைமாமரந்தன்வேரறத்
தான்றரைவீழ்வபோற்சதுர்முகன்கதிர்
கான்றிடுங்கண்ணுதல்கழலிறைஞ்சினான்

770 இறைஞ்சிடுமயன்றனையெழுகெனாவெழுந்
தறிந்தடியேன்பிழைத்தவற்றைநீக்குவான்
வெறுத்தமியேன்முனம்வெளிநின்றாயெனாச்
சிறந்தநன்மறைத்துதிசெப்பலுற்றனன்

வேறு

771 ஈசாசரணமெந்தாய்சரண
நேசாசரணநிமலாசரண
மாசானவைதீர்த்தடியார்க்கருளுந்
தேசாசரணஞ்சிவனேசரணம்

772 மூவாமுடியாமுதலேசரண
மேவாதவர்பான்மேவாய்சரணங்
காவாயெனவேகடனஞ்சயிலுந்
தேவாதியர்தந்தேவேசரணம்

773 அகிலந்தருகாரணனேசரணம்
புகலும்புவனாதிபனேசரண
மகிழ்மன்மதவேண்மாண்டேயெரியத்
திகழ்வெங்கணனேசிவனேசரணம்

774 உலகெங்கனுமோருருவாசரண
மலர்செங்கதிரோனதிதாகமுடன்
வலம்வந்துழலும்மகமேருவெனுஞ்
சிலைதங்கியகைச்சிவனேசரணம்

775 உலகாதரநல்லொருவாசரண
மலமாயைகளைந்தருள்வாய்சரண
மலையாழியின்மேவமுதாசரணந்
திலகாபரணாசிவனேசரணம்

வேறு

776 இன்னபன்னியேயெம்பிரான்றிரு
முன்னர்மாணநன்முறையினேத்தியே
சென்னிமீதினிற்சேர்த்தசெங்கையா
னன்னவாகனனறைதன்மேயினான்

777 பூருவத்தியான்புரிந்தபாதகந்
தீருமாறருள்செய்துதீதிலாச்
சோர்விலாதசாத்துவிகநற்குண
நேரிலென்பதநீயளித்தரோ

778 இந்தநற்பதியெம்பிராட்டிதன்
முந்தைநாமத்தான்மொழிந்ததாயினு
மெந்தையோருகமென்றனாமத்தாற்
றந்திடும்வரந்தருதல்வேண்டுமால்

779 என்றனாலுனையிழைத்தபூசனை
நன்றதாக்கொளும்வரமுநல்குவா
யொன்றுமித்தலத்துறைவபவர்க்கெலாங்
கன்றுபாதகங்கழிதல்வேண்டுமால்

780 இரதவீதியானினிதியற்றிநின்
றிருவுளம்மகிழ்செய்யவேண்டுமாற்
பரவுபன்னகாபரணநீயெனாக்
கருணையங்கடல்கருணைசெய்குவான்

781 கந்தமேவுநற்கமலயோநிகேண்
முந்தைநாண்முயன்முடிவில்பாதக
நந்துகின்றதானன்கினீநவி
லந்தநல்வரமவையளித்தனம்

782 வித்தகந்தருவெள்ளைமேனியாள்
சத்தமாதவத்தலைவர்சூழநீ
பத்தியோடுநின்பதத்திலேகெனா
வத்தனந்தலிங்கத்தமர்ந்தனன்

783 அத்தனந்தலிங்கத்தமர்ந்தபின்
பத்தியாலயன்படியிற்றாழ்ந்தெழீஇ
வித்தகந்தருவிழாநடத்தியே
சத்தியவ்வுலகத்திற்சார்ந்தனன்

784 மன்னுபிரமகைவர்த்தந்தன்னினற்
பொன்னுலாவுதென்பூவணக்கதை
யின்னதேழ்தலையிட்டவெழுபதாய்ப்
பன்னுமத்தியாயம்பகர்ந்திடில்

வேறு

785 பிரமசாபமகற்றிடுமிக்கதைபெருகுகாதலினித்தமுமோதுவோ
ருரியஞானவுரைப்பொருள்செப்பினரொருமையோடுசெவிகொடுத்தோர்குவோர்
கருணையால்வரைகுற்றநர்கற்குநர்கழறுகாதைகருத்தினினாடுவோர்
மருவிநீடுசுவர்க்கமதுற்றரமகளிர்சூழவிருப்பரெந்நாளுமே

பிரமசாபமோசனச்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 785

*****

## பத்தாவது

## இலக்குமிசாபமோசனச்சருக்கம்

786 பான்மைசேருலகம்பரிந்துகாத்தளிக்கும் பகவனும்படர்சிறையளிசெந்
தேன்விருந்துண்ணுஞ் செய்யபூங்கோயிற்றிருவுமீங்குற்றதென்னெனலு
நான்மறைதினமுநாவிளையாடுநற்சவுனகமுனிகேளென்
றானனமலர்ந்தேயருந்தவத்துறைபோமழகியசூதன்பின்மொழிவான்

787 முன்னொர்நாளுலகமுடிருய்விழுங்குமுழுமணிக்கிரணமொய்த்தெழுசெம்
பொன்னினாற்சமைத்தபித்திகைதொறுநற்பொங்கொளிபுதுவெயிலெறிப்பத்
துன்னியெண்டிசையுஞ்சுடர்விடுசிகரச்சோதிவான்முகடுபோழ்ந்தவிரு
மன்னுமண்டபத்தின்மத்தியின்முடங்குவாலுளைமடங்கலாசனத்தில்

788 தலைமைசேர்மகுடந்தடமுடிதயங்கச்சங்குசக்கரக்கைநின்றிலங்க
வுலகிருளோடவிலகொளிபரப்புமொருமணிகிடந்துமார்பொளிரப்
பலகதிரவிர்பொற்படாமரைவயங்கப்படிமிசையளந்ததாள்விளங்க
மலர்மகளோடுமரகதமலைபோல்வைகினன்வைகுண்டமூர்த்தி

789 மாறின்முக்கோடிமருவியவேலைவைகும்வைகுண்டலோகத்தி
னேறியசெங்கையிலங்கியசங்குமொசிசுடராழியுமேந்து
நூறொருகோடிநாரணர்சூழ்ந்துநுணங்கியகேள்வியின்வணங்கி
வேறுவேறாயமிக்கநற்றுதியின்விரும்பியாங்கவரவர்விளம்ப

790 வில்லுமிழ்மாலைமிக்கதந்திரிசேர்வீணைநல்விஞ்சையர்பாட
நல்லெழிலரம்பைமெல்லியலார்கணாட்டியநின்றுமுன்னடிப்பச்
சொல்லிடுந்தடக்கைசுமந்திடுஞ் சூரற்றுளங்கு கஞ்சுகியர்கடுதிப்பப்
பல்லியந்துவைப்பப்பண்டருவேதபராயணர்பணிந்துமுன்பரவ

791 அந்தநற்சமயமண்டபமதனிலளிக்குலங்களிக்கும்வண்பொகுட்டுக்
கந்தமாமலரில்வந்துதிக்கின்றகடவுள்ர்பதின்மருமோரேழ்
மந்திரகோடிநாதரும்வயிரவச்சிரத்தடக்கைவான்றருநே
ரிந்திரனிமையோரியாவருமீண்டியிருமருங்கிறைஞ்சிநின்றேத்த

792 திருமலர்ப்பொகுட்டுச் செய்யபீடிகையிற்றிசைமுகன்வரவருள்புரிந்தா
னருமறைமுநிவர்க்கமுதநற்கிரணவழகொழுகானனமலர்ந்தான்
மருவியகுலிசவானவன்றனக்குமணிமுடிதுளக்கினனேனைக்
கரிலிலதாயகடவுளர்தமக்குக்காண்டகுகடைக்கணோக்களித்தான்

793 பங்கயத்தவன்மேற்பார்வையங்கிருத்திப்படைத்திடுந்தொழிலனெவனாற்
றுங்கநற்சுரபூபதிபுகழ்நினதுதூயபொற்பதிநலனேவ
னிங்கெமக்குணர்த்தியெனுமொழியிசைத்தாங்கெண்ணரும்பண்ணவர்நீவி்
நுங்கடம்பணியுநும்வரன்முறையுநுவலுமென்றனனுனித்துணர்வோரின்

794 வேதநான்முகனேயாதிவிண்ணவர்கண்மேகவண்ணன்கழலிறைஞ்சி
யோதுநின்னருளாலுற்றவெம்பதங்கட்கோரொருகுறையுமோவின்றாற்
றாதையுந்தாயுந்தானருள்புரியத்தநயர்கடளர்வரோவென்னாப்
பாததாமரையின்முறைமுறைதொழுதுபரிந்துமுன்பரவமேயினரால்

795 வனமிகுசிகரமந்தரகிரியைமத்தெனநிறுவியோர்தாம்பாப்
பனகநற்றுத்திப்பணாமணிபிதுங்கப்பிணித்துநற்கச்சபவுருவாய்க்
கனைகடல்வயிறுகலங்கிடக்கடைந்துகடவுளர்க்கமுதுநன்களித்து
தினகரனெனவேசெஞ்சுடர்பரப்புந்திருமிகுமொருமணிமார்பா

796 திகழ்தருநாரசிங்கமதாகிச்செம்பொன்மேனியன்றனையுகிராற்
புகழ்பெறமார்புகீண்டணிவாகைபுனைதிருக்கரவரவிந்த
விகழ்தலிலிருகோட்டேனமதாகியேழ்நிலமேந்தியவெந்தாய்
சுகமிகவுயிர்க்குத்துணிந்தருள்புரியுந்தொல்லருட்சோதிவானவனே

797 உறுதினமுலர்ந்தவுகாந்தகாலத்திலுததிகளேழுமொன்றாகி
மறுகுறக்கண்டுமன்னுயிர்க்கிரங்கிமாற்றருந்திருவுருமாற்றி
யறைவரிதாயதிறலுடனோங்கியஞ்சலென்றாங்கொர்செஞ்சேலாய்ச்
சிறுசெலுப்புரையிற்சிந்துவேழடக்குந்தீதறுதிகழ்சதுர்வேதா

798 மன்னிவுலகில்வயப்பரியாகிவருங்கருணாகரமூர்த்தீ
தன்னிகராயசதுர்மறைவிளக்கந்தந்திடவந்ததம்பிரானே
பன்னுநல்லன்பர்பவந்தனைச்சாடிப்பரிவினாண்டருள்புரிபரம
நின்மலஞானவீடருள்கருணை நீர்பொழிநீண்டமாமுகிலே

799 வாமனவுருவமாகிமாவலியைவன்சிறைவைத்திடும்வள்ளால்
பூமலர்வரளிகொண்டுபூங்கழைவிற்பூட்டியேயுலகெலாங்காம
காமியை நல்குங்காமனைத்தந்தகண்ணகாயாமலர்வண்ண
நேமியும்வளையுநின்றிலங்கியகைநேரிலரநின்மலமூர்த்தி

800 ஒருபடியண்டமுண்டதையன்றியோரடியாலுலகளந்தோய்
கருமுகிலெனவேகண்படுத்தருளுங்கட்செவிக்கணபணாடவியின்
பருமணியெறிக்கும்பயோததிநாப்பட்பன்னகப்பாயனீத்தயோத்தித்
திருநகருலகமருள்செயவந்ததீதறுசீதரமூர்த்தீ

801 விசிதரங்கறங்குவேலைசூழ்ஞாலமேவியபொதுக்கடிந்தருளுந்
தசரதன்மதலையாகவந்திராமசந்திரனெனும்பெயர்தாங்கி
வசையறுதவத்துக்கவுசிகன்பின்போய்மன்னுதாடகையுயிர்வாங்கித்
திசைதொறுமுரியவிசைநிறுவியமெய்திகழ்ந்திருந்திருமறுமார்பா

802 காதலிற்றவங்கூர்கவுசிகன்வேள்விகாத்தெதிர்சுவாகுயிர்பதைப்ப
மேதினிப்படுத்திவிலகரிதாமைம்புலப்பகைவென்றருண்மேலாங்
கோதிலாக்குணக்குன்றனையகோதமன்சொல்கொடியிடைகொடியகற்சாபம்
பாதநுண்டுகளாற்படவுருவளித்தபாதபஞ்சாயுதநாதா

803 வனமிகுந்தோங்குவரிசிலைகுனித்துவான்முகடதிர்தரமுரித்துச்
சனகர்கோன்றந்தசானகியின்றன்றனிமணமிதிலையில்வேட்டுப்
பனகநற்றுத்திப்பணாமுடிகிடந்தபடிநடுங்கிடப்பரசுராமன்
றனதுவிற்குனித்தவனமிகுமலர்செந்தாமரைத்தடக்கைநாயகனே

804 மன்னியவசிட்டமாமுனிசெம்பொன்மணிமுடிகவித்திடும்வேலை
பன்னுகைகேசிபண்டுகொள்வரத்தாற்பரவருந்தாதைசொற்றவறா
தன்னமன்னவளோடரியதம்பியுடனணைந்துநற்குகனைநண்புவந்து
பொன்னுலகேத்தத்தன்னிகர்வனத்திற்போதுபொற்பாதபுண்டரீகா

805 அணைந்தபின்கானத்தணைந்தவான்றந்தைக்கந்தியக்கடன்முறையாற்றிப்
பணிந்துபின்சென்றபரதனுக்குரியபரிவுடன்பாதுகையுதவி
வணங்குறுசரபங்கனுக்குயர்ந்தோங்குவான்பதமளித்துயிர்விராதன்
றணந்திடத்தடிந்ததண்டுழாயலங்கற்றாங்கியபூந்தடந்தோளாய்

806 மாற்றருஞ்சடாயுவுடன்மகிழ்கூர்ந்துமாயமாரீசனைவதைத்துக்
கூற்றெனவந்தச்சானகிதன்னைக்கொடியராவணன்கொடுபோத
வேற்றமர்பொருதேயிறந்தபின்றந்தைக்கீறுசெய்கடனிழைத்தளவி
லாற்றல்சேர்கவந்தனாருயிர்கொண்டவலைகடலச்சுதானந்தா

807 தராதலத்தொடுவான்றடவிடுமருத்துத்தந்தருண்மைந்தனைக்கண்டு
பராவருகிரணப்பரிதிசேய்கமலப்பதம்பணிந்தேத்தவேழ்பராரை
மராமரமுருவவாளிதொட்டுலையாவாலிமெய்பதைத்திடவதைத்த
வராவணைமீதினாழியினாப்பணாநந்தத்தறிதுயிலமர்வோய்

808 வானரசேனைதன்னொடுமேகிமறிதிரைக்கடற்கரைகட்டி
யீனமின்மேன்மைவிபீடணனன்பினேய்ந்திடவிலங்கையையீந்து
தானவர்கிளையைவேரொடுந்தடிந்துதசமுகன்றன்சிரமரிந்தாங்
கானசானகிதன்சிறைவிடுத்தருச்சித்தயோத்திவந்தணிமுடிபுனைந்தோய்

809 என்னவேபன்னியின்னனவிமையோரேத்திடவெம்பிரான்மகிழ்ந்தா
னன்னவர்தமக்குவேண்டியவரங்களளப்பிலாதனவளித்தருளிப்
பன்னருந்திறல்சேர்பண்ணவர்தமக்குப்பரிவுடன்விடைகொடுத்ததன்பின்
றன்னிகர்மணிப்பொற்சயனமண்டபத்திற்சார்ந்தனன்சக்கரக்கடவுள்

வேறு

810 விஞ்சுசோதவியன்மணிமண்டப
மஞ்சின்மீதுமலர்த்திருமாதரா
ளஞ்சியேபொன்னடிவருடத்திருக்
கஞ்சமாமலர்க்கண்வளர்ந்தானரோ

811 ஆதியந்தமிலாதவருளின்வாழ்
போதரைந்துபுலன்களடக்கினோர்
கோதிலாதகுணத்தர்குரோதமின்
மேதகுந்திறல்வேதபராயணர்

812 குறளுருபராங்குட்டத்தளவினர்
பொறையினீண்டினர்பொங்கெழின்மெய்முக
மிறையுநேர்கிலரெண்ணருமாதவத்
துறையின்மேவினர்தத்துவசுத்தியோர்

813 சீலநற்சயன்றீதில்விசயன்சேர்
மூலவேதமுழங்கிடுமுன்றில்வாய்
நீலமேனிநிமலனைநேடிய
வாலகில்லியர்வந்துபொருந்தினார்

814 வந்துசேர்ந்தமணிக்கடைவாயிலிற்
றந்துகாவலர்தாமெதிர்தாழ்ந்தெழீஇச்
சிந்தையார்வந்தெவிட்டமுன்மண்டபத்
தந்தமாதவர்க்காதனநல்கியே

815 அருக்கியத்தொடருச்சனையாற்றியே
பொருக்கெனப்பணிவுற்றுப்புகழ்ந்துநன்
கிருத்தியின்பத்திருவருமேகியே
திருக்குலாமணிமுன்றிலிற்சென்றனர்

816 சென்றுடையவச்சேடியர்தங்களை
வென்றிமேவுநர்மெல்லவிளித்தரு
ளுன்றுமாதவர்தொக்கனரெம்பிராற்
கொன்றுமன்பினுரைக்குதிரென்னவே

வேறு

817 பிருகுமாமுனிதவப்பேற்றின்வந்தருண்
முருகுலாவியமுகைவிண்டமுண்டகத்
திருமிகவிளங்குசெல்வத்தின்செல்வமே
தருணமண்டலங்கொள்சந்திரசகோதரி

818 மண்ணடையுயிரெலாம்வளர்த்திருந்திருக்
கண்ணனுக்குத்திருக்கண்களாகிய
பெண்ணமுதேதவப்பெற்றியோர்கட
நுண்ணியவுணர்வினானுகருந்தேறலே

819 சங்கரிதனையிணைசாற்றிற்பாதிமெய்
மங்கலவாணிநின்மருகியாகுநே
ரங்கனையவர்க்குனையறைதுமென்னில்யா
மிங்குனக்கிணையெவரியம்பலாவதே

820 மணிதிகழவிரொளிவடங்கொண்மென்முலைப்
பணிமொழிப்படவரவல்குற்பாவையா
ரணிதருமணிக்குநல்லழகுசெய்யுநின்
றுணைமலர்ப்பதந்தனைத்தொழுதல்செய்தனம்

821 ஓர்மொழியுரைப்பதொன்றுடையமெய்த்தவ
ரேர்தருமந்தணர்நீள்கடைத்தலை
சேர்தருமண்டபஞ்செறிந்துவைகுநர்
நீர்முகில்வணற்குநீநிகழ்த்துமென்றனர்

822 என்னலுமலர்திருவெழுந்துமுன்றில்சென்
றன்னவர்தமைத்திருவழகிலாமையான்
முன்னவமதிப்பினான்முத்தங்கான்றிரு
நன்னிலவெறித்திடநகைத்திட்டாளரோ

823 பெண்டகைமதிகொடுபெருகுமோகையா
லொண்டொடிநகைத்தல்கேட்டுறுவர்யாவரும்
விண்டுவைமதித்திடார்வெகுண்டுசெல்லவை
குண்டநீத்தருநெறிகுறிக்கொண்டாரரோ

824 அச்சுதன்றுயிலுணர்ந்தவற்றைநாடியே
மெய்ச்சரோருகத்திருமின்னைநோக்குறாச்
சிச்சியந்தணர்க்கவமதிசெய்கிற்றிநின்
னிச்சையினேகெனாவெடுத்தியம்புவான்

825 துன்றுமீதெழுந்தலைசுருட்டுமாழிசூழ்
வென்றிசேருலகினில்வேதபாரகர்க்
கென்றுநல்லன்பனென்றியம்புநம்பெய
ருன்றனாலின்றஃதொழிந்ததாலரோ

826 கோதிலாவருங்குலத்துதித்தகொள்கையாற்
காதல்கூர்கருமநற்கணவற்காற்றினும்
வேதியர்க்கவமதிவிளைக்கினாங்கவள்
கேதமிலக்குலக்கேடியாகுமால்

827 என்றவன்சபித்தலுமிரங்கியிந்திரை
தென்றிருப்பூவணந்தன்னிற்சென்றலர்க்
கொன்றையஞ்சடைமுடிக்குழகனைப்பணிந்
தொன்றியமாதவமுழந்துவைகினாள்

828 மாயவனஞ்சிப்பின்மஞ்சநீங்கிநற்
சேயதாமரைப்பதஞ்சென்னிசூட்டியா
னேயெனுமுன்னரிங்கிருத்துவேனெனாத்
தூயவேதியர்கடஞ்சூழலேகினான்

829 வார்கொள்பூண்முலைத்திருமயிலைநீக்கியே
கார்கொள்வண்ணத்தினான்வரவுகண்ணுறீஇப்
பேர்விலந்தணர்பதம்பெயர்த்திடாமலே
சீர்கொள்வைகுண்டமத்தியினின்றனர்

830 நின்றவந்தணர்தமைநேமிவானவன்
மன்றல்சேர்மலர்ப்பதம்வணங்கிவல்லையி
னொன்றியவன்புடனொடுங்கியேயெதிர்
நின்றுநன்மொழியினைநிகழ்த்தலுற்றனன்

831 பன்னருமாதவம்பயிலுமந்தணீர்
மன்னியதனாதுபெண்மதியினாலடைந்
தன்னவணைகைத்தனளடியனேன்பொருட்
டின்னதோர்பிழைபொறுத்திரங்கல்வேண்டுமால்

832 அந்தணரரியபாதாரவிந்தமேல்
வந்தவன்சிரமுறிஇவண்டர்மொய்த்திரு
சுந்தரக்கழற்றுகள்சுகந்தகுங்கும
சந்திரதிலகமேதானதாகுமால்

833 ஆங்கவரறைந்தசொல்லனைத்துமின்பமாத்
தாங்கருமன்புசேர்தந்தைதாயுரை
யோங்குநல்லந்தணருரைத்தவாசக
மீங்கிவையிருத்துகேனெனதுசென்னிமேல்

834 வேதமெய்நெறிவழாதுமேதகுநன்னீராடிப்
பூதிசாதனமணிந்துபொருவருமந்திரத்தா
னாதனையருச்சித்தேத்திநாடொறுமெரிவளர்க்கு
மாதவர்சீறினந்தம்வைகுண்டமில்லைமாதோ

835 சதுர்மறைவேள்வியாளர்தமைச்சரண்புகுவதன்றி
நொதுமலர்தம்மைவேண்டேனுவலருநும்மைநோக்கிக்
கதுமெனநகைத்தலால்யான்கட்டுரைசெய்தசாபம்
பதுமபீடிகைமான்பெற்றுப்படர்புவியிடம்படர்ந்தாள்

836 ஆதலாலறவிர்காளோவருஞ்சினமகன்றுநீவி
ரேதமில்வைகுண்டத்தினிதமர்ந்திருத்திர்மன்ற
போதுகேன்பொருந்துதிக்கினென்றருட்புனிதமூர்த்தி
யோதிடவுறுவரானோருவப்புடனுரைப்பதானார்

837 கொண்டல்வண்ணத்தயாமேகூர்ந்தனங்கருணைநின்னாற்
புண்டரிகப்பூங்கோயிற்பொருந்துகற்பரசியாமப்
பெண்கொடிதனைநீவிட்டுப்பெயர்ந்திடிற்பிரிதலாற்றா
யொண்டொடிதனாதுசாபமொழிவதுமொழிகுவாமால்

838 புண்ணியப்பொருளாய்மேலாய்ப்புனிதமாய்ப்பூர்வமாகி
வண்ணமாம்பாரிசாதமரத்திருநீழறன்னிற்
கண்ணகன்ஞாலம்போற்றுங்கனலிமுன்னருச்சித்தேத்த
வுண்மகிழ்வரங்கணல்குமொருசிவலிங்கமுண்டால்

839 அன்னதொல்பூவணத்தினலர்ந்தசெம்மலர்ப்பூங்கோதை
பன்னிருவருடமந்தப்பண்டைநன்மணிகுண்டத்திற்
றன்னிகர்தவஞ்சாரப்பின்சார்ந்தரன்பூசையாற்றி
மன்னியதிருவினோடுவைகுண்டமருவிவாழ்வாய்

840 செம்மையொன்றின்றியாஞ்செய்தீமையைப்பொறுத்தியாவர்
மம்மர்மாந்தரினரன்றாள்வணங்கில்யாம்வணங்கற்பாலா
ரம்மநீயரனன்பர்க்குளதிகமாமாதலாலே
யெம்மனோர்தமக்குமேலாமென்பதற்கையமின்றால்

841 ஆதலாலோதுவங்கேளலர்ந்தசெந்தாமரைக்கண்
மாதவமாயாகாயாமலர்வண்ணாநினதுமெய்யு
மோதிருமெமதுமெய்யுமோர்ந்திடினொன்றேயாகு
நீதியினெம்மைக்காத்தியென்றனர்நெறியினின்றோர்

842 இங்குநீரடைந்தபான்மையென்னெனவினவலோடும்
வெங்கனல்வேள்விசெய்வான்விழைந்துனைவேண்டப்போந்தா
மங்கதுகாத்திநீயென்றந்தணராசிகூறப்
பங்கயச்செழுங்கண்ணானும்பரிந்தவர்வேள்விகாத்தான்

843 காத்தவர்விடைபெற்றன்னோன்ககனகூடத்தின்காறும்
வாய்த்தவைகுண்டம்வைகிவருடமீராறுமாளப்
பூத்திகழ்திருவினாசைபுந்தியிற்பொறானாய்ப்பூமா
தேத்திடும்பூவணத்தினின்பத்தினிழிந்துமன்னோ

844 மாவணங்குற்றசாபமாண்டிடவேண்டியந்தப்
பூவணங்கோயில்கொண்டபொருவிடைப்பாகன்றன்னைக்
கோவணவுடையினானைக்கோதிலாக்குழகன்றன்னைக்
தீவணச்சடையினானைச்சிவலிங்கந்தனிற்பூசித்தான்

845 பூசனைப்பலத்தினாலேபூமகள்சாபநீங்க
வாசையினவட்கண்டங்கேயருமணமுடித்துமீண்டு
மீசனைவழிபட்டேத்தியிந்திரையோடும்பின்ன
ரோசைகொள்வைகுண்டத்தினுலகெலாம்போற்றவுற்றான்

846 அந்தணர்தம்மைப்பூமாதவமதிசெய்ததோட
மந்தநற்பூவணத்தினன்றியேயகலாதென்றா
லந்தநற்சிவலிங்கந்தானருண்மேனிதரித்துவந்த
வந்தநற்றலத்தின்மேலாமருந்தலமொன்றுமின்றாம்

வேறு

847 தேவர்வந்துசேவிக்கநிருதிதிக்
கியாவர்கட்குநன்கினிதுநல்குவான்
கூவிளிக்கிசைகொண்டவெல்லையின்
மேவுபாதியின்வேணவாவினால்

848 அன்றுதொட்டுநன்காதிகேசவன்
மன்றவித்தலமான்மியத்தினாற்
கொன்றையஞ்சடைக்குழகனைப்பணிந்
தென்றுமெதிர்முகந்தரவிருந்தரோ

849 பூர்வலிங்கநேர்போற்றுபச்சிமத்
தேர்கொளம்பிரண்டேகுமெல்லைவாய்ச்
சார்பெரும்புகழ்த்தன்றனாமத்தா
லோரிலிங்முண்டாக்கினானரோ

850 தந்தலிங்கத்தின்சந்நிதிக்கணே
சிந்தைகொண்டிடுதீர்த்தங்கண்டன
னந்தநான்முகத்தயனையன்றுதன்
னுந்திபூத்தருளும்பர்தம்பிரான்

851 ஓங்குநல்லுலகுண்டவெம்பிரான்
பாங்கினால்வழிபாடுசெய்பரன்
பூங்கழற்பதங்கண்டுபோற்றினோர்
தாங்குபாவவெஞ்சட்டைநீங்குவார்

852 உரைகொண்மாயனுக்குத்தரத்திசை
யரைகொளம்பிடுதூரத்தாழ்கிணற்
றுருவமாகியேயோங்கிடும்புகழ்
விரவுமந்தநல்விண்டுதீர்த்தத்தில்

853 மண்டுகாதலின்வந்துமூழ்கியே
விண்டுலிங்கத்தைக்கண்டுமேவினோர்
பண்டுசெய்கொடும்பாவநீங்கியே
யெண்டருஞ்சிவலோகத்தேறுவார்

854 இடபத்திங்களிலிந்துமேவுநாட்
டொடருமன்புடன்சொல்லிலிங்கத்தி
னடியிறைஞ்சினோராற்றிடும்பவ
நொடியினீங்கிடுநுணங்குகேள்வியாய்

855 செப்புகின்றவத்திங்களிற்றின
மொப்பிலாதபனுதிக்குமுன்னரே
யப்புனற்படிவோரரும்பல
னிப்பரிசெனவியம்பவொண்ணுமோ

856 மின்னுமாமணிவிமானமேவியே
துன்னரம்பையர்சூழ்ந்துபோற்றவே
தென்னுறுந்திசைசேர்தராமலே
மன்னுபேரின்பமருவிவாழ்வரே

857 கழறுமப்ரமகைவருத்தத்தி
னெழுபதின்கடையிட்டவெட்டதா
மழிவிலத்தியாயம்மதாமரோ
வழுவின்மாதவமதித்துக்காண்டியால்



வேறு

858 பங்கயத்திருமங்கைசாபந்தவிர்த்திடுகாதைதான்
றங்குநற்சொல்பகர்ந்துளோர்தஞ்செவிக்கொடுநாடுவோர்
துங்கமிக்கபலன்கள்சீர்துன்றுளத்தருள்கூரவே
மங்கலத்தினினந்திநேர்வந்துரைக்கினுமரிதரோ

இலக்குமிசாபமோசனச்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 857

*****

## பதினோராவது
## உமாதேவி திருவவதாரச்சருக்கம்

859 உற்றதிருமாலுடனியைந்ததையுரைத்தாய்
தற்பரமசத்தியவதாரமுரையென்னாக்
கற்றுணர்வுறுஞ்சவுனகன்கழறலோடும்
பொற்புறுபுராணமுநிபுங்கவனுரைத்தான்

860 மன்னுமகவான்முநிவர்வானவர்வழுத்த
வுன்னரியசத்தியவுலோகமதின்மேனாட்
சென்னியொருநான்குடையசெல்வனையிறைஞ்சித்
தன்னிகரிலாதவருட்டக்கனிதுரைத்தான்

861 ஒக்கவுயிர்கட்குயிரதாயுறைகுவோனாய்த்
தொக்கவறிவாகியுயர்தொல்லமரர்போற்று
மிக்கவொருவன்றனைவிளம்பியருளென்னாத்
தக்கமலர்வட்டவணையிற்கடவுள்சாற்றும்

862 முன்னொருதினந்தனின்முகுந்தனுமியானும்
பன்னரியபன்றியதுவாய்ப்படியிடந்து
மன்னமதுவாகிவிண்ணடைந்ததுபறந்து
மின்னுமறியாதசிவனேயிறைவனென்றான்

863 இறைவனவனென்னை யுலகீன்றருளிமாய்க்கு
முறைமைதருமுத்தொழிலுமூவர்கடனன்றோ
வறையினமரர்க்குளவனாதியெனுநாமம்
பெறுவதெவனெனவருள்பிதாமகனுரைப்பான்

864 சீலமுடனென்னைமிகுசெங்கணெடுமாலை
ஞாலமதுதன்னைமுனநல்கியதிகாரம்
பாலுறவெமக்கதுபடைத்தருளநல்கி
மேலவனழித்தருள்வன்மீட்டும்வினைதன்னால்

865 பங்கமறவேயதுபடைத்தருளவெங்கட்
கங்குமகிழ்வோடுபினுமப்பரிசளிப்பன்
சங்கரனவன்செயலதன்றியொருதன்ன
மெங்கள் செயலாற்புரியவெண்ணிடவுமுண்டோ

866 பேதமறயாவையினையும்பிரமமென்றே
வேதமவையோதுவதென்னென்னின்மிகுமிந்த
வாதரவுபூண்டவருமந்தவெழின்மைந்த
வேதமறவேமுகமனாலவையியம்பும்

867 இத்தகைமைநாடியினியெங்கள்பெருமானைப்
பத்தியுடனீயும்வழிபாடதுபுரிந்தே
யத்தனைநினைந்துநலருந்தவமுழந்தான்
முத்தியவனிற்கருள்வனென்றயன்மொழிந்தான்

868 என்றுரைசெய்தந்தையடியின்கணுடன்வீழ்ந்து
நன்றெனமிகிழ்ந்துவிடைநல்கியருளென்ன
மன்றல்கமழ்மானதநல்வாவியிடைமைந்த
சென்றரியநற்றபசுசெய்கெனவிடுத்தான்

வேறு

869 சார்ந்துடனந்தத்தடந்தனில்வளங்கொடாமரைக்கண்களால்வாரி
யார்ந்துநற்றவத்தினருந்துறைபோயவருந்தவர்போன்றயனன்பு
கூர்ந்தருளுபதேசந்தனையுள்ளங்கொண்டருளுடன்வழிக்குறுகிச்
சேர்ந்திடுமூலவங்கியையெழுப்பிச்சிரத்தினிற்சொலித்திடச்செலுத்தி

870 நம்பிரான்றனக்குநற்புளூரத்தினடுவருமமுதநீராட்டி
யைம்புலஞானமாலிகைசூட்டியமர்மனப்பூசனையாற்றி
வெம்பனிமாரிவெயில்வளியிவற்றான்மேவியமெய்நனிவருந்தி
யும்பர்தம்பிரான்வந்துவப்புறவருடமொராயிரமருந்தவமுழந்தான்

871 தக்கவாயிரமாமாண்டுநற்றவஞ்செய்தக்கனுக்கருளுவான்விரும்பித்
தொக்கபொற்பிதிரிற்சுணங்கினையணிந்துசுமந்தகச்சினையிறுத்தோங்கி,
மிக்கவான்வட்டமுகட்டினைமுட்டிவெளியினையடைத்திடுகொங்கை
மைக்கருங்கண்மாமயிலொடுமெம்மான்மழவிடைமேற்கொடுவந்தான்

872 அண்ணல்வந்தனனாலென்றுடனெழுந்தேயானந்தபரவசனாகி
விண்ணின்மேற்பொருவல்விடைக்கொடியுயர்த்தவிமலனல்லிமைத்தலின்மூன்று
கண்ணுமான்மழுவுங்கரசரணமுமெய்க்கவினுமேதன்கணேபுகுத
மண்ணிடையேவீழ்ந்தெழுந்தனன்றக்கன்வழுத்தினனான்மறைதன்னால்

873 ஆயகாலையிலங்கணனருள்புரிவானருந்தவங்கண்டகமகிழ்ந்தே
நேயமோடெம்மைநினைந்து செய்தவத்தைநிகழ்த்துதிதக்கநீயெனலு
மேயதோர்சென்னியிற்றிடவயன்முனெழுதியதலைவிதிவசத்தாற்
றூயநற்பசுந்தேன்சுரும்புணுங்கமலத்துணைப்பதந்தொழுதிவைசொல்வான்

874 நினைவரிதாகிநினைந்துயிர்க்குயிராநின்மலநினைவணங்கிடுவா
ரனைவருமெனைவந்தடியில்வீழ்ந்திறைஞ்சியருந்துதி செய்திடல்வேண்டுந்
தனைநிகர்தேவர்தானவரென்றுஞ்சாற்றுமென்பணிகளாற்றிடவு
முனையலதொருவர்தனைவணங்காதவுரிமையுமுதவுதல்வேண்டும்

875 படந்தருமுரகஞ்சுமந்திடக்கிடந்தபௌவநீருடுத்தபாரகமு
மிடைந்தசீரடைந்தவிண்ணவர்பதமும்வேதமாலாதியர்பதமு
மடர்ந்தமர்விளைக்குமசுரர்தம்பதமுமனைத்துமெந்நாளுமென்னாணை
கடந்திடாவண்ணந்திடம்படவேந்தாய்க்கருதிநீயருளவும்வேண்டும்

876 பொருவரும்புதல்வர்புதல்வியர்த்தந்துபொன்றிடாதிருத்தலும்வேண்டு
முரியவண்டங்களுதவிடுமுமையெற்கொருமகவாகவும்வேண்டு
மருமறையவன்போலன்பிலேன்பால்வந்தருமணமுடிக்கவும்வேண்டுங்
கருதரிதாயகடவுணீயென்னாக்கருணைவாரிதியுரைசெய்வான்

877 தவலரிதாயதவமிகுமயலுந்தக்கநற்றலைமைநீபெறவே
யிவையுன்களித்தாமித்திருநீங்காதிம்முறைநடத்தியாலென்னாக்
குவளைசேர்தடங்கட்கோமளவல்லிகொண்டகூறுடைக்குழகன்செம்
பவளவார்சடையிற்பகீரதிமிலைச்சும்பராபரன்கயிலையிற்படர்ந்தான்

வேறு

878 எந்தைமறைந்தபினேத்தியிறைஞ்சி
நந்தினையேந்தியநாரணனற்பூ
வுந்தியுகித்தவனுத்தமமைந்தன்
சிந்தைமகிழ்ந்துதிளைத்தனனம்மா

879 நாமகண்மேவியநான்முகனைத்தன்
பூமருவுந்திதழ்புந்திநினைந்தா
னேமுறுநல்வரமீந்ததையெங்கோன்
மாமலரோனுமனத்தின்மதித்தான்

880 பன்னரிதாயபரன்றனைநோக்கி
மன்னியமாதவமைந்தனுழந்து
மின்னலின்மூழ்குறவிவ்வரமுற்றா
னன்னலமன்றிதுநாடிடினன்றே

881 என்னுரையொன்றையுமெண்ணலனாகி
முன்னவன்வந்துநன்முத்தியையெண்ணான்
பின்னினியென்னதுபேசுவனென்னாத்
தன்னதுநெஞ்சுதரிக்கலனாகி

882 இருந்தினபன்னியெனென்றரிதாய
மருந்தனமைந்தனைவல்விரைந்தேத்திப்
பொருந்தினனாசிபுகன்றனன்மிக்க
பெருந்தகைமேயபிதாமகன்மாதோ

883 அல்லிமலர்த்திகழையநலன்பா
லொல்லையினீநகரொன்றுசெயென்னா
மல்லல்கொடக்கநன்மாபுரமென்றே
தொல்லழகாபுரிதோற்கவிதித்தான்

884 அந்தமில்சீர்புனையப்புரிநோக்கா
விந்தநகர்க்கிணையின்றெனவேதன்
றந்தருள்கோயிலிற்சார்ந்தனன்கூடம்
வந்துபுகுந்திடுமாகளிறேபோல்

885 தண்ணளிசேர்மதிசார்கவிகைக்கீழ்
வண்மையினோங்குகைமன்னியசெங்கோ
லெண்ணரிதாமுலகெங்குமளப்பத்
திண்ணியவாணைதிசாமுகஞ்செல்ல

886 பூவினின்மேவியபுங்கவனாதி
தேவர்கடானவர்சித்தரியக்கர்
மூவுலகும்புகழ்முச்சுடரேனை
யாவருமேத்தவிருந்தரசுற்றான்

வேறு

887 பின்னொருநான்குசென்னிப்பிதாமகன்பதத்தில்வந்த
மன்னுசீர்வடமீன்கற்பின்மறைக்கொடிதனைமணஞ்செய்
துன்னருமுலகநல்கவொராயிரமைந்தர்த்தந்தாங்
கின்னருளீசற்போற்றியிருந்தவஞ்செயவிடுத்தான்

888 அந்தமானதவாவிக்கணருந்தவஞ்செய்யமைந்தர்
நந்திசைமகதிவீணைநாரதனங்கணெய்தி
யிந்தமாதவம்புரிந்ததென்னெனவிறையைநோக்கித்
தந்திடவுலகம்யாவுந்தவம்புரிகின்றோமென்றார்

889 என்றலுநன்றுநன்றென்றிருகரந்தாக்கிநக்கு
மின்றிகழ்வாழ்வுதன்னைமெய்ம்மையின்விரும்பினீரா
லென்றுநன்கழியாவின்பத்திருந்தரசியற்றுமென்னா
வன்றவர்க்குபதேசஞ்செய்தந்தரத்தேகினானே

890 ஆரருளுபதேசஞ்செய்தம்முனிசெல்லமைந்தர்
பேரருளோடுங்கூடிப்பேரின்பவாரிமூழ்கி
நாரணன்கமலக்கோயினான்முகனண்ணவொண்ணாப்
பூரணமோனஞானப்பூங்கழனீழல்சேர்ந்தார்

வேறு

891 ஆனகாலையினருந்தவம்புரியுநன்மைந்தர்
பான்மைநாடுதுமென்றவட்படர்ந்தபின்றக்கன்
றானும்வந்தருண்மைந்தர்க்குச்சத்தியமோன
ஞானநாரதனவின்றதைநாடினன்வெகுண்டான்

892 தக்கனாயிடைத்தக்கநம்மைந்தர்கள்யாரு
மிக்கமுத்தியின்மேவினர்விதியிதுவென்னாத்
துக்கமுற்றுமெய்துண்ணெனநடுங்கியசூழல்
புக்கனன்பினுமாயிரம்புதல்வரைத்தந்தான்

893 தந்தமைந்தரோராயிரவோரையுந்தக்கன்
மைந்தவம்மினீர்மானதமடுவினிலேகி
யிந்தமானிலம்படைத்திடவெந்தையைநோக்கிச்
சிந்தைகூர்தவஞ்செயுமெனச்செப்பினன்விடுத்தான்

894 விடுத்தவாயிரமைந்தருமேவிமானதமா
மடுத்தலத்திடைவைகியேமாதவம்புரிய
வடுத்தனன்முனமகன்றநாரதனருள்வீடு
கொடுத்திடும்படிகோதிலாக்குமரர்கடம்முன்

895 நீதிமாதவம்புரிந்திடுநீவீர்கள்யாவிர்
யாதுகாரணமித்தவமிழைக்குவதென்னத்
தாதையாந்தக்கன்றன்பணியாற்படைத்திடுவா
னாதன்றன்னிடைநற்றவமுஞற்றுதுமென்றார்

896 என்னலோடுமங்கியைந்திடுநாரதனிரங்கி
மின்னுமொக்குளுமென்னவேவிளிந்திடும்யாக்கை
தன்னினீர்நிலையென்னவேதந்திடுந்தொழிற்கா
மன்னுமாதவமிழைக்குதிர்மம்மரினம்மா

897 ஈதினாற்பிறப்பிறப்புறுநரகிடையெய்தும்
பேதையோர்தொழிற்பிடித்தனிர்பிறப்பிறப்பில்லா
வாதிநாயகனழிவிலாவருட்பதநீழல்
காதலாலினியடைவதேகருமமென்றுரைத்தான்

898 உரைத்தநாரதன்றனைப்பணிந்துற்றநன்மைந்த
ரருத்தியாலெமக்கருளெனவம்முனிதன்றாள்
சிரத்தினன்குறவிருத்தியேசெப்பினன்வாக்குத்
திருத்தமாந்திருவஞ்செழுத்தருளுபதேசம்

899 திகழ்ந்தமெய்த்திருவஞ்செழுத்தருணிலைசெப்பி
மகிழ்ந்துபின்றிரிமலத்தினைமாற்றிவெம்பிறவி
யகழ்ந்தருந்திடவரியஞானமுதமருளிப்
புகழ்ந்திடுந்தவநாரதன்விண்ணிடைப்போந்தான்

900 நடையின்மேதகுநல்லெழின்மைந்தர்கண்ஞானப்
படைகொடைம்புலப்பகைஞரைவென்றுதம்பரிவா
விடைவிடாதுநல்லிறைசிவயோகினிலிருந்தே
முடிவிலாதபேரின்பமாமுத்தியையடைந்தார்

901 அன்னமைந்தர்களாயிரவோருநன்முத்தி
தன்னையெய்தலுஞ்சதுர்முகப்பிரான்றிருமைந்த
னின்னும்வந்திலாரெம்மகாரென்கொலோவென்னா
மன்னுமானதவாவியின்வந்தனன்மன்னோ

902 வந்துமானதவாவியின்மைந்தரைக்காணா
னிந்தவாறிதுவென்னெனவேங்கியேவிரங்கா
முந்தைநாளினம்மைந்தரைமுத்தியினேற்று
மந்தநாரதன்புணர்ப்பிதுவாமெனவறிந்தான்

903 அருளினீர்மையாலப்பரிசுணர்தலுமுள்ள
மருள்கலந்ததுமன்னுயிர்பதைத்ததுவையம்
வெருவுகின்றதாய்வீங்கியவுயிர்ப்பின்வெங்கோப
விருள்பரந்துசென்றேறியதெண்டிசாமுகத்தும்

904 பாந்தளின்றலைபரிந்தபாரடங்கலும்படைப்ப
நாந்தருந்திறன்மைந்தர்க்குநன்கதியளிப்ப
வாய்ந்தடைந்தனனன்றவராருயிருண்பான்
போந்தகூற்றிவனென்றுதன்னெஞ்சகம்புழுங்கி

905 நொந்துபங்கயன்மைந்தன்பின்னுவலுவான்மகதி
நந்துவீணைசேர்நாரதன்செயலிதுவானாற்
றந்துநேரிடையாரலாற்றனயரைப்பெறுவான்
சிந்தைசெய்கிலனென்றுதன்றிருநகர்சென்றான்

906 மிக்ககாதலின்மேவினன்மெல்லியற்சேர்ந்து
திக்கெலாம்புகழ்சென்றிடச்சென்னிமூன்றிட்ட
தொக்கவெண்டருமிருபதுதுடியிடையாரைத்
தக்கன்மீண்டுநற்பரிவொடுதந்தனன்மன்னோ

907 தருமனுக்குயர்கிரியைநல்வபுவைகீர்த்திசாந்தை
சுரசைபுத்திநற்சுபுத்தியேதுட்டையோடிலச்சை
திருதிகத்திமென்சிரத்தைமேதாவெனுந்திருப்பே
ரருளினாகுமிப்பத்தின்மேன்மூவரையளித்தான்

908 பிருகுமாமுனிமரீசியேபெரும்புகழ்மன்னும்
பொருவிலாவருட்புலத்தியனங்கிராபுலகன்
றிருவலந்திகழ்வசிட்டனத்திரிவளர்செந்தீக்
கிரதுநற்பிதராவெனக்கிளத்திடுமிவர்பால்

909 புகல்கியாதிசம்பூதிநாரிசந்நதிமிருதி
துகளரித்திடுபிருதியூற்சையனசூயை
நிகழ்சுவாகமைசுவதையாம்பதின்மரைநிரலே
மகிழ்வினின்பநன்மணம்புணர்வித்தனன்மன்னோ

910 பின்னர்நான்முகப்பிதாமகப்பிரானருள்பிள்ளை
மின்னுகின்றநற்றாரகைக்கணங்களின்மேலா
முன்னரும்புகழோங்குமூவொன்பதுமடவார்
தன்னைநேர்பெறவுதவியேதண்மதிக்களித்தான்

வேறு

911 இன்னநன்மருகற்கன்பாலின்பநன்மணம்புணர்த்திப்
பன்னிடுமன்னோன்மேவும்பதியிடைவிடுத்தபின்ன
ரன்னமன்னவர்கண்மைந்தரவர்தருமைந்தரானோர்
மன்னியகேளிர்துன்னமகிழ்ந்தரசியற்றுநாளின்

912 படுமணிச்சோதியண்டபகிரண்டம்படர்ந்துசெல்லும்
வடுவறுசிறப்பின்மிக்கவட்டவான்முகடுமுட்டிக்
கொடுமுடியிடறும்வெள்ளிக்குன்றின்மேற்குழகனோர்நாள்
விடுசுடர்க்கிரணந்தாக்கவீற்றிருந்தருளினானே

913 அந்தநல்லமையந்தன்னினம்பிகைவணங்கியெந்தாய்
சந்ததமுயிர்கட்கெல்லாஞ்சஞ்சலப்படுத்துகின்ற
வெந்துயர்ப்பிறப்பிறப்பைவீட்டிவீடருளுந்தன்மை
யிந்தவாறடியனேற்கிங்கியம்பிடவேண்டுமென்றாள்

914 என்றுமையியம்பநன்றென்றினவரிவண்டுகிண்டு
கொன்றையந்தேன்றுளிக்குங்கோடீரபாரத்தெந்தை
பொன்றிகழ்சுணங்கணிந்துபொற்படாம்போர்த்தகொங்கை
மின்றயங்கிடைவைவேற்கண்மெல்லியற்குரைப்பதானான்

915 தன்னிகராகிநின்றசகளநிட்களமெமக்கு
மன்னியவுருவமாகும்வகுத்திடுஞ்சகளமான
வுன்னருளதனையாமேயுபாதானமாகியென்று
நின்னொடுமன்பர்போற்றச்சதாசிவமாகிநிற்போம்

916 நிட்களவுருவந்தன்னைநிகழ்த்திடினுலகுக்கெல்லா
முட்பொருளாகியெண்ணிலுயிர்க்குயிராகிமன்னோ
வெட்டருதயிலமென்னவெங்கணுநிறைந்தெஞ்ஞான்றுந்
தெட்பமதாகியார்க்குந்தெரிவரிதாகுமன்றே

917 உருவொருநான்கதாகியுற்றிடுமருவநான்கா
யருவுருவொன்றேயாகியையைந்துபேதமாகி
மருவியதிருமால்கஞ்சமலரயன்வாசவன்சீர்
பொருவருமுனிவர்விண்ணோர்போற்றிடவீற்றிருப்போம்

918 அந்திகழ்பரசிவன்றான்பராசத்திதன்னையன்பாய்த்
தந்திடுமதனிலாதிசத்தியாமதனிலிச்சை
வந்திடுமதனின்ஞானமாமதிற்கிரியைமன்னு
மந்தமிலிவற்றினொவ்வொன்றாயிரத்தொன்றதாகும்

919 அந்தமிலாதவிந்தவைந்துநஞ்சத்திதன்னாற்
றந்தனமயன்மாலீசன்மகேசனற்சதாசிவந்தாம்
வந்திடக்கருதியன்னோர்மருவுமைந்தொழிலியற்ற
நந்திருவருளினாலேநாடொறுநடாத்துவாமே

920 தாவில்பல்லுயிர்க்கெஞ்ஞான்றுந்தருமிருவினையறிந்து
நாவெடுத்தியம்பலாற்றாநரகொடுசுவர்க்கமீதும்
பூவின்மேலயன்மால்காணாப்பொருவருஞான நிட்டை
மேவினோர்தமக்குநந்தாவீடருள்புரிதுமன்றே

921 ஆதலாலைந்தொழிற்கொளப்பிரமாண்டமெல்லா
மோதிடினின்கூறாமென்றுரைக்கருமொருவன்கூற
வீதெலாமெனதுகூறென்றெண்ணியேயெம்பிரான்முன்
காதலிற்றனைமதித்துக்கழறினள்காமக்கோட்டி

922 மங்கைநீயெம்முனின்னைமதித்தனையுலகெலாமங்
கங்குயிர்க்குயிராய்நின்றேயருள்புரிந்திலமேற்செய்ய
பங்கயனாதியாயபண்ணவர்பணிகடம்மா
லிங்கொருசெயலதுண்டோவென்றனனெவர்க்குமேலோன்

923 கண்டினுங்கனிந்ததீஞ்சொற்கலங்கிடந்தொளிருங்கொங்கை
யொண்டொடிநின்னாலுண்டோவோர்செயலதுநீகாண்டி
யெண்டகுகாதலாலென்றெடுத்திசைத்தருளியெங்கோன்
பண்டுபோற்பரயோகத்திற்பரிவுடனிருந்தானன்றே

924 இறைசிவயோகமெய்தவெழுதுசித்தரமதென்ன
நிறையுயிரண்டமியாவுநிகழ்ந்திடநெஞ்சமஞ்சிக்
சிறிதுநின்செயலென்னாதுதீயனேன்றனைமதித்திங்
கறிவிலாதுரைத்ததோடமதுபொறுத்தருள்செயென்றே

925 சீருறுகமலச்செங்கைகூப்பியேதிருமுனின்றிங்
கோர்வரிதாயவண்டத்துற்றிடுகின்றவெண்ணி
லாருயிர்த்தொகையைமுன்போலளித்திடவேண்டுமென்றாள்
பேருறுமண்டமெல்லாம்பெற்றெடுத்தருளும்பேதை

926 அன்னமன்னவள்வருந்தவாருயிர்த்தொகையளிப்பான்
றன்னிகருருத்திரேசர்தங்களையுன்னலோடு
மன்னவர்யாருமீண்டியருச்சுனவட்டத்தேகி
மன்னியசிவநிசிக்கண்வள்ளலையருச்சித்தார்கள்

927 அருச்சனைபுரிந்தபின்றையன்னவர்முன்னமுன்னோன்
பொருக்கெனவந்துதோன்றிப்பொன்றுயிரனைத்துநல்க
விருப்புறுமயன்மாலேனோர்மெய்த்துயிலுணர்ந்தோரென்ன
மரித்தனரெழுந்தார்மூடும்வல்லிருணீங்கிற்றன்றே

928 ஆலகாலம்பழுத்தவந்தநற்கந்தரத்தோன்
சீலமாஞ்சிவயோகத்திற்சேர்ந்தினிதிருந்தகாலை
மாலயன்முதலோர்செய்கைமாண்டனரென்றால்யார்க்கு
மேலவன்சிவனேயென்றுவிரித்திடவேண்டலின்றே

929 அருள்வரமமலற்கேளாவவ்வுருத்திரர்கண்மாகத்
திருசுடர்சேர்நாணென்னலெல்லியினான்கியாமம்
பரமநிற்பூசைசெய்வோர்பரகதிபெறுதல்வேண்டும்
வரமருளென்னச்செய்யமலர்த்திருவாய்மலர்ந்து

930 சங்கரன்பின்னரேகாதசவுருத்திரர்கட்கெல்லாம்
பங்கமில்வரமீந்தன்னோர்பதியிடைப்படரவேவிச்
செங்கமலத்தோனாதிதேவர்கள்யாரும்போற்ற
வங்கண்வானவன்மிக்கோங்குமகலிருவிசும்பிற்போந்தான்

931 செம்பதுமத்தோனாதிதேவர்பின்கயிலைமேவி
யெம்பணியிழந்துவாளாவெண்ணமொன்றின்றிப்பன்னாள்
வெம்பலமடைந்தியாமேமெய்யுணர்விகந்தோமெங்க
டம்பிரானருளினீராற்சாற்றுதிமாற்றமென்றார்

932 அன்னவர்பன்னியிவ்வாறறைதலுமமலன்கேளா
மன்னியவுணர்வுமாண்டுவரன்முறைவழுவுகின்ற
தின்னவையிறைவிக்காகுமிற்றைநாட்கைப்பிடித்துந்
தொன்மறைமுறைநீராற்றுமென்றனன்றொழுதுபோந்தார்

933 அரிதிகழ்மதர்வேற்கண்ணியமலனையடிவணங்கிக்
கருதருமுயிர்களாற்றுங்கருங்கொடும்பவங்களென்பான்
மருவிடுமென்றதென்னைவாய்மலர்ந்தருளுகென்ன
வொருதிருநுதற்கணும்பர்தம்பிரானுரைப்பதானான்

934 நின்னைநீமதித்துநம்முனிகழ்த்தினையாதலாலே
மன்னுயிர்த்தொகையுஞ்செய்கைமாற்றினமானீவேண்டப்
பின்னுமுண்மகிழ்ந்துமுன்னர்ப்பெற்றியிற்றந்தேம்யாமீ
துன்னிடினுன்னால்வந்ததுன்னிடத்தாகுமன்றே

935 ஈங்கிதுவன்றியின்னுமிசைத்திடினுலகமெல்லாம்
பாங்கினாலீன்றநிற்குப்பலித்திடும்பவங்களியாவுந்
தாங்கிடுந்தன்மைத்தாகுமென்றனன்றாணுவாகி
யோங்குலகங்கட்கெல்லாமுயிர்க்குயிராகிநின்றான்

936 நித்திலக்கொத்துமாலைநெருங்கினமுலையாளஞ்சிக்
கைத்தலங்குவித்தியானேகருத்தினின்மதித்துரைத்த
வித்துயர்வீடுமாறொன்றியம்புதியெந்தையென்னாப்
பைந்தலைமணியொதுக்கும்பன்னகாபரணன்சொல்வான்

937 காளிமங்களுலுநன்னீர்க்காளிந்திநதியினெய்தித்
தாளதாமரையின்மேவித்தன்னிகரின்றிமன்னு
நீளிருவிசும்பினோங்குநிலவுகான்றொளிருங்கோல
வாள்வலம்புரியாயங்கண்மாதவம்புரிந்துவாழ்தி

938 மிக்கவந்நதியிற்பின்னோர்விழைவுறுகுழவியாவை
தக்கனாங்கெய்திநின்னைத்தன்றியருப்புதல்வியென்று
பக்கமோடக்கணந்தன்பதியிடைக்கொண்டுசெல்லத்
திக்குலகேத்தவன்னான்சேயெனவளர்திமாதோ

939 வளம்பெறவையாண்டேகமன்னியேயெம்மையுன்னி
யுளங்களிதூங்கநீயுமொண்டவம்புரிதியாமே
விளங்கிழைநின்பான்மேவிமிக்கநன்மணம்புணர்ந்து
களங்கமில்கணங்களோடுங்கயிலையில்வருதுங்காண்டி

940 என்றிவையிறைவன்கூறவெண்ணரும்புவனமீன்ற
மன்றலங்கூந்தற்செவ்வாய்மாதுமைவணங்கியேத்தி
மின்றிகழிடைநுடங்கவிடைகொடுவிளங்கும்வெள்ளிக்
குன்றினையொருவிமிக்ககுவலயத்திழிந்துபோந்தாள்

941 மூளுமன்பதனால்வேதமுளைத்தெழுமூலமன்ன
காளமார்கலியைவெல்லுங்காளிந்திநதியிற்சங்காய்
வாளுலாவியதடங்கண்மங்கைபங்கனைநினைந்து
தாளதாமரையிருந்துதவம்பலநாளுழந்தாள்

942 சந்தநான்மறைதேர்வண்மைச்சவுநகமுனிவகேண்மோ
சிந்தையிலுவந்துநாதன்றிருவெழுத்தஞ்சையுன்னி
யிந்தமாதவம்புரிந்தாங்கிறைவிநன்கிருப்பத்தக்கன்
வந்தவடனையெடுத்துவளர்த்திடுவளமைசொல்வாம்

வேறு

943 அற்றமில்சிறப்பினந்தவாழ்புனற்கண்மூழ்குவான்
மற்றுநேரிலாதமாசிமாமகத்தின்வண்மையால்
விற்புரூரவேதவல்லியோடுமந்தவேலையி
லெற்குலாவுமெல்லைதோன்றுமெல்லையங்கணெய்தினான்

944 சார்ந்தவேதவல்லியோடுதண்புனற்கண்மூழ்கியே
கூர்ந்தவன்பினோடுதானைகூடியேகவேகுறாச்
சேர்ந்ததாமரைக்கணந்திகழ்ந்தசங்கிலங்கல்கண்
டார்ந்தவன்பினோடுதக்கனங்கைகொள்ளவள்ளினான்

945 சிவனருட்டிகழ்ந்துவந்தசெல்விதன்னையெண்ணரும்
புவனமீன்றமாதைநம்புதல்வியென்றுகைக்கொளா
வுவமனற்றவேதவல்லியுச்சிமோந்துறத்தழீஇ
யவணலத்தையன்பினாடியகமகிழ்ச்சிபொங்கினாள்

946 பொங்கியேசுணங்கணிந்துபுடைபரந்தெழுந்துபொன்
றங்குநற்கலன்சுமந்துசந்தனந்திமிர்ந்துநேர்
துங்கமேருவென்முலைசுரந்தபாலருந்தியே
மங்குல்வந்துறங்கிடுந்தன்மாளிகைக்கொடேகினாள்

947 உம்பரோடுமுலகமெங்குமுற்றசேனைசுற்றவே
நம்புமாமணிக்கணங்கணண்ணுகோயின்மன்னியே
வம்புலாவுமதுரகீதவண்டுகிண்டிமதுவுணு
மம்புயாசனத்தன்மைந்தனரசுசெய்திருந்தனன்

வேறு

948 வந்துமனைபுகுந்ததற்பின்மறைக்கொடிதன்மார்படங்காச்
சுந்தரப்பொற்றுணைமுலைப்பால்சுரந்தளித்துநாட்குநா
ளுந்துபெருங்காதலினாலுலகீன்றவுத்தமியைச்
சந்திரன்போற்றிருமேனிதான்வளரவளர்த்தனளால்

949 பக்கமுறுமோரன்னப்பார்ப்பென்னப்பங்கயன்சீர்த்
தக்கனருண்மிக்கமகடவழ்ந்துதளர்நடைபயின்று
தொக்கவனமுருந்தெயிறுதோன்றிடவையாண்டகற்றி
மைக்கண்மயிலாறாண்டின்மனத்திஃதுமதித்துரைத்தாள்

950 மொழியொன்றுபுகல்வலிருமுதுகுரவரதுகேண்மின்
செழுமலர்க்கொன்றையினறும்பூந்தேன்றுளிக்குஞ்சடாமௌலி
மழவிடையான்மணஞ்செய்யமாதவஞ்செய்குவனெனவோ
ரழிகயநற்கடிமாடத்தருந்தவஞ்செய்தமர்ந்திருந்தாள்

951 மங்கைகடிமாடத்தின்மன்னுமருந்தவம்புரியத்
துங்கமிகுமறைக்கொடிதான்றொழுகணவன்முகநோக்கித்
திங்கணுதற்பேதைதவஞ்செய்திறநீசெப்புகெனக்
கங்குறவழுங்கூந்தற்காரிகைக்குக்கட்டுரைப்பான்

952 யான்முயன்றுதவஞ்செயுநாளிந்தமடமயிலோடு
மான்மழுவேந்தியவெங்கோன்மழவிடைமேல்வந்தருளித்
தான்வரமிக்களித்தனன்பின்சங்கரிசேயாய்நீயென்
பான்மருகனாகவரும்படியடியேற்சருளென்றேன்

953 அன்னவரந்தந்தனமென்றரனருளவதனாலே
மன்னியவிம்மடக்கொடிநம்மகவாகவந்துதித்தாள்
பின்னருநம்மருகோனாய்ப்பிஞ்ஞகனும்வந்தருள்வ
னென்னலுமின்பக்கடலிலேந்திழைவீழ்ந்தழுந்தினளால்

வேறு

954 இன்னணமிறைவிமிக்கவிருந்தவம்புரியும்வேலை
பன்னிரண்டாண்டுநீங்கப்பரஞ்சுடர்பரசுபாணி
தன்னருளதனாலந்தச்சங்கரிதவத்தைக்காண்பான்
மன்னியபிரமசாரியாகவோர்வடிவந்தாங்கி

955 மடன்முறுக்குடைக்குஞ்செந்தேன்மாமலரயனுமாலு
மிடலுடன்றேடிக்காணாமெய்ப்பதங்கொப்பளிப்பப்
படிமிசைநடந்துதக்கன்பதியினிற்போந்துஞானக்
கொடியிடைதவக்கோட்டத்திற்குழகனல்லழகிற்சென்றான்

956 பொம்மல்சேர்சேடியார்முன்புகன்றவட்புகுந்தலோடு
மிம்மெனவெதிர்சென்றேத்திவெழின்மணித்தவிசினேற்றிச்
செம்மலர்ப்பதத்திற்பூசைசெய்துமுன்வணங்கிநின்றாள்
கொம்மைவெம்முலைக்கருங்கட்கோதின்ஞானப்பூங்கோதை

957 நின்றவடன்னைநோக்கிநெற்றிவெண்ணீறுபூத்தோ
னொன்றியான்விழைந்தீக்குற்றேனொண்டொடியதுநீசெய்யின்
மன்றவேயுரைப்பனென்னாவாய்புதைத்தொதுங்கியஞ்சி
யென்றனக்கியைவதென்னினியம்புதியெந்தையென்னா

958 சதுர்மறைபாடும்வாயான்றானுரைத்தருள்வானின்னைப்
புதுமணஞ்செய்யகிற்பான்போந்தனனீண்டியானே
மதிதருதிருமுகத்தாய்மாற்றமொன்றியம்பலலென்னாக்
கதுமெனக்கன்னமூலங்காந்தளங்கைபுதைத்தாள்

959 நெஞ்சகங்கனன்றுவல்லேநெட்டுயிர்ப்பெறிந்துசோர்ந்து
வஞ்சகவேடந்தாங்கிவந்தனையிதுமதித்தோ
வெஞ்சலிலிறைவன்வேண்டியின்பநன்மணஞ்செய்கிற்பான்
றஞ்சமாமவனைநோக்கித்தவமிகச்சார்ந்தேனென்றாள்

960 நாதனைநாடற்கெட்டாஞானநாயகனைநோக்கி
நீதவமுயல்வதென்னைநின்மலன்வந்துநின்னைக்
காதலின்வதுவைசெய்தல்கருதரிதால்வருந்தல்
பேதையேயென்றானென்றும்பரமசாரியாயபெம்மான்

961 தன்னிகராகிநின்றதம்பிரான்வதுவைசெய்ய
மன்னுமாதவங்களின்னும்வருந்தியான்புரிவனந்த
நின்மலன்றானேவந்துநினைத்ததுமுடித்திடானே
லென்னுயிர்க்கீறுசெய்வேனென்றனளெம்பிராட்டி

962 நீங்குகவென்றுசீறிநீண்மணிமாடந்தன்னிற்
பாங்குறுபரிசனத்தோர்தம்முழைப்படர்தலோடும்
பூங்குழலுமையாள்காணப்பொருவருங்கருணைவள்ள
றீங்குறாத்தனதுபண்டைத்திருவுருத்தரிசிப்பித்தான்

963 அருளுருவதனைக்காணுஉவம்பிகையுள்ளம்வெம்பி
வெருவிமென்முலைமுன்றிற்செவ்வேற்கணீரிறைப்பக்காந்தட்
கரமலர்குவித்துநாயேன்கருதிடாதுரைத்தயாவும்
பொருவிடைப்பாகநீயேபொறுத்தருள்புரிதியென்றாள்

964 இப்பரிசியம்பலோடுமிறைவிமேலன்பிருத்தித்
துப்புறழ்சடிலத்தெந்தைதூய்மறைபாடும்வாயான்
மைப்படிந்திலங்குமொண்கண்மடந்தைநீயஞ்சலென்னாச்
செப்பினன்மகிழ்விற்சூழ்ந்தசிலதியர்செவிநிறைப்ப

965 தேங்கியவார்வமோங்குஞ்சிலதியர்சிலவரோடிப்
பாங்குறுதக்கன்றன்பாற்பான்மொழிபான்மைகூற
நீங்கருங்காதல்கூர்ந்து நின்மலனென்னைநாடி
லாங்கவன்றனக்கென்சேயையருமணமுடிப்பலென்றான்

966 கொலைகெழுகூர்வேலுண்கட்குலவுகோமளங்குரும்பை
முலைமுகஞ்சிறந்தபொற்பூண்மொய்குழன்முறுவற்செவ்வாய்ச்
சிலைகுலாநுதல்சேர்மங்கைசிலதியர்சிலவர்சூழத்
தலைவனைநாடியங்கட்டானினிதிருந்தாளன்றே

வேறு

967 மைக்கருங்கணுமைமாதராண்மட்டறுங்கருணைகூரவே
தக்கபண்புரியின்மேவியேதக்கனன்பின்மகளானசீர்
மிக்கநன்கதையையோதுவோர்மெய்ச்சொலின்பயனைநாடுவோர்
முக்கணெந்தையருளாகியேமுத்திசென்றடைகுவார்களே

உமாதேவிதிருவவதாரச்சருக்க முற்றியது

ஆகச்செய்யுள் 967

*****

## பன்னிரண்டாவது

## திருக்கலியாணச்சருக்கம்

968 அருமறைநான்கையும் கத்தடைத்தசீர்
மருவியசவுனகமகிழ்ந்துகேண்மியா
பொருவிடைப்பாகனப்பொருவின்மங்கையைத்
திருமணஞ்செய்ததுசெப்புவாமரோ

969 பரைதிருமணஞ்செயப்பரமன்றந்தசொல்
விரைமலர்க்கூந்தலார்விளம்பும்வேலையிற்
றரைபுகழ்தரவருதக்கனந்தநாட்
கரையிலாவின்பநற்கடலிற்றுன்னினான்

970 முச்சுடராகியமுக்கணெம்பிராற்
கிச்சகம்புகழ்தரவீன்றெடுத்தநன்
மைச்சருளோதியைமணம்புணர்ந்துவா
னச்சதுர்முகன்மகனகத்தினெண்ணினான்

971 உரையுணர்வறிவருமும்பர்தம்பிரான்
மருவியவுமைதனைவதுவையாற்றவே
திருநகரணிபெறச்செய்மினென்றுநன்
முரசறைகென்றனன்மூண்டகாதலான்

972 அக்கடிமணமுரசறைந்தகாலையின்
மைக்கருங்கண்மடமங்கைபங்குறை
முக்கணாயகன்மணமுடித்தல்காண்குவான்
தொக்கனர்யாவருந்துன்னியெங்கணும்

973 கோகனகாசலங்கொண்டகோபுரீ
மாகமூடுறநிமிர்மாடமாளிகை
தோகைகணடமிடுந்துதைந்தசூளிகை
யாகியபந்திசேராவணந்தொறும்

974 வம்புசேரிளமுலைமாதர்மேவிய
செம்பொன்மண்டபத்திருவாயில்சீர்தரப்
பைம்பொனன்மணிகொள்பூம்பந்தர்செய்தன
ரும்பருங்கண்டுதம்முள்ளநாணவே

975 பம்பியெண்டிசாமுகம்பரந்துசென்றிடு
வம்புலாமதுமலர்மாலைசாமரை
நம்புசீர்த்தருப்பணநலங்கொள்பூந்துகில்
கம்பலஞ்சூழ்தரக்கலந்துதூக்கினார்

976 மாடநீடியகொடிமகரதோரணங்
கோடகமுகங்கொளுங்குலையரம்பைசேர்
பாறுடுகோண்மடற்பாளைவிண்டசீர்
வீடரும்பூகதமிகநிறுத்தினார்

977 உலம்பொருகுவவுத்தோளூற்றமைந்தர்பூ
ணலங்கிளர்பொன்மணிநண்ணுநன்மணிக்
குலத்திகழலர்மலர்க்குப்பைவாரியே
யலங்கிடவேதிருவலகிட்டாரரோ

978 சந்தகின்மேவுசெஞ்சாந்தங்குங்கும
மந்தநற்றண்பனிநீரளாவியே
சுந்தரம்பெறத்தறைமெழுகித்தோன்றவே
சிந்தையிற்கொடுதிருக்கோலந்தீட்டினார்

979 விண்டலந்தங்கியவெண்ணிலாக்கதிர்
மண்டலந்தயங்குபாலிகையமைத்தன
ரண்டர்கணுண்டிடவட்டமங்கலங்
கொண்டிடுஞ்சோதியெண்டிசாமுகங்கொள

980 அத்திருவீதியினணிமயிற்புறாத்
தத்துவாம்பரிகரிதானைதேர்கிளி
சித்திரப்பொறியினாற்செய்துதத்தநன்
மெய்த்தொழிலியற்றிடவிதித்திட்டாரரோ

981 பூவிரிசோலையும்பூந்தடங்களு
மேவுதேரூர்மணிவீதியெங்கணு
தேவர்கள்யாவருஞ்சேருங்கற்பகக்
காவுறுநகரெனக்கற்பித்தாரரோ

982 மாதருமைந்தருமன்னுமந்நக
ராதரவான்மிகவணியியற்றலும்
போதுசேர்கின்றபொற்பொகுட்டிற்புங்கவன்
காதல்கூர்மகன்றிருக்கண்பரப்பினான்

983 நன்றிதுநன்றெனநவின்றுநாடியே
யொன்றியவுளத்தினிலுவகைபூத்தனன்
மன்றல்செய்தருந்திருமருகன்காமுறத்
தன்றிருக்கோயிலுந்தயங்கக்கண்டனன்

984 பொற்புறுமாலயன்புரந்தராதிய
ருற்றநன்மாதரோடொல்லையீண்டியே
மற்றுமையவடிருமணத்தைநோக்குவான்
சொற்றிடவொற்றரைத்தூண்டினானரோ

985 துங்கமோடடைந்தனரவர்க்குச்சொற்றலு
மங்கைதன்றிருமணங்காணமாதரோ
டங்கதுபோழ்தினிலரியயன்முதற்
புங்கவர்யாவரும்பொள்ளென்றீண்டினார்

986 ஈண்டுறாப்பண்ணவர்யாருமெய்தவே
நீண்டசெஞ்சடாடவிநிமலன்மேவிய
காண்டகுஞானநற்கற்பின்காரிகை
மாண்டவம்புரிகடிமாடத்தெய்தினார்

987 எய்தியபுங்கவரீண்டிச்சூழ்வரத்
துய்யபொற்பூவினாற்றூவித்துத்திசேர்
பையணிபன்னகாபரணநாயகன்
செய்யதாமரைப்பதஞ்சென்னிசேர்த்தினார்

988 அந்நிலைதன்னிலட்டாங்கமாகவே
பன்னிருகான்முறைபடியிற்றாழ்ந்தெழீஇத்
துன்னியவுளங்களிதூங்கவின்னணந்
தன்னிகரருந்தவத்தக்கன்சொல்லினான்

வேறு

989 ஆதிநாயகியடியனேனிடத்துதித்திடவு
நீதியாலவளின்பநன்மணஞ்செயநினைந்திப்
போதுநீயிவண்போதரப்பொருந்தியபொற்பால்
யாதுநற்றவம் புரிந்ததிவ்விருங்கடிநகரம்

990 என்றுபற்பலவியம்பியேபின்னருமிறைஞ்சித்
துன்றுசீர்த்திருமாலயன்சுரர்புடைநெருங்க
மன்றலாற்றவென்மனையிடைத்திருவுளமகிழ்ந்து
வென்றிமால்விடைதனில்வரல்வேண்டுமென்றிரந்தான்

991 இரந்தகாலையினெம்பிரான்றிருவுளமகிழ்ந்து
வருந்தனீயெனவேதிருவாய்மலர்ந்தருளி
யருங்கலன்கண்மெய்யிலங்குறவருமணமுடிப்பான்
பொருந்திநன்கினிதிருந்தனன்பொருவிடையதன்மேல்

992 மாலயன்புகழ்வாசவன்வானவர்முனிவர்
சீலமார்தருசித்தர்வித்தியாதரரியக்கர்
கோலவட்டவெண்குளிர்மதிகொடுங்கதிர்வெய்யோ
ரேலுமிக்கதாராகணமெண்வகைவசுக்கள்

993 அழிவிலாதவுருத்திரகணத்தவரநேகர்
வழுவிலாதுயர்மந்திரநாயகரேனோர்
கழிவரும்பெருங்காதலிற்கண்டுகண்களித்தார்
குழகன்கொண்டதோரழகியமணத்திருக்கோலம்

994 மைக்கருங்குழன்மங்கையோர்பங்குடைவானோன்
மிக்கவெள்ளிமால்வரைபுரைவிடையினிற்றோன்ற
வக்கணத்தினிலளப்பரிதாமுளக்களிப்பிற்
றக்கனுற்றதுசவுனகசாற்றரிதன்றே

995 அன்னகாலையினரியயனாதியர்போற்றப்
பொன்னினாட்டவர்கற்பகப்பூமழைபொழிய
மன்னுமந்தரமத்திமதாரகமரபாற்
பன்னுநான்மறைதும்புருநாரதர்பாட

996 வண்ணமேவுகுண்டோதரன்வண்குடைநிழற்ற
வண்ணவர்க்கிறையாலவட்டங்கொடுவீசத்
தண்ணருங்கடற்றலைவன்சாந்தாற்றிகாலசைப்பக்
கண்ணுறுங்கலாமதிகதிர்க்கவரிசேர்ந்திரட்ட

997 பம்புமாயிரமம்புலமானுமோர்பானு
கம்பனாயிரமுகத்தினுமாயிரஞ்சங்கந்
தம்பமாமிரண்டாயிரங்கைகொடுசாற்ற
நம்புமாயிரமறையொலிநாற்றிசைநடப்ப

998 சகலலோகமுநிலைபெறுதபநியமேருச்
சிகரமால்வரைதிகழுமொராயிரந்திண்டோண்
மிகுமணித்தொடிக்கரத்தினான்மேவியவாணன்
முகிலெனக்கொடுமுழக்கிடுமுழவொலிமுழங்க

999 பாழிசேர்துடிகாகளம்பரந்தவாய்ப்பதலை
வாழிமாலொருகட்பறைவயிர்சிறுசின்னந்
தாழ்வில்பேரிகைசல்லரியாதிசாரதங்கள்
குழுமாழியோரேழினதோசையிற்றுவைப்ப

1000 ஆதிநாரணனாகியபண்ணவரார்ப்பும்
பூதநற்கணந்துவைத்திடுபொங்கியத்தொலியு
நாதகீதத்தினோதையுநான்மறையொலியுங்
கோதிலண்டகோளகைமுகட்டினிற்குடியேற

1001 கன்னிதன்னொடுந்தவம்புரிகடிமணிமாடந்
தன்னினின்றுமத்தக்கன்மாமனையிடைச்செல்வான்
முன்னவன்றிருமுதற்பெருவாயில்களொருவிப்
பொன்னிநாட்டமர்மாடநீண்மறுகினிற்போந்தான்

1002 போந்தகாலையிற்பொங்கரவல்குலார்செம்பொன்
வாய்ந்தமாடத்துங்கூடத்துமன்னுகோபுரத்து
மேய்ந்திலங்கு செய்குன்றினுமெழின்மறுகெங்குஞ்
சேர்ந்துசெங்கைகள் குவித்தனர்களித்தனர்திளைத்தார்

வேறு

1003 எந்தைபெருமானழகிருந்தபடிகாணூஉச்
சுந்தரமலர்ப்புதியசுண்ணமழைதூவி
யிந்தவுமைதன்னையிவனின்பமணமேய்வான்
வந்தருளுமந்தமணவாளனிவனென்பார்

1004 மைக்கரியகண்டனருண்மாதுதனைவெஃகி
யிக்கடிநகர்த்தெருவெழுந்தருளமேனாண்
மிக்ககமலக்குரிசின்மெய்த்தவமளித்த
தக்கன்மகள்செய்ததவமேதவமதென்பார்

1005 இத்திருநகர்க்கணுமையின்பமணநாடி
யத்தனணைகின்றபரிசாரறியகிற்பார்
சத்தியமெய்ஞ்ஞானசிவசத்திதவமேவும்
பத்தியவள்கைமிசைபலித்ததிஃதென்பார்

1006 உள்ளமிகழ்கூரவருளூத்தமமதாமேல்
வள்ளலெனவந்தமடமங்கைமணவாளற்
கெள்ளரியபூணணியிருங்கலைகளெல்லாங்
கொள்ளுமெனநின்றுசிலர்கொள்ளைகள்கொடுப்பார்

1007 ஐயன்மணிமகுடமிகுமாதவர்கொலென்பார்
செய்யதிருவாயழகுசெம்பவளமென்பார்
துய்யமதுமாலைபுனைதோள்வரைகளென்பார்
மெய்யணிவிழுங்கியதிம்மேவுமணியென்பார்

1008 கண்ணுதலெம்மண்ணமன்மிகுகாமநிகழென்பால்
வண்ணமுறுகாமர்சரமாரிபொழியக்கண்
டெண்ணுலகிலின்பசுகமேவவநுபோக
நண்ணுகிலனென்னவிவனாகரிகமென்பார்

1009 காண்டகையகாமவிரகக் கடல்விழாது
நீண்டதொடைநல்கெனநினைந்தருள்செய்கில்லான்
வேண்டினர்தமக்கவர்கள்வேண்டியவைநல்கு
மாண்டகைதனக்கிஃதடாதெனவுரைப்பார்

1010 தங்குகழைவிற்றனதுசெங்கையினெடுத்துத்
துங்கமதினீலமலரம்பதுதொடுத்தான்
மங்கையைமணம்புணரவந்தருளும்வள்ள
லெங்களகமீதிதினெழுந்தருளுமென்பார்

1011 நந்தமனைநண்ணுமெனநண்ணுகிலனென்பா
ரிந்தவிறைநந்தமனையெய்தரியனென்பார்
பந்தணிவிரற்பரவைபாலிருளின்முன்னாட்
சுந்தரன்விடுப்பவருதூதனிவனென்பார்

1012 கந்தமலரம்பன்விடுதூதுகளகண்டங்
கொந்துலவுசோலைபயில்கூற்றமிதுவென்பார்
மந்தமருதங்கொல்வடவானிலமதென்பா
ரிந்தமிதமொண்டழலிறைக்குமினியென்பார்

1013 நன்றுமிகநன்றுமிகநாடினமரங்காள்
வென்றிவிடையேறியிவன்வீதியிடைபோத
வன்றில்பகையாழிபகையாயர்குழலோடித்
தென்றல்பகையென்றுசிலர் செப்பியிடுகிற்பார்

1014 எண்டரிலிவன்றினமெழிற்பிரமசாரி
யொண்டொடியுமோதினமுமுன்னிலொருகன்னி
பெண்டகைமணம்புணர்தல்பேசினமாங்காள்
கண்டறிகிலாதகலிகாலமிதுவென்பார்

1015 சந்தமறையேபரவுதக்கன்மருகோனென்
றிந்தமறுகூடிருவரின்னுமறியொண்ணா
நந்தியுமைநன்மணநயந்துநமரங்காள்
வந்தருளுகின்றதெனமாயமிஃதென்பார்

1016 சங்கரன்விரும்பிவிடைதன்னிலிவண்மன்னி
மங்கையைமணம்புணரவந்ததெவனென்பார்
சங்கரன்மணம்புணர்தல்சாற்றினமராங்காள்
மங்கையருமைந்தருமணம்புணரவென்பார்

1017 என்றெழுவகைப்பருவமாதர்களியம்பி
நின்றுதொழமாடமலிநீண்மறுகுநீங்கா
வென்றியயன்மால்கைகொடுவெள்விடையிழிந்து
மன்றல்புரிமாடமணிவாயிலிடைவந்தான்

1018 வந்தருளெந்தைமுன்மாதர்நிம்பநற்
பைந்தளிர்செய்யகாற்பாசஞ்சேர்ப்பராற்
சிந்துறுமிலவணந்திரன்பகற்சுடர்
சுந்தரக்கலங்கொடுசுலவிப்போயினார்

1019 காரணகாரியங்கடந்துநின்றதோர்
பூரணன்பதத்தினான்பொழிந்தகீரத்தா
லாரணவல்லிவந்தடிவிளக்கியே
சீரணிதன்றிருமனையிற்சென்றனள்

1020 படர்ந்தமாமணிவெயில்பரப்புஞ்சோதிவா
னடர்ந்துசென்மணட்பமதனினாப்பணோர்
முடங்குவாலுளைமணிமொய்த்திலங்குநன்
மடங்கலாசனத்தினில்வந்துதோன்றினான்

1021 மாலயனாதியவானுளோரெலா
மேலவனேவலின்விருமப்பினோங்குநற்
கோலமாநவமணிகுயிற்றிடுங்கதி
ரேலுமாசனங்களினினிதினேறினார்

1022 பாரினும்விசும்பினும்படர்மணிக்கதிர்
மேருமால்வரையெனவிளங்குமண்டபச்
சீரியவளனெலாந்திருக்கண்சாத்தினா
னாருயிர்க்குயிரதாயமர்ந்தநாயகன்

1023 பன்னருமன்னுயிர்படைக்கும்பண்பினான்
மன்னியநன்பெருவளங்கணல்கலாற்
றென்னுறுதிசாமுகஞ்சேர்ந்திலங்கால
லன்னமண்டபமலரயனையொத்ததே

1024 மேலுறநிமிர்ந்துவான்வெளியடைத்தலாற்
சீலமாம்பொறிமயில்சேர்ந்திலங்கலாற்
கோலமாகியவுருக்கொண்டிலங்கலான்
மாலவன்போன்றதம்மாடமண்டபம்

1025 உவமனற்றியாவருமுரைக்கொணாமையா
லிவையெனவியம்பருமின்பமீகையா
னவையறுசிறப்பினினண்ணியோங்கலாற்
சிவபிரான்போன்றதச்செம்பொன்மாடமே

1026 முத்தொழிலியற்றிடுமூவர்சேர்தலாற்
சத்தியவுலகமுந்தகுவைகுண்டமு
மத்தனதுலகமுமவனிசேர்ந்ததை
யொத்ததம்மணவினைக்குரியமாடமே

1027 அங்கதுகாலையினருமறைக்கொடி
தங்கியமனையிடைத்தானெழுந்தரு
ளெங்கணாயகியுலகெங்குமீன்றருண்
மங்கைதன்செய்கையைவழுத்துவாமரோ

1028 மாயிருஞாலஞ்சேர்மன்னுயிர்க்கெலாந்
தாயெனவந்தருடம்பிராட்டியை
நேயநன்மறைக்கொடிநெருங்கப்புல்லினா
ளாயிழையார்களுமடிவணங்கினார்

1029 மருவியமஞ்சனமாட்டிவார்ந்தநற்
புரிகுழலீரமெய்புலர்த்திப்பொங்கெழி
லரவகலல்குலினம்பொன்மாமணி
யுரியசெம்பட்டினையுவந்துசாத்தினார்

1030 மண்டியவகிற்புகைவாசமூட்டியே
கொண்டல்சூழ்நித்திலக்கொத்துமாலைபொன்
முண்டகக்கரங்களான்முடித்துக்கூந்தலி
னெண்டருஞ்சிகழிகையிலங்கச்சூட்டினார்

1031 தருணமிக்கலிங்கியசந்திரோதயத்
திருமுகமழகுறத்திலகஞ்சேர்த்தினார்
வரிபரந்தொழுகியமதர்நெடுங்கணி
லிருளுமிழஞ்சனமெழுதினாரரோ

1032 இருசுடருதயமால்வரையினேய்ந்தெனக்
கருதருமணிக்குழைகாதுசேர்த்தினார்
திருமிகுமங்கலநாண்டிகழ்ந்திட
மருவுகந்தரமணிமாலைசேர்த்தினார்

1033 நுணுகிடைமுரிதரநுவலருந்திரு
மணமலிகுங்குமமன்னுதேய்வையா
லிணையறவேபுடைத்தெழுந்தவேந்திளந்
துணைமுலையணிபெறத்தொய்யிறீட்டினார்

1034 பழுதறுபசும்பொனிற்பதித்தபான்மைசேர்
கழுவியநன்மணிக்கற்றைத்தூறுசீர்
கெழுதகுவயிரகேயூரங்கேழ்கிள
ரழகியதோள்களிலலங்கல்சேர்த்தினார்

1035 சூழுறுதிசாமுகந்தொறுநிறைந்துறும்
பாழிசேர்மிகுவெயில்பரந்தெறித்திரு
மேழிரண்டென்னவேயிசைக்குநன்மணி
யாழிகளங்குலியணிந்திட்டாரரோ

1036 ஓதிடுமுவமனாலுரைக்கொணாதநற்
காதலிற்கனவளைகவினச்சேர்த்தியே
மேதகுநவமணிவிட்டெறிந்திருஞ்
சோதிசேர்சூடகந்துணைக்கைசேர்த்தினார்

1037 நற்கமலத்திருவழகுநண்ணியே
பொற்பதந்தனிற்றெழில்பொருந்தப்பொற்கொலர்
பற்பகலியற்றுநற்பாடகத்துடன்
செற்றியசில்லரிச்சிலம்புசேர்த்தினார்

1038 உணர்வருந்திருவருளுமையையின்னண
மணியினுக்கணிகலனணிந்ததாமென
மணவணிபுரிதலுமகிழ்ந்துதக்கனேர்
பணிதலுற்றெழுந்தருள்கெனப்பராயினான்

1039 தங்குபுகழ்த்தக்கனிஃதுரைத்திடலுமுடனெழுந்துசததளப்பூஞ்
செங்கமலத்திருக்கோயிற்றிருமாதுங்கலைமாதுஞ்செங்கைதாங்கப்
பொங்கரவவகலல்குற்புலோமசைமுன்போற்றமணம்புணருங்கோல
மங்கலஞ்சேர்மாடத்தின்மன்னுமரசன்னமெனமங்கைசேர்ந்தாள்

1040 சேர்ந்தருளுமுமையாடன்செங்காந்தட்கரங்குவித்துச்சிவபிரான்முன்
போந்தெதிர்நின்றிறைஞ்சிடத்தன்புடையிருத்தியென்றருளிற்புகறலோடு
மார்ந்தசெழும்பல்லியங்களார்கலியினார்ப்பெடுப்பவமரர்போற்ற
வேந்தரியாசனத்தேறியுடனிருந்தாளுலகீன்றவெம்பிராட்டி

1041 எங்கள்பெருமாட்டியுடனெம்பெருமானெழுந்தருளியிருப்பத்தக்கன்
றுங்கமறைக்கொடிவளைக்கைத்தூமலர்மஞ்சனமாதிசுமந்துநிற்ப
வங்கணன்றனடியிணையிலருக்கியமீந்தருச்சனைசெய்தான்பால்கொண்டு
பங்கயப்பொற்பதம்விளக்கிப்பைந்தொடியையளித்திடுவான்பரிவுகூர்ந்தே

1042 எம்மையினிதாண்டருளென்றியாவருமேபணிந்தேத்துமெம்மான்றன்னை
நம்மருகனென்றெண்ணிநாயகியைநிற்களித்தேனானேயென்னா
வெம்முனைசேர்வேனெடுங்கண்விளங்கிழைசெங்காந்தளங்கைதன்னைமிக்க
செம்மணிப்பொற்குண்டிகையிற்றிகழ்திருமஞ்சனமரன்றன்செங்கையீந்தான்

1043 அந்நிலையிலயனெடுமாலமரர்முனிவரரிறைஞ்சியார்வங்கூர்ந்தார்
பன்னுமரம்பையர்கானம்பாடிநடமாடினர்முன்பணிந்துபாங்காற்
றுன்றுதிரைக்கடலெனவேசொல்லரியபல்லியங்கடுவைத்தார்பூதர்
தன்னருளைக்கைகலந்துதனதுதிருவுளமகிழ்ந்தான்றாணுவானோன்

1044 மண்டபநின்றிலங்கவட்டமங்கலமும்பாலிகையுமரபிற்றந்தாங்
கண்டர்மனங்கண்டுவப்பவருத்திமிகுந்தருப்பைமலராச்சியத்தாற்
குண்டமதிற்கொழுந்தழன்மேற்கொழுந்துவிடத்தானினைந்துகூட்டிமூட்டிப்
பண்டருநான்மறைமுறையிற்பரிவினெரிவளர்த்தனன்பல்லுயிர்படைப்போன்

1045 நாலுமுகனின்பமணச்சடங்குமுடித்திடலும்மேநஞ்சமுண்டு
நீல்மணியெனமிடற்றுநீங்காமற்பழுத்தோங்குநிமலமூர்த்தி
மாலயனேமுதலானவானவர்சூழ்ந்திடத்தக்கன்மருகனானோன்
கோலமதனைக்காய்ந்தகுறிக்கரியதனதுதிருக்கோலங்கொண்டான்

வேறு

1046 வானோர்பெருமான்மறைந்திடலும்வண்டுறங்குந்
தேனார்ந்தகஞ்சத்திருவாணிதம்முழைச்சேர்ந்
தானாமணியிழந்தவவ்வரவமேயென்னக்
கானார்ந்தகூந்தற்கவுரியிவைகட்டுரைப்பாள்

1047 பன்னாளருந்தவங்கள்பண்ணியவென்பாக்கியத்தா
லென்னாயகன்றானேயென்பாலெழுந்தருளி
நன்னாளெனவுவந்துநன்மணமுஞ்செய்தருளி
யிந்நாண்மறைந்ததியானேதென்றறியேனே

1048 இன்னமும்யான்காண்பேனோவெம்மான்றனதுதிருச்
சென்னியின்மேற்சேர்ந்திலங்குஞ்செம்பொன்மணிமுடியும்
பன்னுமறைபாடும்பவளத்திருவாயு
முந்நூன்மணிமார்புமூன்றுநயனங்களுமே

1049 கண்ணாலினுமொருகாற்கண்டுகளிகூர்வதெந்நாள்
விண்ணார்நதிமிலைச்சுமிக்கபவளச்சடையு
மண்ணாடையானமகராலயத்தெழுந்த
வுண்ணாதநஞ்சதனையுண்டிருண்டகண்டமுமே

1050 எந்தநாட்கண்டிங்கினியானிறைஞ்சிடுகேன்
சுந்தரஞ்சேருங்கடகத்தோள்களொருநான்கும்
வெந்ததிருநீறணிந்தமேனியுந்தன்மெய்யடியார்
பந்தமறுத்தாண்டருளும்பாதாரவிந்தமுமே

1051 இங்கினியானென்றோவிறைஞ்சப்பெறுவேனான்
சங்கக்குழைதான்றயங்குகின்றவார்காதுந்
திங்கள்விளங்குந்திருமுகத்தின்சேவையுமேற்
பொங்கிவழிகாதற்பொருந்துமணக்கோலமுமே

வேறு

1052 என்றென்றுபினுமிறைவாவெனுமா
லொன்றும்மினியானுரையேனெனுமாற்
பின்றங்குசடைப்பெருமானருடா
னன்றிங்கிதெனாநகைசெய்திடுமால்

1053 பொன்றோய்சடிலப்புனிதன்மறையுஞ்
சென்றோங்குபுகழ்த்திசைகைதொழுமா
லொன்றோவுரையாமலொளித்தனையா
னன்றோசிவதாநடுவோவெனுமால்

1054 இருளாணவநீங்கிடவேயெனையோர்
பொருளாகமனைப்புகுந்தாண்டுமெனக்
கருளாதெவனோவறியேனெனுமான்
மருளாதினமும்வருமோவெனுமால்

வேறு

1055 என்றுபன்னியிரங்கும்விழுமெழு
நின்றசோர்ந்திடுநெட்டுயிர்ப்பெய்திடுங்
கன்றுநெஞ்சகங்காந்தளங்கையினா
லொன்றுமாநிலத்துற்றிடவெற்றிடும்

1056 தாங்குஞ்சூடகத்தாமரைக்கைகளாற்
பூங்கருங்குழன்மாலையைப்போக்கிடுங்
கோங்கரும்பன்னகொங்கைமுகட்டினி
லோங்கியேபின்னொலித்திடவெற்றிடும்

1057 காசிலாதகதிர்மணிமண்டபத்
தாசைபோலகலல்குனன்மாதரா
ரேசவேமணஞ்செய்தென்பயனெனும்
பேசில்யான்பெண்பிறந்தென்பயனெனும்

1058 செல்லும்வானிற்றிசைதனைநோக்குமென்
சொல்லுகேனென்றுதுண்ணெனச்சோர்ந்திடும்
வல்லுலாவும்வனமுலைமுன்றிலிற்
கல்லுமுத்தெனக்கண்புனல்கான்றிடும்

1059 இன்னதன்மையையெண்ணியிலங்கிழை
மன்னுநாதன்மறைக்கொடிமாமல
ரன்னமன்னவளன்னையைவாழ்த்தியே
துன்னுகின்றனர்சூழ்ந்திவைசொல்லுவார்

1060 மாதராய்நின்மனந்தளரற்கநற்
காதலாலுனைக்கண்ணுதற்சாமியிப்
போதுவந்துபொருந்துவனன்கெனா
வாதரத்துடனங்கவர்தேற்றினார்

1061 தேற்றிப்பின்னருந்தேமொழிமாதரா
ராற்றவேநின்னருமணக்கோலத்தை
நோற்றநோன்பினுவலருமப்பலப்
பேற்றினாற்றொழப்பெற்றனமியாமென்றார்

1062 என்றகாலையினெம்பெருமாட்டிதான்
றுன்றுமாதர்குழுவைத்துறந்துநீண்
மன்றல்சேர்கடிமாத்தினெய்தியே
யொன்றுமாதவமுற்றிருந்தாளரோ

1063 உற்றவேலையினோதிருமாலயன்
மற்றியாருமனந்தளர்வெய்தியே
கற்றைவார்சடைக்கண்ணுதலண்ணறன்
பெற்றிநாடரிதென்றென்றுபேசினார்

வேறு

1064 எம்பிரான்மறைந்தேகலுமெண்கணன்றருஞ்சேய்
வெம்பியுள்ளம்வெகுண்டுமெய்வியர்த்தறவெள்கித்
தம்பமாகிய தடக்கையொன்றோடொன்றுதாக்கி
யம்புயக்கைநாசாக்கிரத்தமைத்திவையறைவான்

1065 என்னருந்தவப்பேற்றினாலீன்றமெய்ஞ்ஞானக்
கன்னிபாகன்வான்கங்கைமாநதியலையெறிக்கும்
பின்னறாழ்ந்திடப்பேயுடனாடியபித்தன்
நன்னர்நண்புணர்கின்றதுநன்றெனநக்கான்

1066 ஈதியாலெனவென்மகடனையிவண்மேவ
வேதநூனெறிமேவியவிண்ணவர்வியப்பக்
காதலாலருங்கடிமணமுடித்தனன்யானிப்
போதிவன்புகல்கணவனென்றறிந்திலன்போலாம்

1067 தெரியின்யானினிச்செப்புவதென்னையோவண்ணங்
கரியமாலயன்கண்ணுதலாகியகள்வன்
பெரியர்யாவரேயென்னினும்பிழைத்திடவெண்ணி
லரியதோர்தலைவிதியினைவிலக்கிடலாமோ

1068 ஆதலாலிஃதென்றலைவிதியிதுவாயி
னேதுசெய்குதிர்நீவிரென்றியம்பிமான்முதலோர்ப்
போதுநும்பதியெனவவர்தமையிடம்போக்கி
நாதனார்செயனாடியேநண்ணிடுநாளில்

1069 பூதிசாதனமுந்திரிசூலமும்பொருதுங்
காதில்வெண்குழையுங்கரகபாலமுஞ்செய்ய
பாததாமரைப்பரிபுரமும்படர்சடையு
மாதுகாதலோர்தாபதன்போலிறைவந்தான்

1070 வந்ததாபதன்றன்னெதிர்வந்துவந்தனைசெய்
தெந்தைதன்னடியானெனவேத்தலுமிரங்கிக்
கந்தவார்குழற்காரிகைகண்டுகண்களிப்பச்
சுந்தரங்கொள்வெள்விடையினிற்றோன்றினன்றொல்லோன்

1071 தோன்றலாங்கெதிர்தோன்றலுஞ்சுந்தரிதுணுக்குற்
றான்றவன்புடனளிக்குலங்களிக்குமம்புயத்தா
ணான்றபூங்கழறைவரநன்கினிதிறைஞ்சி
யேன்றநற்றுதியியம்பிநீயிரங்கெனவிரந்தாள்

1072 இரந்தகாலையினெம்பெருமாட்டியையெங்கோன்
வருந்தனீயெனவேதிருவாய்மலர்ந்தருளி
விரும்பியேபொருவெள்விடைமீதுடனிருத்திப்
புரந்தராதியர்போற்றிடக்கயிலையிற்போந்தான்

1073 போந்தகாலையிற்பொருந்தியசேடியர்விரைந்து
சார்ந்துதக்கனைத்தாழ்ந்துநீதந்தருண்மருந்தை
யேந்திடும்புனற்சடிலன்வந்தெழில்விடையேற்றிக்
காந்துவெண்மதிக்கதிர்விடுங்கயிலையிற்படர்ந்தான்

1074 என்றவேலையினிறைமகனெம்பிரான்றன்னை
யொன்றுசீற்றமேற்கொண்டுநிந்தனைசெய்யவும்பர்
கன்றுமான்மழுவேந்தியகண்ணுதற்பெருமான்
மன்றலங்கழன்மதித்திடாதுரைத்திடல்வழக்கோ

1075 ஆதலாலரனம்புயமருவியசெம்பொற்
பாதமீதினிற்பரிவொடுபணிவதேபாங்காற்
போதியென்றுபுத்தேளிர்கள்போற்றிசெய்திசைப்ப
வோதுநீள்விசும்பிடறிடுங்கயிலையையுற்றான்

1076 உற்றவானதியுவட்டெடுத்தெழுந்தலைகொழிக்குங்
கற்றையஞ்சடைக்கண்ணுதற்சாமிதன்கோயின்
முற்றுமாமணியெறித்திடுமுதற்பெருவாயிற்
பொற்பினேறினன்போகலையென்றனர்பூதர்

1077 பூதர்நீவிர்தாம்போகலையென்றதென்புவிமே
லோதரும்பெருந்தவம்புரிந்துவந்தியானீன்ற
மாதராண்மணமருவியவொருதிருமருகன்
காதலாற்கலந்திருத்தல்யான்காணியவந்தேன்

1078 என்றுதக்கனீதியம்பலுஞ்சாரதர்வெகுண்டே
யுன்றன்மாமுகநோக்கினுமுற்றிடுநிரயம்
பின்றயங்குசெஞ்சடிலனைப்பேசிமுனிந்தை
நன்றுகாணியவந்ததுநவின்றிடினகையே

1079 அன்றியெந்தைநின்மருகனாயம்பிகைமகவா
யுன்றனாணையிலுலகெலாமொருதனிச்செங்கோ
லென்றுமோங்கிடவீந்ததையயர்த்திநீதக்க
கொன்றுநன்றியைத்தின்றுழல்கூற்றனேகொடியாய்

1080 இன்னுமொன்றுநன்கியம்புவங்கேட்டியாலெங்கோன்
பொன்னடிக்கமலந்தொழப்போதுவையாயின்
மன்னுகிற்றியாலன்றெனில்வந்திடும்வழியே
நின்றனக்கினிதேகெனநிகழ்த்தினரன்றே

1081 அந்தவாசகங்கேட்டலுமக்கொடுந்தக்கன்
கந்தமாமலரோன்முதற்கடவுளர்யாரும்
வந்தெனாணையின்வழிபிழைக்கின்றிலரதனா
லெந்தஞான்றினுமிறைவனையிறைஞ்சலன்யானே

1082 திருமணிப்பெருங்கோயினீசெல்லலென்றதுதா
னுரியநற்றவத்தியான்றருமொருமடக்கொடியு
மருவுமென்றிருமருகனும்வழங்கியமாற்றங்
கருதினும்முறையன்றிதுவென்றுகட்டுரைப்பான்

1083 பரவுகின்றநும்பரஞ்சுடர்தன்னையாவருமே
கருதிடாவகைகாண்குவனன்னதுகாண்டிர்
பொருவில்செய்கையான்புகழ்பெறப்புரிகுவலென்னா;
திருகுசிந்தையாலினையனசெப்புதலுற்றான்

1084 வீடருங்கொடும்பவந்தொறும்விஞ்சியசெம்பொற்
பாடகந்தரும்பழகியதீவினைபற்றிப்
பீடுறாவகைபிடர்பிடித்துந்திடப்பெருஞ்சீர்த்
தேடரும்புகழ்த்தக்கமாபுரத்தினைச்சேர்ந்தான்

1085 சேர்ந்துபுங்கவர்க்குரைசெய்வான்றிருந்துமோவியரு
மோர்ந்துநல்லெழிலெழுதொணாவொண்டொடிதன்னோ
டேந்துபுன்சடையிலங்கியவிறைசெயன்முறையாற்
சார்ந்துவாயினோர்சாரதர்தாந்தடைசெய்தார்

1086 ஈதலாதுபின்னியம்பியதிசைத்திடவற்றோ
வாதலாலின்றுபற்றிநீரங்கணனம்பொற்
பாததாமரைபணிவதுதவிர்குதிரென்னாப்
போதுகென்னலும்புங்கவர்தம்பதிபுக்கார்

வேறு

1087 அன்பருளந்தனதாயகோயிலாமங்கணன்மங்கையையார்வமாகவே
யின்பமணம்புணர்காதையோதுவோரின்புடனன்செவியேறவேய்குவோர்
வன்பவவெந்துயர்யாவுமாறியேமங்கலவங்கனையார்களோடுதாந்
தென்பயிலிந்திரபோகமேவியேசெஞ்சடிலன்பதமீதுசேர்குவார்

திருக்கலியாணச்சருக்கமுற்றியது

ஆகசெய்யுள் 1087

*****

## பதின்மூன்றாவது
## தக்கன் வேள்வியழித்தசருக்கம்

1088 மட்டவிழ்சரோருகனன்மைந்தன்மகிழ்கூர்ந்தாங்
கிட்டிபுரிகாதையையிசைப்பவதுகேண்மோ
கட்டழகுசேர்சவுனகத்தலைவவென்னாச்
சிட்டர்புகழ்சூதமுனிசெப்பியிடுகிற்பான்

1089 மாதவன்விரிஞ்சன்மிகுவானவர்கண்மாத
ரேதமறுமாதவர்களெண்டிசைபுரப்போ
ராதியர்கள் சூழநுதலங்கணனை நீத்தே
மேதகையதக்கனொருவேள்விசெயலுற்றான்

1090 வேழ்விதனை நன்மகதவீணைமுனிகாணூஉத்
தாழ்விலருணாடுமுயர்சத்தியதவத்தேர்
வாழ்வுறுபெருங்கயிலைமால்வரையினண்ணிக்
காழ்தருகளத்தனடிகைதொழுதுநின்றான்

1091 நின்றுதொழுநாரதனை நின்மலனுவந்தே
யின்றிவணடைந்தபரிசென்னவுரையென்னா
மன்றன்மலரோன்முதலவானவர்கள்சூழ
வென்றிகொடுதக்கனொருவேள்விபுரிகின்றான்

1092 என்னலுமகிழ்ந்திறையிடத்தினிலமர்ந்த
மின்னனையநுண்ணிடைவிளங்கிழையெழுந்து
தன்னிகரிலெந்தையிருதாடொழுதுபோற்றி
மன்னியதொர்செம்பவளவாயினுரைசெய்வாள்

1093 எந்தையிதுகேண்மதியியம்பலுடையேனென்
றந்தைபுரிவேள்விதிகழ்சாலையடியேற்காச்
சிந்தைமுனியாதுகொடுசென்றவியருந்தி
வந்தருள்புரிந்திடும்வரந்தருதல்வேண்டும்

1094 அல்லதடியேற்குநினதானனமலர்ந்தே
வல்லைவருகென்னவிடைவாய்மையொடுமீதி
செல்லலெனவேயருள் செய்தேவவெனவிமவான்
நல்வினையைநாடிவிடைநாதனுரைசெய்தான்

1095 உரைத்தருளுவொல்லையினுவந்துவிடைகொண்டே
விருப்பினோர்விமானமதின்மேவியருணந்தி
யருட்டருகணங்களொடுமக்கொடியதக்கன்
றருக்கினுடன்வேள்விபுரிசாலையிடைசார்ந்தாள்

1096 சார்ந்துயர்விமானமதுதன்னைமுனிழிந்து
சேர்ந்துரியதக்கனெதிர்செல்லவவண்வல்லே
வார்ந்தகுழன்மாதுதனைமற்றவன்வெகுண்டே
நேர்ந்தபலநிந்தனைநிகழ்த்தியிடலுற்றான்

1097 நின்னருமைபூண்டகணவன்னிலைமையென்னோ
வுன்னிலவன்மன்னிடவொரூரதுவுமுண்டோ
பின்னரதுநிற்கவொருபேர்பரவவுண்டோ
வின்னனிவனென்றுலகியம்பிடவுமுண்டோ

1098 மாசுணமருந்துமொருவாயுமலைவுற்றே
வீசியலையாழியிடுமேருமலைவில்லா
மூசுதலையோடுகலனூர்கொள்பலியாலப்
போசனமிலங்கிடமெய்பூசுதல்வெணீறே

1099 பன்னகமிருந்திலகுபைம்பொனணியார்
முன்னிலொருகோவணமுடுப்பதுபுலித்தோ
றன்னிகர்பொருங்கரடதந்தியுரிபோர்வை
சென்னிதிகழ்கின்றதுசிறந்ததலையோடே

1100 கூறரியவென்பினோடுகொக்கிறகுமக்கு
மாறுபடுவன்றிறல்வராகவளைகோடு
மூறுபடுமாமைமுதுகோடுமுறுசெஞ்சேல்
வேறுபடுகண்ணுமலர்வெள்ளர்க்கமாலை

1101 காதணிகலன்சுரிமுகங்கடகமார
மேதமறவேதினமுமேறுதல்வெளேறே
யாதரவினின்றுநடமாடுவதுகாட்டிற்
கோதின்மணிமேவுதிருக்கோயில்சுடுகாடே

1102 ஒள்ளிதெனவேதினமுமொண்டொடிநின்னோடும்
வெள்ளிமலையென்றதனின்மேவியிடமேனா
ளெள்ளருமிலங்கையிலிராவணனிராதே
யள்ளியகழ்கின்றதனையாருமறியாரோ

1103 இந்தமுறைதன்னையிறையும்மறிகிலாதே
சந்தமறைநூலின்வழிதந்தநின்மணந்தான்
முந்தவிதிவந்திதுமுடிந்ததவனைத்தா
னந்தமருகோனெனவுநாணியிடுமுள்ளம்

1104 என்றுபலநிந்தனையியம்பினனிசைப்பான்
வென்றிதருகின்றபலவிண்ணவர்கள்காண
மன்றல்செயவந்தெனதுமாமருகனாகி
யன்றவனெடுத்தபரிசார்புரியவல்லார்

1105 தக்கவுலகங்களிடைசார்ந்தபலயோனி
தொக்கவுயிர்கட்கருள்செய்தோன்றலினியானென்
றக்கொடியதக்கனுமையாளையும்வெகுண்டே
மிக்ககயிலைக்கிரியின்மீண்டுபடர்கென்றான்

1106 அங்கணுமைமங்கைதிகழுங்கணனையந்தோ
பங்கமுறநிந்தனைபகர்ந்தவதனாலே
வெங்கனல்விளங்கிடுமிவ்வேள்வியுமழிந்து
தங்கியிடுநின்றலைதணந்திடுகவென்றே

1107 வெங்கனல்சொரிந்திடும்விலோசனம்விளங்கு
நங்கள்பெருமானருகுநண்ணிடவுமஞ்சித்
தங்குமனல்வேள்விபுரிசாலைநடுமூல
வங்கியையெழுப்பியதினம்பிகைகுளித்தாள்

1108 ஏர்கொளிமவானுமையெனக்குமகவாகென்
றோர்பரனைநோக்கிமுனுழந்ததவம்வந்து
நேர்படலும்வேள்வியிடைநீடருளின்வந்து
பேர்பரவுமந்தவொருபெண்கொடிபிறந்தாள்

வேறு

1109 ஆங்கதன்பின்னரருங்கணத்தலைவனையகோவென்றெடுத்தரற்று
மேங்குநின்றிரங்கும்விழுமெழும்வாயினெற்றிடுமெம்பிராற்குரைக்கும்
பாங்கெதுவென்னப்பரதவித்துழலும்படர்புவிசென்னிமேற்படுத்துந்
தீங்குறுகனற்கண்சென்றுகாணாதுதிகைத்திடுமெய்யணிசிதைக்கும்

1110 ஈங்கினியாதுசெய்குவனென்னவெண்ணியேயெம்பிரான்கயிலைப்
பாங்கரிற்படர்ந்துபவளவார்சடையிற்பகீரதிமிலைச்சியபரமற்
காங்கனஞ்சென்றேயறைகுவமென்னாவந்தனனந்தியங்கணத்தோர்
தீங்கெடுத்தியம்பச்சிறிதறியார்போற்சிவபிரான்றிருச்செவிசார்த்தி

1111 அண்டகோளகைக்கீழமர்ந்தினிதென்றுமருந்திறல்வீரர்கள்விரும்ப
மண்டியகாதல்கொண்டருள்புரியும்வயமிகுவீரபத்திரனைக்
கண்டனன்மனத்திற்கணத்தினிலந்தக்ககனகூடத்தினின்றிழிந்த
முண்டமத்திமைசேர்கண்டனில்வந்துமுளைத்தனன்மூண்டெழுசினத்தால்

1112 எரிந்தகுஞ்சியுமூன்றெரிசொரிகண்ணுமிருசிறுபிறைதருமெயிறுந்
திருந்துசெம்மதியந்திகழ்திருமுகமுஞ்சேர்ந்தவிற்புருரமுங்காதிற்
பொருந்துகுண்டலமும்புகழ்திருமார்பிற்பொலங்கொளாபரணநின்றிலங்கத்
திரண்டதிண்டோளிற்செங்கண்வாளரவகங்கணஞ்செறிந்துடன்விளங்க

1113 விரவியபவங்கள்வேரறுத்திடுநல்வெண்டிருநீறுமெய்விளங்கக்
கருதரிதாயதிகழரையதனிற்கட்டியகச்சுடைவயங்க
மருவியவுதரபந்தனமானவாளராமணியொளிவயங்கப்
பொருவருகிரணபரிபுரமிலங்குபொற்பதாம்புயங்கவின்பொழிய

1114 மாமுகிலெனவேமன்னுமோர்செங்கைமணிநெடுநாவினையசைப்ப
வேமமாகியவோரெழிற்கரநின்றேயிடிபடுதுடியதுமுழக்கத்
தோமறுமின்போற்றுணைக்கரகமலஞ்சூலமேல்கொண்டதுசுலாவத்
தேமலர்வாசந்தினந்தொறும்வீசுஞ்சேவடிதொழுதிதுபுகல்வான்

1115 புண்ணியபுராணபூரணஞானபுனிதபொற்பொதுவினின்றாடுங்
கண்ணுதற்பரமகயிலைநாயகநீள்கடல்விடமுண்டிருள்கண்ட
வண்ணநல்லரவிந்தாசனன்றனதுமருவியசிரகரகபால
வுண்ணினைந்ததனையுரைத்திநீயென்னவும்பர்தம்பிரானிஃதுரைப்பான்

1116 நேரரிதாயவீரநீகேட்டிநிந்தனைநந்தமைநிகழ்த்திச்
சீருறுகமலத்திசைமுகன்றந்தசிறுவிதிவேள்விசெய்கின்றான்
பாரிடப்பெரியபடையுடனெருங்கிப்பகர்ந்திடுமவன்றனைமருவி
யேருறுமவியையீகெனக்கேட்டியீந்திடினீண்டடைகுதியால்

1117 அருத்தியினந்தவவியளித்திலனேலம்புயத்தவிசினெஞ்ஞான்றும்
விருப்புறுமயன்மால்விண்ணவராதிமேவியபண்ணவர்வெருவத்
தருக்குறுதக்கன்சிரத்தினையறுத்துத்தக்கவவ்வேள்வியைத்தகர்த்தி
பொருக்கெனயாமும்போதுதுமென்றான்பொடிபடப்புரங்கண்மூன்றெரித்தோன்

1118 தூமமார்வடவைத்தூயவெங்கனல்போற்றொடர்ந்தெரிகுஞ்சியுந்துண்ட
மாமதியிரண்டுமன்னியதென்னவளைந்தபேரெயிறுவாய்வயங்கக்
காமருசிறப்பிற்கண்கள்செங்குருதிகான்றிடக்ககனகூடத்திற்
றாமநீள்சென்னிதடவிடுங்கொடியசாரதர்சந்ததம்பரவ

1119 அண்டமானவற்றையணித்துணைக்கரத்தினங்குலியொன்றினாற்றாங்கி
யுண்டிடவேண்டினொருகணமதனினுண்டுமிழ்தரவுறுவலியு
மண்டியபுகையின்வளர்ந்தெழுசிகையும்வானிளம்பிறையிரண்டெனக்
கொண்டபேரெயிறுங்குருதிசோர்கணுஞ்சேர்குறட்சிறுபூதங்கள்பாட

1120 துங்கமிக்குறச்சூழ்ந்தாழ்ந்தகண்களுஞ்சீர்சொற்றரிதாயசிற்றரையுந்
தங்கிமிக்கொடுங்குங்கபோலமுநீள்கந்தரமுமேல்கிளர்ந்தறவெறிந்த
பங்கியுமுலர்ந்தபண்டியுமிலங்கப்பதங்களைமாறியேநீண்ட
வங்கைகள்கொட்டியலமரலுற்றேயலகைகளவைதிரண்டாட

1121 சீரணிவாசந்திகழ்ந்தசெங்கமலத்திருமுலைத்தடங்களிற்றிளைக்கு
நாரணரிறந்தநாட்கவர்கின்றநன்னிலாக்கற்றைசேர்ந்தரிக்கும்
பூரணமதிபோற்பொருந்தும்வெண்சங்கிற்பொருவருவிந்துநாதத்தின்
சார்தருமோசைதழங்கிடவந்தச்சாரதர்தமிற்சிலர்தொனிப்ப

1122 பொங்கியவாசந்துதைந்தளிமுரன்றுபுதுமதுவுண்டுதேக்கிடும்பூம்
பங்கயத்தவிசிற்பண்ணவரனேகர்பண்டுயிர்பிரிந்திடவவர்சேர்
செங்கமலத்தாட்டிகழ்சிறுசின்னஞ்சேர்ந்தகைச்சிறுகுறட்பூத
மங்கணனுதற்சேர்துங்கவீரன்வந்தானெனவேபணிமாற

1123 அண்டர்நாயகன்றனனுக்கிரகத்தாலலகிலண்டங்களுமுதவிப்
பண்டருவேதப்பாடலோர்நான்கும்படர்திசாமுகத்தினும்பயிலும்
புண்டரீகப்பொற்பொகுட்டில்வீற்றிருக்கும்புங்கவரனேகர்பொன்றிடச்சேர்
குண்டிகையனந்தங்குறட்சிறுபூதங்கொண்டுகைக்குடமுழாமுழக்க

1124 இன்னபல்லியங்கடுவைத்திடவுயர்வானெழுமுகடிடிபடச்சேடன்
மன்னியசென்னிமருவியவுலகும்வானமுமிகநடுநடுங்கப்
பன்னுமேழ்கடலிதென்னவேசூழ்ந்தபாரிடப்படையொடுபடர்ந்தான்
கொன்னுருவீரர்கொடியவாருயிரைக்கூற்றினுக்கிரையிடும்வீரன்

1125 மன்னியகரிமேல்வாலுளைமடங்கன்மறங்கொடுசெல்வதுபோன்று
முன்னிமான்றன்னையுறுவலியொழிப்பானோர்வயப்புலியுறல்போன்றும்
பன்னகமதனைப்பரிகுவானினைந்துபன்னகவயிரிசென்றெனவுந்
தன்னிகர்வீரபத்திரன்வேள்விதந்திடுந்தக்கனைச்சார்ந்தான்

வேறு

1126 சார்ந்தகாலையிற்றக்கன்முன்
சேர்ந்துளோர்திடுக்குற்றனர்
வாய்ந்தமாதவர்வாழ்தினா
ரேய்ந்தவானவரேங்கினார்

1127 கந்தமாமலர்க்கடவுள்சேய்
முந்துறக்கடிதுமொழிகுவா
னிந்தமாநிலத்தியாரைநீ
வந்ததென்னுரைவழங்கெனா

1128 வெள்ளநீர்பொதிவேணிசேர்
வள்ளறன்றிருமைந்தன்யா
னெள்ளருங்கனலவியினைக்
கொள்ளவென்றுநிற்குறுகினேன்

1129 ஆதலாலவிப்பாகநீ
நாதனுக்கிவணல்கெனா
வோதுமற்றவியுதவிலன்
போதியென்றுபுகன்றனன்

1130 என்றவேலையிலெம்பிரான்
வன்றிறற்றிருமாயனைத்
தன்றடக்கைசேர்தண்டினாற்
பொன்றினானெனப்புடைத்தனன்

1131 அலங்குநன்சிகையவிழமெய்
கலங்கிவாய்குருதிகக்கவே
நலங்கொள்வேதனொருநான்முகங்
குலுங்கிடக்கைகொடுகுட்டினான்

1132 மயலுழந்துநல்வாசவன்
குயிலதாமுருக்கொண்டுவான்
சயமொடேகலுந்தடிந்தனன்
பயிலுந்தனகைவாட்படையினால்

1133 நாற்பெருந்திசையுநாடியே
யேற்றதிக்கிதெனவேகலுஞ்
சீற்றமோடுதலைசிந்திவெங்
கூற்றனாருயிர்குடித்தனன்

1134 பொங்கும்வெங்கதிர்பொருந்துபற்
றங்குகைகொடுதகர்த்தனன்
றிங்கண்மாமுகந்தேய்த்தனன்
பங்கயந்திகழ்பதத்தினால்

1135 நந்துவாணிதிரணகிலமோ
டந்தநாசிகையரிந்தனன்
செந்தழற்கடவுள்செங்கைநா
வந்துவல்லையினின்மாற்றினான்

1136 மைக்கருங்கணவன்மனைவிழுக்
கக்கணத்தினிலரிந்தனன்
சிக்கெனச்சிகைபிடித்துடன்
றக்கனைத்தலையறுத்தனன்

1137 ஆயகாலையத்தலையைவெந்
தீயருந்திடச்சிறுவரை
யேயவேள்வியினெய்தினோர்
மேயவாருயிர்வீட்டினான்

1138 வீடினோர்குருதிவெள்ளநீர்
கூடியுண்டுபினர்குதுகுதுத்
தாடுகின்றனவலகைகள்
பாடுகின்றனபாரிடம்

1139 நாரணன்னயனந்துநாட்
சோரியுண்டுதுலைத்தல்போ
லாரவுண்டனமின்றுநல்
வீரவென்றுவிளம்புமால்

1140 கூடுசோரிகுளித்தலான்
மாடுயூபமரந்திகழ்
காடுநின்றுகவந்தநின்
றாடுகின்றவனந்தமே

1141 ஆயகாலையினண்ணலை
வீயும்விண்ணவருயிர்பெற
நேயமோடருணியெனா
மாயன்வந்துவணங்கினான்

வேறு

1142 தந்தையுந்தாயுந்தன்சொலின்வாராத்தனயரைத்தண்டமாற்றுதல்போற்
சிந்தையாவருமேதிருந்திடமுனிந்தேதிறலுறும்வீரனாற்றீர்த்தாங்
கந்தவேலையினிலரியயன்முதலோர்க்கறிவுறுத்தருண்மிகப்புரிவான்
வந்துதோன்றினனோர்மழவிடைமீதில்வார்ந்தசெம்மகுடவேணியனே

1143 வானதிமுடித்தவானவன்விடைமேல்வந்தெதிர்தோன்றமாலயன்செந்
தேனலம்பியவஞ்சிறையளிமுரலுஞ்செம்மலர்க்கழறொழுதெந்தா
யானநன்மைந்தரளித்தனர்தமக்கேயவமதிபுரியினுமன்னோர்
தானருள்வதுபோற்றமியர்கட்களித்ததண்ணளியாதெனவுரைக்கேம்

1144 என்னலுமிரங்கியெம்பிரான்மகிழ்கூர்ந்திந்திராதியர்தமையின்னே
நின்னரும்பண்பானிலைபெறத்தருதிநீயெனநிகழ்த்திடவீரன்
சின்மயனருளாற்றேவரைத்தாலுந்திருமலர்த்திசைமுகப்பெருமான்
றன்னிகர்தலைவவென்னொருசேயைத்தந்தருளென்று நேர்ந்திரந்தான்

1145 இரந்திடுமமையத்தெம்பிரான்வீரவின்னதும்புரிதிநீயென்னாக்
கரந்தலைக்கொண்டுவணங்கியேபானுகம்பனைத்தக்கனற்கவந்தம்
விரைந்துநீகொணர்தியென்னலுமந்தமேதகுபூதமாங்குய்ப்பப்
புரிந்தவவ்வேள்விக்கரிந்தமைத்தலையைப்பொருத்தினனெழுகெனவுரைத்தான்

1146 உரைத்தலுமுயிர்பெற்றுறங்கினன்போலவொல்லையினெழுந்துளநாணித்
தரைத்தலமதனைநோக்கிமுன்னின்றதகர்முகத்தக்கனைமேரு
வரைத்தனுவெடுத்துமால்கணைதொடுத்துமருவியதிரிபுரமெரியச்
சிரித்தருள்புரிந்தசிவபிரானுனதுசிந்தனைதியங்கலையென்றான்

1147 என்றலுங்கமலதத்தெழில்கவர்கழற்கீழிரந்திரந்துருகிநின்றிறைஞ்சி
யொன்றுநின்றன்மையுணர்ந்திடாதயன்மாலும்பரைநம்பியேநம்ப
மன்றல்செய்கின்றமருகனென்றுன்னைமனனிடைமதித்தனனந்தோ
பின்றிகழ்சடிலப்பெருமநாயடியேன்பிழைத்ததுபொறுத்தருளென்றான்

1148 ஆங்கதுகாலையரியயன்முதலோர்க்கங்கணனருள்செய்வானெம்மை
யீங்குநீரிகழ்ந்ததிசைக்கின்முன்விதியேயிரங்கலிர்நீவிர்நும்பதத்திற்
பாங்குடன்படர்மினென்றுரைபகர்ந்துபரிவினல்வீரனோடருளாற்
றீங்கறுமன்பர்சிந்தையிற்றிகழுந்தென்றிருக்கயிலையிற்சென்றான்

1149 சென்றபினந்தத்திறல்கெழுவீரன்சேவடிதொழுதெதிர்நிற்ப
வென்றுநீமுடிவினின்பதத்திருத்தியென்றுவான்முகடுதோய்பதத்தில்
வென்றிகொள்வீரமேவுதியென்னாவிடைகொடுத்தருளிநீள்வெள்ளிக்
குன்றினையொருவிக்குலவுநல்லிமயக்குன்றில்யோகுற்றனன்குழகன்

1150 சந்ததமின்னுஞ்சதுர்மறைதேடித் தான்றடவிடத்தனிசென்று
மந்தரமலைபோல்வளரதன்பாங்கர்மங்கைவந்தவதரித்திடவு
மெந்தையோகத்தினெண்ணருங்காலமின்பமாத்திருவருள்செயவு
மந்தநல்லிமவான்முந்தைநாட்புரிந்தவருந்தவம்யாதெனவுரைப்பாம்

1151 எம்பிரான்யோகும்றிருப்பவையாண்டிலெண்ணரும்புவனமீன்றருள்பூங்
கொம்பினைநோக்கிக்குறித்துநல்லிமவான்கோதிலாவென்குலக்கொழுந்தே
யும்பர்கோனாகியுயிர்க்குயிராகியோங்குலகுக்கெலாமொன்றாந்
தம்பிரான்றனக்குத்தகும்பணிவிடைநீசந்ததம்புரிகெனவிடுத்தான்

1152 அப்பரிசலகிலண்டமீன்றெடுத்தவருண்மடக்கொடியகண்டிதமா
யொப்பிலாதுயர்ந்தவும்பர்தம்பிரானுக்குறுந்தொழிலுழந்திடுநாளின்
மைப்புயல்வண்ணமாயவன்மலரோன்வாசவன்வானவரேனைச்
செப்பருமுனிவர்திரட்சியின்வதுவைசெய்துடன்கயிலையிற்சேர்ந்தான்

வேறு

1153 தக்கன்வேள்விதகர்த்திடுமிக்கதைதக்கஞானதவத்துறுமாதவீர்
மிக்கசீரின்விருப்பினுரைக்குநர்மெய்ச்சொன்மேவுசெவிக்கொளுமேன்மையோர்
திக்கினோடுலகுக்கரசாகியேசித்தநீடுகளிப்புடன்மேவியே
தொக்கபோகசுவர்க்கமதுற்றுயர்சுத்தஞானசுகத்தினிலாழ்வரே

தக்கன்வேள்வியழித்த சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் – 1153

*****

## பதினாலாவது

## உமைவருசருக்கம்

1154 பூங்குழலுமைபின் பூவணந்தன்னிற்பொருந்தி நற்றவஞ்செயுமாறு
மோங்கியகாதலுவந்திடத்தானமுத்தமர்க்குதவிடுமாறுந்
தாங்கரும்வெகுளிதணந்திருஞானச்சவுனககேளெனவருளிற்
றூங்கியேமிகுவெந்தீங்கெறிந்தோங்குஞ்சூதமாமுனிவரன்சொல்வான்

1155 இம்முறைமகிழ்கூர்ந்திமயமால்வரையினின்பநற்கடிமணம்புணர்ந்து
செம்மையினோங்குந்திருக்கயிலாயச்சிலம்பினிற்சேர்ந்தபினோர்நாட்
கொம்மைசேர்வெம்மைக்கோங்கரும்பெனவேகுவிந்தபொற்குங்குமக்கொங்கை
வெம்முனைமிளிர்வேல்விளங்கியநயனமெல்லியற்கெம்பிரான்விளம்பும்

1156 தழுவுதற்கெட்டாத்தபனியவரைசேர்சந்தனக்குங்குமக்கொங்கைக்
குழைகிழித்தோடிக்கொடுஞ்சமர்விளைக்குங்கூரிலைவேனெடுங்கண்ணாய்
விழையுநீயாமுன்விளம்புரைமறுத்துமிக்கதக்கன்வயிற்சென்ற
பிழைதனையொழிவான்வழிமதியென்னாப்பேசினன்பிறையணிபெருமான்

1157 பார்தனின்மேலாம்பரதகண்டத்திற்பாண்டி நன்னாட்டினிற்பரந்த
வார்புனைச்சங்கூர்வைகைசூழ்கிடந்தமாடநீண்மதுரைமூதூர்சேர்
பூர்வதிக்கதன்கட்புகலும்யோசனையிற்பொங்கர்சூழ்கற்பகவனத்தி
லோர்தருவளர்த்தேயுறுதவமுஞற்றிலோர்சிவலிங்கமங்குண்டாம்

1158 அத்ததருநீழலமர்ந்தலிங்கத்தினழகுடன்பழமறைவிதியிற்
பத்திமிக்குயர்ந்தபூசனைபயிற்றிற் பண்டைநாளண்டர்கண்டறியாச்
சுத்தமாமந்தத்தொல்லிலிங்கத்திற்றோன்றியாநினக்கருள்புரிதுஞ்
சித்திரபடம்போற்றிகழ்புறவடிமேற்செஞ்சிலம்பரற்றுசீறடியாய்

1159 என்றருள்புரிந்தேயேகெனவடியேற்கிப்பரிசிருந்தவாறென்னாக்
கொன்றையஞ்சடிலக்குழகனாணையையுட்கொண்டுதாழ்ந்துடன்விடைகொண்டு
துன்றியபாரிசாதமாவனத்திற்றோன்றுபல்லுலகெலாமீன்றுந்
தன்றனித்துணையாநின்றமெய்ஞ்ஞானசங்கரியடைந்தனளன்றே

1160 தேவதேவன்றனருளினாலோர்நற்றேவதாரத்தினைப்பதித்து
மூவுலகேத்தமுறைமையின்வளர்ப்பாண்முண்டகச்சூடகக்கரத்தாற்
கூவலின்வடிவங்கொண்டிடத்தேவிகுண்டமென்றொருபெருந்தீர்த்த
மேவொரைந்தெனுந்தூரத்தினிற்கண்டாளீசனுக்குத்தரதிசைப்பால்

1161 கூறிடுந்தேவிகுண்டதீரத்தின்குணதிசைகுறித்திடுமெல்லை
யாறுவெம்பகையுமறவெறித்துதறியரும்பன்னசாலைசெய்ததன்கட்
சீறுகாலருந்திச்சிலபகலதுவுஞ்சிறிதருந்தாதுதேவாண்டி
னூறுமன்புடனோராயிரவருடமொண்டொடியுறுதவமுழந்தாள்

1162 அப்பரிசந்தவருந்தவமுழந்தேயாயிரமாண்டுமாண்டதற்பி
னொப்பரிதாயவுமையவள்வளர்த்தவோங்குமந்தாரமூலத்திற்
பைப்பெரும்பாந்தட்பாதலத்துதித்துப்படியினைக்கீண்டுமேன்முளைத்துத்
திப்பியமாகத்திருவருளுருவாய்ச்சேர்ந்ததோர்திகழ்சிவலிங்கம்

1163 வாலுகமயமாய்வானுறநிமிர்ந்து மன்னியசோதியாய்மேலா
யோலிடுமறைகளுரைத்திடுமிலிங்கவுற்பவந்தனதுகற்பகத்தின்
மூலநேர்வந்துமுளைத்தலுங்கண்டுமுழுங்கழன்மெழுகெனவுருக
ஞாலமேல்விழுந்துபணிந்தெழுந்தயர்ந்துஞானநாயகியிதுநவில்வாள்

1164 ஆயிரந்தேவாயனந்தனிலடியேனருவினைப்பயத்தினாலறியாச்
சேயதாளெனதுசென்னிமேற்பதித்துன்றிருவருள்புரிந்திடநினைத்தோ
மாயிருஞாலந்தன்னினீமுளைத்துவந்தெழுந்தருளினையென்னா
நீயருள்கெனக்கண்ணீர்முலைமுன்றினிறைந்திடநிமலனுக்குரைத்தே

1165 மருவலங்காரவல்லிசொல்லருஞ்சீர்மன்னியமாதவந்தன்னாற்
பரவுமாசாரம்படைத்தபண்பதனாற்பர்த்தலங்கனத்துறுதோடம்
பொருவருபூசைமறைமுறைபுரிந்துபோற்றிசெய்தன்பினான்மாற்றி
யருளுடன்முன்போலானந்தகானத்தரன்றொழில்புரிந்தமர்ந்திருந்தாள்

1166 வன்னமாமளிகண்மதுவுனும்வட்டமட்டறாதுயர்ந்தநன்முட்டாட்
பொன்னிதழ்க்கமலப்பொகுட்டில்வீற்றிருக்கும்பொறிநிறப்புயல்வணமூர்த்தி
யன்னவாகனனேயாதிவானவர்களருந்தவராயிரங்கதிரோன்
பின்னுமவ்விலிங்கந்தன்னின்மெய்யன்பின்பெருக்கெழவேயருச்சித்தார்

1167 இந்தநல்லிலிங்கத்தியல்பினைநாடியெண்ணருமாதவர்நண்ணி
யந்தநற்பாரிசாதமூலத்தினணைந்திடுமுகந்தொறுமாங்காங்
கெந்தைதாண்மலரையிதயநாண்மலரிலிருத்தியேவேறுவேறாகத்
தந்தருளிலிங்கந்தாபனஞ்செய்துசந்ததம்வழிபடலுற்றார்

வேறு

1168 எத்தலமும்புகழித்தலமேவியவியல்பாலே
பத்திகொள்பாரிசாதநிழற்கட்பரமேசன்
சித்திரமேவியசேவடிகண்டுதினந்தோறு
முத்தியடைந்திடமோனமடைந்தனரொருசாரார்

1169 வெங்கனலாகுதிவேள்விவிரும்பினரொருசாரார்
தங்கியயோகசமாதியடைந்தனரொருசாரார்
பொங்குதவம்புரிபொற்பின்விளங்கினரொருசாரா
ரங்கணரன்றனருச்சனைசெய்குநரொருசாரார்

1170 பரிசனர்பஃறொழில்பரிவுகொடடைகுநரொருசாரார்
குருவினைவழிபடவகமகிழ்கூருநரொருசாரா
*(இப்பாடல்வரிகளையடுத்து உள்ள பாடல்கள் கிடைக்கப்பெறவில்லை !)*

1185 .... .... புரிகுழலுமையொடுபொருமடல்விடைவருமநகன்மேல்
வருபவமறும்வகையருளினனொருதனிவரமன்னோ

1186 அடகதுதனைநன்குடன்மிசைதருமந்தணனுக்கு
முடலுயிர்விடுபொழுதும்பரினுயர்கயிலாயத்தின்
விடநுகர்தருவெள்விடைதருகொடியவன்மெய்யன்பாற்
றிடமுறவேதிகழ்மறைமுடிதனையுபதேசித்தான்

1187 கோடுதிகழ்ந்தகுழந்தைமதிச்சடைகொண்டென்று
மாடுமரன்றிகழ்பூவணநகரமதன்பாலே
பீடுறுதானமளிப்பவரங்கதுபெற்றோர்க
ணீடுமரும்பலநாடிநிறத்திடினிகராகும்

1188 அன்னியதானமதன்கணளிக்குமருந்தான
மன்னுபலங்கள்வழங்குநர்கட்கவைவந்தெய்து
மின்னருளாலஃதேற்குநர்க்கென்றுமிரும்பாவந்
தன்னிகர்சவுனகச [illegible]

1189 மெய்ப்படுதானமளித்திடுமந்தநன்மேலோர்கட்
கொப்பறுநற்பலனுண்டெனவோதுதலேற்றோர்கள்
செப்பருதீநரகத்திடைசேர்குவரென்னுஞ்சொ
லிப்பதியின்கண தில்லையிரண்டுமிணையாமால்

1190 இத்தலமெங்கணுமித்தலநேர்சொலவின்றாகு
மித்தலநல்குமையுந்தவமுற்றவிருந்தான
மித்தலமேயெனிலித்தலமன்னுமுயிர்க்கெல்லா
மித்தலநன்கெனவுரைசெயவேண்டுவதின்றாமால்

1191 புரிகுழலுமைதிகழ்பூவணம்வந்துபொருந்துஞ்சீ
ருரைதருபிரமகைவர்த்தபுராணத்தொன்றூன
மருவியவெண்பஃதாகவமுத்துநலத்தியாய
மருளுறுசவுனகமுனிவவருந்தவவறவீர்காள்

வேறு

1192 சிமயமாலிமயாசலமேவியசிவமனோன்மனிசேர்கவுமாரிதேர்
சமயநாயகிசௌரிசகோதரிசகலகாரணநாரணியாயிதழ்க்
கமலலோசனிகாதையையோதுநர்கருதியேசெவிவாய்வழியோர்குவோ
ரமலநாயகனார்பதமாகியவரியதாமரைநீழலில்வாழ்வரே

உமைவருசருக்க முற்றியது

ஆகச்செய்யுள் 1192

*****

## பதினைந்தாவது
## சுச்சோதிதீர்த்தயாத்திரைச்சருக்கம்

1193 படர்செழுந்தகட்டுப்பையவிழ்துத்திப்பாந்தளின்றலையின்மேற்படுத்த
வுடைதிரைக்கடற்சீருலகினில்மேலாயுரைதருமித்தலப்பெருமை
தடைபடாதருளிற்சார்ந்திடுமின்பச்சவுனகமுனிவகேளென்னா
முடிவிலானந்தவாரிதிமூழ்குமுதிர்தவச்சூதன்பின்மொழிவான்

1194 திரைபுரள்கோதாவிரிதருதீரஞ்சேர்ந்திடும்பலவளனார்ந்த
பொருவருபோகவதியெனவோங்கும்பொற்சுவருடுத்தநற்புரியி
னரசர்கணெருங்கியறுதினந்தத்தமருந்திறையளந்துவீழ்ந்திறைஞ்சப்
பரவருமகுடமணியொளிபரப்பும் பரிபுரமருவியபதத்தான்

1195 அருமறையாளர்க்கருச்சனையன்பினாற்றியேயறங்கள்கைக்கொண்டோன்
பெருகுநற்றீர்த்தத்துறைதொறுந்தோய்ந்துபெருங்குலப்பிதிர்கடன்றீர்த்தோ
னிருநிதியதனையிரவலர்க்காற்றியிரப்பெனுமிருள்வலிதுறந்தோன்
கருதரிதாயகலைபலதெரிந்துகடக்கருங்கலைக்கடல்கடந்தோன்

1196 காமனிற்சிறந்தகட்டழகுடையோன்காமமாதியகளைகட்டோன்
நாமநீள்புயஞ்சேர்தரையுயிர்க்கெல்லாந்தாயினினுங்குதண்ணளியோன்
சேமமாகியசெஞ்சுடர்வடிவேலாற்றெவ்வலியடக்கியதிறலோ
னேமியந்தடக்கைநீனிறச்செங்கணீண்டமாலெனவருள்பூண்டோன்

1197 செப்புமாயிர நற்றிருந்துமந்திர த்தாற்சிரித்துமுப்புர ந்தனையெரித்த
முப்பரம்பொருளாமுக்கணெம்பிரானைமுப்பொழுதருச்சனைமுயல்வோன்
பைப்பெரும்பாந்தட்ப ஃறலைசுமந்தபடியெலாங்கண்ணிமைபோல
வொப்பருமதியமுறழ்கவிகைக்கீழோங்குசெங்கோனடாத்துரவோன்

1198 மதிவளர்ந்தொடுங்கிவந்திடுநாளின்மன்னியவட்டமிதன்னிற்
றுதிதருமர்த்தோதயமகோதயத்திற்சொல்விதிபாத நன்னாளி
னுதயநாடனிலோராயிரமோரொன்றுளங்களிதூங்கவெஞ்ஞான்றுந்
திதமுறுதானவிதமிகவளிக்குந்தேவவன்மாவெனும்பெயரோன்

1199 அன்னதொல்புகழ்சேர்மன்னர்மன்னவனுக்கழிதலின்முழுதுலகேத்த
மன்னுசுச்சோதிமாநீதிமுகனல்வதானியன்றேவமித்திரச
னென்னுநன்மைந்தரீரிருவோருமிகலறுமகரமேலுயர்த்த
கன்னலஞ்சிலையிற்காமனேயென்னக்கண்ணகன்புவியினணணினரால்

1200 சாலவுங்கற்றோர்தங்கள்பாற்கலைகடாந்தெரிந்திருமுதுகுரவர்
சீலநற்குரவன்செப்பியமாற்றந்தினந்தொறுந்திறம்பிடாத்திறத்தோர்
ஞாலமேற்றிகிரிபுருட்டிநன்களிப்பாரைபதியெனவளர்ந்ததற்பின்
மாலுமெய்த்திருவும்போலவர்க்கின்பமணம்புணர்வித்தனன்மன்னன்

1201 மன்னவனந்தமைந்தர்நால்வருக்குமணம்புணர்வித்தபின்மரபான்
முன்னவன்றனக்குமுழுதுலகளிப்பான்மொய்த்திடுமணிமுடிகவித்துப்
பன்னுமந்திரிகடம்மைநம்புதல்வர்ப்பாதுகாத்திடுமெனப்பணிந்துத்
தன்னுடைமடவாடன்னொடும்பொதும்பர்தான்றிகழ்வனத்திடைச்சார்ந்தான்

1202 சார்ந்துபூதங்கடகுபொறிதணந்துதடுப்பரும்வளியையுந்தடுத்து
நேர்ந்தமெய்ஞ்ஞானநிட்டையிற்கூடிநேயமோடுற்றுடனீத்தான்
சேர்ந்திடுந்தருமசீலையுங்கணவன்செல்வழிக்கொடுசெலத்திருநன்
கார்ந்திடுமுன்னோனனுசரோடவர்க்காங்கந்தியக்கடன்முடித்தன்னால்

1203 அதுபொழுதங்கண்ணைந்துமுன்னவனையாரருள்வீணைநாரதன்றான்
றுதிபலபுனைந்துசொல்லுவதுடையேன்றூயநற்பாரெலாந்தோண்மேன்
மதுமலர்மாலையென்னவேசுமந்தமன்னநின்மனத்திடைமதித்தே
யிதுபுரிவைகுயேலாழிசூழுலகத்தின்றுணக்கிணையிலையென்றான்

1204 இந்தநற்றலத்தினிருங்குலப்பிதிர்களியைந்துநிற்கெதிர்முகந்தரவே
வந்துநீவழுங்குந்திலதருப்பணத்தைவாங்கிடின்மற்றையதலத்தை
முந்துறக்காண்டியத்தலம்பிதிர்கண்முத்தியினடைந்திடும்புரமா
மந்தநற்றலமேயரும்பெருந்தலத்தினதிகவுத்தமதலமாமால்

1205 அன்றியும்பிதிர்களனைவருமேலாமரும்பெருங்கங்கையின்கரையி
னொன்றியமகிழ்ச்சியுற்றினிதிருப்பருரைக்குமெட்டருப்பணமதனை
மன்றவப்பிதிர்கள்வளங்கையில்வழங்கின்மற்றையர்நற்கதியடைவ
ரென்றதையானிங்கியம்பவேண்டின்றேயிகல்கடிந்திலங்கியவேலோய்

1206 ஆதலாலிந்தவோதநீர்ஞாலத்தருங்குலப்பிதிர்கள்யாவருமே
காதலினினைந்துதிலதருப்பணத்தைக்கைக்கொளும்பதியைநீகருத்தின்
மேதகக்காண்டியென்றுநன்மகதிவீணைநாரதனியம்பிடலும்
பூதலமன்னன்பொருவருந்தவத்துப்புரோகிதற்கின்னன்புகல்வான்

1207 ஆரழல்வளர்க்குமந்தணீர்நுந்தமம்புயப்பாதநுண்டுகளாற்
பேர்பெறுமெமதுபெருங்குலத்தோர்கள்பெருங்கதிபெற்றனரதனா
லோரினத்துகளுக்குரியம்யாநீவிருகந்தருள்புரிகுதிரென்னா
நாரதற்பணிந்துநற்றவத்தலைவனானிலவேந்தனுக்குரைப்பான்

1208 தொடுகடலுலகிற்றுன்றிருடுருவுஞ்சுடரவன்றொல்குலத்தோன்றல்
வடுவறுசிறப்பின்மறிதிரைக்கங்கைமாநதியாகியதீர்த்தத்
தடைவினிற்சென்றேயாடுதியாயினருத்தியினாரதனுரைத்த
படிநினக்குண்டாம்பகர்குவமின்னும்படியையோரடியினாலளந்தோய்

1209 கடஞ்சொரிகரடக்கவுளுடைக்கறைக்காற்கசரததுரகமாசேனை
மடந்தையரங்கிவளர்த்திடுமறையோர்மன்னுமாணாக்கர்பாங்காகத்
தொடர்ந்துபின்செல்லத்தூமணிகனகஞ்சுடர்விடுமாளிகைக்கொண்டு
படர்ந்திடுகென்னாப்படிவன்றான்பகர்ந்தபான்மையிற்பார்த்திவன்படர்ந்தான்

வேறு

1210 திக்குலகெலாம்பரவுதீர்த்தமதின்மேலாய்த்தேசுபெறுகின்றநலிராசமாய்வீறி
மிக்கபிரயாகையினின்மெய்முனிவரோடும்வேந்தர்தொழும்வேந்தன்மகிழ்வோங்குபிதிர்கணமு
முக்கணிமலக்கடவுண்முண்டகமலர்த்தாண்முத்திபெறவேவிரதமுண்டனமதாயே
தக்கபுகழ்சேர்திலதருப்பணமுநல்கித்தண்புனல்படிந்துரியதானமுமளித்தே

1211 மன்னியவரித்துவாரந்திகழவந்திமாளவங்காகோலமாநிலகண்டந்
தன்னிகரில்சோமேசுரஞ்சிலாதலநீள்சதுர்வேதவீசங்கோமதிதீர்த்தவாரம்
பன்னகேசம்பான்மைபகர்பர்ப்பரேசம்பகருமதுகண்டேசுரம்பரவருஞ்சீர்
துன்னுமாரணியங்கோமளமருவிநாளுஞ்சூருலவுகின்றகௌமாரகாந்தாரம்

1212 கதிரொழுகுநாககானம்பீமகானங்காசறுசெழுங்கவுசிகம்புகழ்காளிங்க
மதனமகிழ்கூரவருள்பாராவதேசம்வான்முகடுதொடவெழுசிலாசநாகஞ்சே
ரதிகநல்வராகமெய்த்துதியமர்கோகன்னமாத்தியேசுரம்வேகதரிசனம்வருஞ்சீர்
விதமருவுமங்கிசாலாவனம்விளங்குமேவுமதுவாரணியமிக்கவடகானம்

1213 மாவுலவுசரவணேசுரமருவியோங்கும்வானந்தொடுஞ்சுத்தவானந்தகானந்
தேவர்தொழுதெழுநன்மரீசிவனமோரெண்டிசையென்றுபுகழ்கொண்டதிகழ்சங்கமேசந்
தாவிலருண்மிகுபிராசாபத்தியசுரந்தசைமைபெறுமாவேணிதீரமகிழ்கூரும்
பூவுலகெலாம்பரவுபூம்புனஞ்சேரும்பூசுரர்கணேசமுறுசீசயிலமம்மா

1214 சம்பராலயநீடருங்கதலிகானந்தருஞ்சீர்விருபாக்கங்தகுகோடியீச
மம்புவிதொழும்வசிட்டாச்சிரமமன்பாமருங்கபிலையீசுரமருட்காளகண்டம்
வம்புலவுகின்றமாவனநகரமேவான்வாளூற்றுவளமிக்ககாளத்திமலைசே
ரெம்பிரான்மகிழ்தங்குபம்பாதியீசமிருளோடவருண்மேவுதிரிகூடவீசம்

1215 கருதரியவண்காஞ்சிநகர்கந்தமேவுகணகண்டவிசமிகுகடலமுதகானம்
பரவுமவிமுத்தநற்பாராவதேசம்பரசுறுநிருத்தகங்கன்மாடகளரி
திருமேவுசோணாசலங்கோமுகேசந்தென்றமிழ்மணங்குலவுகின்றமுதுகுன்றங்
குருமணிகொள்கோபருப்பதம்விண்டுகிரியேகோலமதிமேலுலவுகின்றவிசுவேச
ம்

1216 விசதமிகுதில்லைவனமிக்கிலகுகின்றவேதனசலம்மெழின்மேவுதிருவெண்கா
டிசைவயித்தியநாதமென்சாயையடவியேமமுறுமின்பமருளாமிரவனஞ்சேர்
வசையில்கல்லியாணமங்கலமகிழ்சிறந்தமருவுதிரிகோடீசமன்றிமாகேசந்
திசைகடொறுமிசைநிறுவுகோமுத்தியீசஞ்சித்திதருபூமீசமத்தியார்ச்சுனமே

1217 பரவரிய நாகநாதங்கும்பகோணம்பட்டீசமேவுசந்திரசேகரஞ்சூழ்
திரிசிராவெல்லையிறுவாயுறுதலஞ்சேர்தீர்த்தமவையாடியுடன்மூர்த்தியடிபேணிப்
பெருகார்வமொடுதிலதருப்பணமுநன்காற்பேராதகாதலிற்பிதிர்கட்களித்தே
யருளாளனங்கயற்கண்ணியொடமர்ந்தவாலவாயின்கண்மிகுமன்புடனடைந்தான்

வேறு

1218 அடைந்ததன்பின்மிடைந்தளிசேரலர்ந்தசெந்தாமரைப்பூவினழகுபூத்த
தடங்குடைந்துபடிந்தாடித்தக்கபிதிர்கடனீந்துதழலிற்காய்ந்தே
யுடைந்தபைம்பொனணிசுமந்தவுமையாளோடெமையாளுமிமையாமுக்கட்
படர்ந்தசடைப்பரஞ்சுடர்செம்பரிபுரப்பொற்பதங்கடமைப்பணிந்துபாங்கால்

1219 ஏர்பெறுநற்றீர்த்தங்களியாவையுந்தோய்ந்தேய்ந்தபிதிர்கடன்களீந்து
பேர்பெறுமத்தலங்கடொறும்பிரியாதபிரான்றனடிபேணியன்னோர்
நேர்படலிலாமையினானிகழ்த்துமுனியுரைத்தமொழிவிநோதமென்னாத்
தார்புனைந்ததடந்தோளான்றாமரைக்கண்ணீர்ததும்பத்தானங்குற்றான்

1220 அப்பரிசங்கரசர்பிரானமுங்குதலுமரனருளினங்கைதாங்குஞ்
செப்பருந்தந்திரிவீணைத்திருமுனிவனன்பினெதிர்சேர்ந்தகாலை
யொப்பரியகடன்முகட்டிலுதயவாதபனெனவேயுலகிற்றோன்றுந்
தப்பறுமன்னவன்முனிவன்சரண்பணிந்துமகிழ்ந்துமுகஞ்சாம்பிநின்றான்

1221 நின்றிடலுநிருபன்முகமெதிர்நோக்கிவீணைமுனிநிகழ்த்துகின்றா
[illegible]
துன்றியசெஞ்சுடர்வேலோய்சொற்றருமப்பலன்புசித்துத்தொலைத்தல்வேண்டு
மென்றதனாலெளிவந்திங்கின்பிருத்தியெதிர்முகந்தந்திலனாலம்மா

1222 ஆதலினாலினியிரங்கேலாதபன்றன்குலத்துதித்தவரசர்கோவே
யோதலுறுகாரணமொன்றுண்டதனையுரைத்திடுவமோர்தியிந்தக்
கோதிலுயர்மதிற்கூடற்குணதிசையோசனையெல்லைகொண்டபாரி
சாதவனந்தனிலுலகந்தந்தருள்சுந்தரிதவஞ்செய்தலமொன்றுண்டால்

1223 அங்கணமர்கின்றசிவலிங்கமதொன்றரசநினதருங்குலத்துப்
பொங்குகதிரோன்பூசைபுரிந்திடுபொற்பினதாகிப்போகமுத்தி
செங்கைகுவித்தெரேனுந்தெரிசனஞ்செய்தளவிலருள்செய்வதாய்வெண்
சங்குலவும்வேகவதித்தடங்கரையின்றென்மேல்பாற்சார்ந்துவைகும்

1224 அந்தமணற்றந்தசிவலிங்கமதற்காயபுகழ்வாயுதிக்கிற்
சுந்தரமூன்றம்புதொடுதூரத்திலிரவினொளிதுதைந்திலங்குஞ்
சந்திரன்வந்தருச்சனைசெய்சந்திரலிங்கமதொன்றுதன்னேரின்றி
யிந்தவொருமூவுலகுமெஞ்ஞான்றுமினிதேத்தவிருக்குமாதோ

1225 அத்தலந்தானரன்றனக்குமருந்தவர்க்குமரும்பிதிர்களாயினோர்க்குஞ்
சித்தமகிழ்தலமதனிற்சென்றடைந்துன்பிதிர்களுக்குத்திலோதகத்தைப்
புத்தமுதத்தடம்பொருந்துபுனலாடியளிக்கினெதிர்பொருந்திவாங்கி
முத்தியடைகுவரதனான்முயன்றிடுதியிஃதுண்மைமுழவுத்தோளாய்

1226 மேதகுமிந்நாள்காறுமிக்ககருமத்தொடர்ச்சிமேவலாலே
யோதிருநின்னாற்பிதிர்களுறக்காண்டற்கரிதாகிற்றுழந்தகன்ம
மாதரவிற்பரிபாகமடைந்தமலமடைந்தவதனாலேயங்கண்
டீதறுபூந்திருமடந்தைசெல்வனீயேயிஃதுதிண்ணமாதோ

1227 மலர்தலையிவ்வுலகத்துமைந்தரினின்னிகராகுமைந்தரின்றாற்
றலைமைபெறுநின்றந்தைதன்னைநிகர்மாந்தருமோசாற்றினின்றா
னிலவிடவேநீவிருந்தாநீள்புகழினொடுதருமநிறுவுநீரா
லிலகுபருந்திருந்துசுவைத்தருந்துதசைந்திடுநெடுங்கூரிலைகொள்வேலோய்

1228 மதியுடனன்மாதவரைவழுத்திமன்வல்வினைநீங்குமதனிலும்மைத்
துதிகொடுபோற்றினர்யாருந்தொல்பவங்கடொலைக்குவர்யாஞ்சொற்றவாற்றாற்
கதிர்விடுபாற்கரபுரத்திற்கருதுதிலோதகம்பிண்டஞ்சிராத்தநல்கிச்
சதுர்மறையோரருச்சனையுந்தானதருமங்களுநீதயங்கச்செய்வாய்

1229 மலங்கிடுநின்மலர்க்கண்ணீர்மாற்றிடவந்தனமிங்ஙன்வல்லைவந்தத்
தலந்தனிலேகுதியாமுந்தகுந்தீர்த்தத்துறைகடொறுஞ்சார்துமென்னா
விலங்கையர்கோன்சிரமரிந்தவிராமனிரும்பழியொழியவிறைஞ்சுஞ்சேது
தலந்தனைநற்புண்ணியதீர்த்தம்மாடநாரதனுந்தணந்துபோனான்

1230 நினைவரியபுகழ்நிருபனிகழுமுதகானமணிமகதிவீணை
முனிவனுரைசெவிமடுத்துமுழுதுணர்மூவாயிரமாமுனிவரோடுந்
தனதுபிதிர்கடன்கழித்துத்தங்குபலதானதருமங்கள்செய்வான்
புனிதமிகுந்திலங்கியபொற்புரிசைசூழ்பூவணத்திற்பொருந்துகின்றான்

வேறு

1231 பேசுமிக்கபுனலதுமூழ்குசீர்பேர்கொளெட்டுறுபஃதுயர்காதையீ
தோசைபெற்றவுலகினிலோதுவோரோதுசொற்கள்செவிகொடுதேர்குவோர்
நேசமுற்றபுதல்வர்கண்மேன்மையார்நீடுபத்திநிகழும்விவேகநேர்
தேசுசுத்தியடைவர்பினீறில்வான்சீர்மிகுத்தசிவகதிசேர்வரே

சுச்சோதிதீர்த்தயாத்திரைச்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 1231

*****

## பதினாறாவது
## சுச்சோதிபிதிர்களை முத்தியடைவித்த சருக்கம்

1232 பொங்கர்தொறுமங்குறவழ்பொழிறிகழும்பூவணத்திற்பொருந்திமன்னன்
றங்குகருமங்கண்முதற்றானிழைத்ததியாவையுநீ சாற்றுகென்னா
வெங்கொடுங்காமாதிகளை யொறுத்தொழித்தசவுனகன்றான்வினவலோடுந்
துங்கமறைவடித்தெடுத்ததூயவியாதனைநினைந்துசூதன்சொல்வான்

1233 கூடியநான்மறைவாணர்குழுத்துதித்தகுருபரநீகுலவுகின்ற
கேடிலருங்கதை மேலாக்கிளத்திநன்புராணமிகுங்கேள்வியோய்நீ
வாடியடைகுநர்தமக்குமகிழ்ந்தளிக்கும்வள்ளலுநீயதனானிற்கு
நாடிலிணையின்றென்றுநரபதிசெய்கையைச்சுருக்கிநவில்வதானான்

1234 சதுர்மறையோர்குரவருடன்றமிழ்மதுரைதணந்தேழ்பைம்புரவிபூட்டி
யுதயமால்வரைமுகட்டினோராழித்தேர்வெய்யோனுதிக்கும்வேலை
யிதயமதினொருமையுடனியல்வீணைநாரதன்றானியம்புமாற்றா
லதிர்கழற்காலரசர்பிரானரும்பாரிசாதவனத்தடைந்துமாதோ

1235 வண்டினந்துதையுமண்டலப்பொகுட்டுமலர்தருமணியொளிபரப்புங்
குண்டநீர்படிந்துகோதில்செம்பவளக்கோலமேனிச்சிவக்கொழுந்தைக்
கண்டடிபணிந்துகருதரும்பிதிர்கள் கடன்கழித்தடைந்தவனோர்நாட்
பண்டருவேதபராயணரோடும்பரிந்துநற்றொழின்முறைபுரிந்து

1236 வந்திடுமளவின்வானவர்பெருமான்மாபெருங்கோபுரவாயின்
முந்தைநான்மறையுமுழுதொருங்குணர்ந்துமூவுலகேத்திடுநெறிசேர்
சுந்தரநீறுதுதைந்தமெய்யழகுந்தூயவற்கலையுடையழகுந்
தந்தகாலவனைக்கண்டவன்றாளிற்றடமணிமுடிபடத்தாழ்ந்தான்

1237 தாழ்ந்தெழுமன்னன்றன்னைநேர்நோக்கித்தவமுனியாசிகள்கூறி
வாழ்ந்தனைகொல்லோமன்னநீயென்னாவளம்பெறமாற்றநன்கறையப்
போழ்ந்திடுமதியம்பொதிந்தபொற்சடிலப்பூவணமேவுமாரமுதைச்
சூழ்ந்தமாதவர்கள்குழாங்கண்முன்றுதைந்துதித்திடத்தொழுதுகைகுவித்தான்

1238 தொழுதகைதலைமேற்சுமப்பமெய்பொடிப்பத்துதித்திடுகின்றசொற்றருநாத்
தழுதழுத்திடச்செந்தபனியப்பொகுட்டுத்தாமரைக்கண்கணீருவி
பொழிதரவுள்ளமுருகிடவன்பிற்பொருந்தியானந்தவாரிதியின்
முழுகிமெய்ஞ்ஞானவிழியினாற்கண்டுமூண்டெழுகாதலின்மீண்டே

1239 பாலின்வெண்டரளந்தனைத்திரைசுருட்டிப்பந்தெறிந்தேவிளையாடுஞ்
சீலமார்வைகைத்திகழ்புனலிடத்துஞ்சேர்ந்ததெள்ளமுததீர்த்தத்துஞ்
சாலநீள்வான்றோய்சந்திரதடத்துஞ்சங்கரன்கோயிலினன்பாற்
கோலவாளியிரண்டிட்டதோரெல்லைகொண்டமார்க்கண்டதீர்த்தத்தும்

1240 நானமுந்தருமதானமும்புரிந்துநவிலுநல்லைந்தினங்காறு
மானபண்பாடியறுபதமுரன்றேயணிமுகைவிண்டிடவலர்த்தித்
தேனிருந்துண்டுதேக்கிடுமிதழிச்சிகழிகைதிகழ்ந்துசெஞ்சடில
வானவன்பூசைமறைமுறைநடாத்திவைகினன்வையகங்காப்போன்

1241 முறைமையினங்ஙனுறையுநாடோறுமொழியுமூவாயிரமுனிவர்க்
கறுசுவையடிசிலளித்துவான்மதியமருங்கலையொடுங்குநாட்டீர்த்தத்
துறைதொறும்படிந்துதூயமாதவர்தந்துணையடிதொழுதுயர்பிதிர்கள்
பெறுதிலோதகமும்பிண்டமுமளிப்பான்பிஞ்ஞகன்பூசையும்பேணி

1242 மாமணிவரன்றிமறிதிரைகொழிக்குமருமலர்க்குருமணிவாவி
நாமவேலரசனன்னுருவுணர்ந்தேநன்முநிகணத்தவர்நாகர்
தேமலரலங்கற்றிண்மனுவேந்தர்சித்தர்விஞ்சையர்கள்கின்னரர்க
ளேமுறுபிதிர்களெண்டிசாமுகத்தரியாவருமீண்டினரன்றே

1243 நாந்தகத்தடக்கைநரபதியந்தநன்புனன்மூழ்கியேயன்பாற்
சேர்ந்ததக்கிணாபிமுகத்தனாய்முன்னூற்றிகழிடம்பூண்டுநன்குசையி
னேய்ந்தமாமறையோரிசைத்திடுமாற்றாலிருந்துசங்கற்பநேர்புரிந்தாங்
காய்ந்திடுதருப்பைதன்னிலாவாகித்தருங்குலப்பிதிர்களையம்மா

1244 வழுவிலாச்சிறப்பின்மன்னியமரபின்வந்தருள்கின்றவென்றந்தை
கழிபெருங்காதற்காளையானாகிற்கலைக்கடல்கடந்தனனாகின்
மொழிவருந்தவங்கண்முயன்றனனாகின்முனியுரைதவறிலனாகிற்
பொழிதருங்காதற்பொருவிடைப்பாகன்பூசனைபுரிந்தனனாகில்

1245 அரியநற்றீர்த்தத்துறைதொறுமன்பினடைந்தியான்படிந்தனனாகிற்
றருமமுந்தவமுந்தானொருவடிவாந்தந்தைசொற்றவறிலனாகிற்
பிரிவரும்பிதிர்நன்பிதாமகன்பிதாவாம்பெருங்குலப்பிதிர்கள்யாவருமே
யிருநிலம்புகழவெட்டருப்பணங்கொண்டெதிர்முகமாகவேவேண்டும்

வேறு

1246 ஈங்கடைந்தேயாவருமேயெதிர்முகந்தந்தியானளித்தவிரும்பிண்டத்தை
வாங்கியருந்தாதொழியின்வல்லையிலாருயிர்துரப்பன்மன்றவாய்மை
நீங்கலருமனுகுலத்தினிந்திக்கப்பட்டேனாய்நேர்வனென்னா
வாங்கணைந்தோர்செவிநிறைப்பவறைந்துதிலோதகமதனையவர்கட்கீந்தான்

1247 ஈந்திடுமவ்வேலைதனிலிருநிலவேந்தன்பிதிர்களின்புற்றேவான்
றோய்ந்துயர்பொன்னுலகமுறுஞ்சுரர்வடிவங்கொண்டவன்முன்றோன்றியேனோர்
தாந்தெரியாவகையடைந்துதக்ககரபாத்திரத்திற்றந்தயாவு
மாந்தரங்கமுடன்றேவரமுதருந்துமாபோலவருந்தினாரால்

வேறு

1248 அந்தவேலையின்மன்னனரியபிதிர்கடம்மை
முந்துறவேகாண்டலுமேமுதிருங்காதன்மூண்டே
நந்தம்பிதிர்கள்காணநானன்குடையேனென்னாச்
சிந்தைமகிழ்ந்தாங்கன்னோர்செப்புமாசிபெற்றான்

1249 பூணார்மைந்தர்தந்தபுதல்வர்சூழந்துபோற்ற
வீணாள்படுதலன்றிவீடுவிசயத்தோடு
நீணாளுடன்வாழ்கென்னாநேர்ந்ததவமீந்தயன்மால்
காணவரனல்லதிருங்கழற்சேவடியிற்கலந்தார்

1250 இந்தத்தலமான்மியத்தினிறும்பூததனாலிறையோ
னந்தமற்றவறஞ்சேர்ந்தரியபுகழைநாட்டி
யுந்துங்காதற்பிதிர்கட்குயருங்கதிநன்குறவே
தந்தபுரமென்பதனைத்தாவில்விளக்[illegible]தந்தான்

1251 வாவிதிகழ்பூவணத்துமாணிக்கம்மாமலைக்கு
மேவுசெம்பொன்கொடிக்கும்வேணவாவினீந்து
பூவலையந்தான்போற்றும்போன்னனையானல்லருளாற்
றேவவன்மனருள்சேய்சீவன்முத்தனானான்

1252 ஆனமூவாயிரநல்லரியமுனிவரந்த
மானவேற்கைமன்னன்வண்மைகண்டுமிக்க
தானந்தன்னைநல்கத்தத்தம்பிதிர்கடுய்த்து
மோனஞானவின்பமுத்திதன்னிலுற்றார்

1253 பன்னவரும்பராரைப்பாரிசாதவனத்தின்
வன்னமிகுநன்மணிப்பூண்மன்னன்றன்மைகாணூஉ
வுன்னவரியகாதலுள்ளம்பிடித்தாங்குந்தப்
பொன்னுலகத்தினும்பர்பூமழைமிகவேபொழிந்தார்

1254 பண்ணுபாவமனைத்தும்பாறல்செய்வதாகிப்
புண்ணியமாய்மேலாகிப்பொருந்தும்புட்பகானத்
தண்ணனண்ணுகோயிற்கரிய நிருதிதிசையிற்
றண்ணந்துளபமாயோன்றனக்குப்பச்சிமத்தில்

1255 தாவில்புகழ்நற்றந்தைசகலவுலகும்பெறுவான்
றேவதேவனருளாற்றேவவன்மலிங்க
மோவின்மறையோர்தம்மாலொன்றையங்கேதாபித்
தாவதானதானமந்தமறையோர்க்குதவி

1256 கோடிசெம்பொனந்தக்குழகன்றனக்குங்கொடுத்தாங்
காடல்வயமாமன்னனருந்தவஞ்செய்தமர்நாட்
டேடுங்கதிகணல்குந்தீர்த்தந்தோறும்படிந்து
மாடுநல்லவீணைவல்லமுனிவந்துற்றான்

1257 உற்றமுனிவனுரைப்பானுரைசெய்யிந்தப்பதியி
னற்றமறுநன்மகிமையறிந்தனைகொல்லென்னா
மற்றையந்தத்தலத்தின்வைகன்மூன்றுவைகிப்
பொற்பினோங்குங்கயிலைப்பூதரத்திற்போந்தான்

1258 அழிவில்புகழ்மன்னன்பினானதானையோடு
மெழுதாமறைதேர்மூவாயிரமாமுனிவரேத்த
மழையினகடுகிழிக்குமதில்சூழ்மாடநீடும்
பொழில்சேர்ந்தோங்கும்பொற்பிற்போகவதியிற்போந்தான்

வேறு

1259 தாவிலத்தலத்திலெட்டருப்பணஞ்செய்து
தேவவன்மேசனைத்தெரிசனஞ்செய்வோர்
மேவுமெண்டலைவர்வான்முறைவிருப்பியே
யாவருந்தொழச்சிவபுரியினேறுவார்

1260 பரவுபஞ்சாமிர்தம்பஞ்சகவ்விய
மருவியபலோதகமஞ்சனத்தினா
லரியபூவணேசனுக்காட்டுவோர்பலன்
கரியகண்டப்பிரான்கழறல்வேண்டுமால்

1261 ஆடல்செய்பூவணத்தரனுக்கானெய்யாற்
பீடுறவோர்விளக்கேற்றும்பெற்றியோர்
தேடருங்கதியருள்சிவபுரத்தினிற்
கோடிநன்குலத்துடன்கூடிவாழ்வரால்

1262 நந்தனவனமணிமாலைநற்றுகி
லந்தனமாதியீசனுக்களித்துளோ
ருந்துசீர்க்கோடிநல்லுகமொரோன்றினுக்
கெந்தைசேர்கயிலையினினிதுவாழ்வரால்

1263 குழந்தைவெண்மதிச்சடைக்குழகனுக்குமுன்
பழிந்திடுமாலயந்தனையுண்டாக்குநர்க்
கெழுந்தவன்புடன்புதிதியற்றுமன்னதின்
வழங்கிடுமதிகநான்மடங்குபுண்ணியம்

1264 தவலருந்தினவிழாத்தங்குந்திங்களி
னிவறலினெமுச்சிநன்கியற்றுவோரியாண்
டவர்மணித்தேர்விழாவணிநடத்துவோர்
சிவபிரானுடன்சிவபுரியிற்சேர்குவார்

1265 உற்றவித்தலத்திடையுயிர்மெய்யொத்துறக்
கற்றுணர்கலைவலோர்கண்டமாத்திரை
பொற்புடன்பொருந்தினோர்புனிதமேனியாய்
நற்பெருங்கயிலையினண்ணிவாழ்வரே

1266 ஆயினோரணுவளவறையுமித்தலத்
தேயநான்மறையவர்க்கீந்தவப்பொருள்
சேயுயர்விசும்புதோய்சிகரபந்திகண்
மேயசெம்பொறிகழ்மேருவாகுமால்

1267 உறுமொர்நன்பிடியனமுதலவினோரவண்
குறைவினான்மறைதெரிகோடியந்தணர்க்
கறுசுவையடிசிலன்னியதலங்களிற்
பெறவுவந்தருள்பலப்பேறுண்டாகுமால்

வேறு

1268 சதுர்முகக்கடவுளன்னசவுனகமுனிவவிந்தப்
பதிதனிற்றிலோதகஞ்செய்பான்மையோர்பலனையாமோ
துதிதரலரிதுமாதோசொற்றிடின்மன்றவாய்மை
மதிபொதிசடிலத்தெங்கள்வானவனறிவனன்றே

1269 புகலுநல்லின்பமிக்கபுண்ணியமளிப்பதாகி
நிகழ்தலம்புகழ்வதாகிநீள்பவந்துடைப்பதாகி
யகமகிழ்தரவெம்மானுக்கானந்தகானமென்றுந்
திகழ்வுறுநாமம்பெற்றித்திருநகர்சேர்ந்திலங்கும்

1270 தகுந்திருமுனிவீர்காணுஞ்சந்நிதிதன்னில்யானு
மிகுந்திருவுடைமைபெற்றேன்மேலையோர்தம்முன்யாவர்
புகுந்துதாம்பொருந்தின்மிக்கபுண்ணியந்தன்னாலன்னோ
ரகந்தெளிந்தருளினீடுமறிவினாலும்பராவார்.

வேறு

1271 சீருலாவுபிதிர்களுறுங்கதிசேருமாகதைசெப்புறுகிற்பவ
ரேருலாவுபொருட்பகர்கின்றவரீதுகாதினிறைத்திடுமன்பினோ
ரூர்கள்யாவுமொடுக்கிவிரைந்துவிணூடுலாவிடுமுப்புரம்வெந்திட
மூரன்முன்னம்விளைத்திடுமெம்பிரான்மோனஞானநன்முத்திபொருந்துவார்

சுச்சோதிபிதிர்களைமுத்தியடைவித்தசருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 1271

*****

## பதினேழாவது
## தீர்த்தச்சருக்கம்

1272 மறைநான்குமனங்கிடந்தவழுவிலருட்சவுனகவன்னக்கலாபப்
பொறிமயினின்றனவரதநடனமிடும்பொழிறிகழும் பூவணத்தி
னறைதருதீர்த்தங்கடமிலரும்பவநீங்கிடவாடுமான்மியத்தின்
முறைமைதனைமூவாறுபுராணமுனியுரைப்பனெனமொழிவதானான்

1273 சீரார்ந்தகார்த்திகைநற்றிங்களூறுந்தினந்தன்னிற்சேர்முன்வாரத்
தோராழித்தேர்வெய்யோனுதிப்பதன்முன்மணிகுண்டத்துந்தித்தான
நேராகநின்றவன்மந்திரநவிற்றிமூழ்குநர்தாநினைந்ததேய்ந்து
பேராதபெரும்பவநோய்பெயர்ந்ததன்பின்சிவலோகம்பெறுவரன்றே

1274 வனசமலர்மாளிகையின்வண்டிருந்தின்னிசைபாடும்வண்டானஞ்சேர்
தனைநிகரத்தடம்படிந்துதருங்கிருதமறையவர்க்குத்தானஞ் செய்வோர்
நினைவுதருநெஞ்சாலுநினைப்பருங்குன்மாதிவெந்நோய்நீங்கிவான்றோய்
கனைகதிராயிரம்பரப்புகனலிதனதுலகத்திற்கலந்துவாழ்வார்

1275 இரவிமணித்தேர்பூண்டவேழ்புரவியுததிநடுவேறும்வேலை
மருவியவத்தீர்த்தத்தின்மார்கழித்திங்கட்டிங்கண்மாதினோடு
மொருமையுடன்படிந்தாடுமுத்தமர்நற்புத்திரர்ப்பெற்றுவந்துவாழ்வார்
பரவுசிவமந்திரத்தைப் பன்னிமுன்னாட்படியிலரன்பதியிற்சேர்வார்

1276 உறைதருமத்திங்கடனிலொண்கலைசேர்பூரணையினோரைதன்னின்
மருவியவன்புடன்பிரமதாண்டவர்மாபூசைசெய்வோர்மகேசலோகத்
தொருபிரமகற்பமுறைந்துகாந்தத்தினுருத்திரனோடுற்றுப்பின்றைக்
குருமணிநல்விமானமேல்கொண்டுசிவலோகமதிற்குடியாய்வாழ்வார்

1277 பங்கமில்சீர்தருமாகத்திங்கடனில்விசேடித்தெண்டிசைபரப்பும்
பொருங்குகதிரோனுதயப்பொருப்பினிலேழ்பசும்பரித்தேர்பூட்டும்வேலை
யங்கவன்மந்திரநவிற்றியரன்றிருமுன்னருத்தியினோடாடுமாந்தர்
துங்கமுடன்பவமொழிந்துசுந்தமாயத்துவிதமுத்திசேர்வார்

1278 மைக்கிடமாங்கடன்முகட்டின்மான்றேரில்வாளிரவிதோறான்முன்சீர்
மிக்கசிவநிசியினந்தவேகவதிதனின்மூழ்கிவிழிதுஞ்சாது
நக்கனைநான்கியாமத்துநன்கருச்சித்தருந்தானநயந்தீவோரெண்
டிக்குபாலகர்பூசைதினம்புரியச்சிவபுரியிற்சேர்ந்துவாழ்வார்

1279 இப்பரிசங்கமர்ந்துறையுமெல்லையினெம்மீசனருளிருந்தவாறோ
மைப்படியுந்திருநயனவல்லிதவம்புரிதலத்தின்வண்மையேயோ
வொப்பரியநவமணிசேருயர்விமானமதேறியும்பர்சூழச்
செப்பரியவுலகமெலாந்திசைவிசயஞ்செய்தின்பந்திளைத்துவாழ்வார்

1280 மானவுயரிடபரவிதன்னின்மணிகன்னிகைவைசாகமாக
நானமதுபண்ணினர்கணவில்பலதானப்பலமுநண்ணிவாழ்வா
ரானவமுதோதகமாமத்தீர்த்தத்துற்றதக்கிணாயனத்திற்
பானுமதிதனையரவம்பற்றிடுநாண்மூழ்கினரப்பலத்தைச்சேர்வார்

1281 கொடுமறலிதனையிடறுங்குரைகழற்காங்கவனுயிரைக்கொள்ளையீந்த
கடுவடக்குங்கந்தரத்தெங்கண்ணுதலோன்றிருமுனிருகணைபோமெல்லை
நடுவறுநன்மாதவத்துவசிட்ட முனிவன்கண்டவசிட்டதீர்த்தம்
படிபவர்பண்பாடியறுபதந்துவைக்கும்பங்கயன்றன்பதத்தைச்சேர்வார்

1282 கனைகதிரோன்கடன்முகட்டேழ்கடும்பரிபூண்டிடுமான்றேர்கடாவும்வேலைத்
தினம்பொருபோர்க்களத்தசுரர்செங்குருதிமுடைநாறும்வச்சிரத்தான்
மனமகிழ்விற்றருகிருதமாலைமேலணிந்திலங்குமிந்த்ரதீர்த்தந்
தனிலுயர்பங்குனிதருமுத்தரமாடினோர்யாகபலத்தைச்சார்வார்

1283 பார்புகழீராறுதினம்படிந்தாடிற்சாகமகப்பலன்படைப்பார்
சோர்வறநற்றிங்களுவந்தாடினரச்சுவமேதபலத்தைத்துய்ப்பா
ரோர்கரநீரருந்தினரக்கினிட்டோமபலந்தன்னையுறுவர்நாளும்
பேர்பெறும்யாகாதிகன்மம்பேணாதபலன்மூழ்கிற்பெறுவரன்றே

1284 பூரணையிற்கலையொடுங்குங்குவதனிற்சங்கிரமந்தன்னிலிந்து
வாரமதினெடுத்துரைத்தமாதீர்த்தந்தொறுமூழ்குமாந்தரேய்ந்த
வார்கலிசூழுலகத்திலன்னையர்தம்முதரத்திலணுகாரம்ம
வோரினவருமாபதிதனுருவமடைந்திடுவரிஃதுண்மையாமால்

1285 மிக்கவறம்பொருளின்பம்வீடருள்வதாய்மேலாய்விமலமாகித்
தொக்கவரும்புண்ணியமாய்த்தொல்பதியாய்ப்பிதிர்கள்பவந்துடைப்பதாகித்
தக்கனருடவக்கொடிநற்றகுந்திருமால்சதுர்முகன்செங்கதிர்மார்க்கண்டன்
றிக்குலகம்வழிபடுமத்திருநகர்சேர்குநர்க்கரிதுசெப்பினின்றாம்

1286 நவின்றிடுவர்ணாச்சிரமநன்கடைவுபெறநாளுநாடியுள்ள
முவந்துபுரிகுற்றனரேலுரைக்கரிய பரமசிவனுருவமாவார்
தவந்தருமித்தலந்தன்னிற்றகுமிடையுறஃதடையாவகைகணேசன்
சிவந்தமுருகன்வடுகனிவர்பூசைசெய்யினிகறீர்ந்துவாழ்வார்

1287 புகலரியகேதாரமலைகாசிமாகாளம்புட்கரஞ்சீர்
திகழ்கமலாலயந்தில்லைவனந்தீதில்வேதவனந்திருவெண்காடு
மகிழ்தருதென்மதுரைதனின்மருவுகதியைப்பெறுவான்வைகுவோர்சேர்
மிகுபலமானவையனைத்துமேவுவர்பூவணநகரின்மேவுவோரே

1288 ஆதலினித்தலமெல்லாமத்தலங்கட்கதிகமெனவறையுமிந்தக்
காதைபுகழ்தருபிரமகைவர்த்தத்திரண்டுதலையிட்டவென்ப
தோதிடுமத்தியாயத்தினோர்ந்திடுகசவுனகவென்றுரைத்தான்மிக்க
மூதுணர்வின்மேதகுநல்வியாதனருண்மாணாக்கமுனிவர்கோமான்

வேறு

1289 ஆரிரும்பவமாற்றியவாக்கினாலாரணந்தெளிவுற்றிடுமந்தணீர்
சேருநன்பலதீர்த்தவிசேடமாஞ்சீர்தருங்கதைசெப்பிடுஞ்செஞ்சொலோ
ரோர்வுறும்படியோதியமேன்மையோரோர்ந்துசிந்தைகொளுத்திடுமன்பினோர்
பார்புரந்தருள்பார்த்திவராகியேபரவரும்பரமுத்திபொருந்துவார்

தீர்த்தச்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 1289

*****

## பதினெட்டாவது
## நளன்கலிமோசனச்சருக்கம்

1290 அரியவிரதம்பூண்டவந்தணராவையத்தோரங்கமாக
வுரைதருநல்லோருயிராயுறைகின்றசவுனகனையுற்றுநோக்கிப்
பரிவினுடன்பௌராணிகோத்தமனாம்பன்னுதவப்படிவச்சூத
னரபதியாநளன்கலிமோசனமானகாதைதனைநவில்வதானான்

1291 அருளுடனெண்டிசாமுகஞ்சூழுங்கனுலகெங்கனுஞ்சென்றளப்பச்சொங்கோன்
மருவியமண்டலங்கொண்டமாகீர்த்திபுனைந்துமறைவரம்பினின்றோன்
விரவுமறம்பொருளின்பம்வீடடைவானருச்சனைசெய்விருப்பின்மேலோன்
கருதரியபரராசர்கனகமணிமுடியிடறுங்கமலத்தாளான்

1292 முழுதுலகந்தனிலேட்டினெழுதரியசதுர்வேதமுற்றுநாவோ
னழிவிலரனரியதிருவஞ்செழுத்தையுபதேசமருளாசானைப்
பொழிதருநன்மதுவாசப்புதுமலரிட்டருச்சித்துப்போற்றிநாளுங்
குழைவுறுமன்புடனகத்துக்குடியிருத்துங்கோதிறவக்குணக்குன்றன்னான்

1293 அடன்மிகுவெம்படைகாத்தலமைச்சரணட்புடனூக்கமறிவஞ்சாமை
தொடைபெறுநல்லியற்கல்விதூங்காமைதூய்மைதுணிவுடைமைவாய்மை
யுடனுரியகுடிபுறங்காத்தோம்பல்பகையொடுக்கலிவையுடைமைபூண்ட
கொடைமடம்பட்டிடுகோதில்குவலயங்கொள்குங்குமப்பொற்குவவுத்தோளான்

1294 முழங்குதிரைக்கடலுலகமுழுதுமொருமதிக்கவிகைமுறையிற்காத்து
வழங்குகலிவலிதொலைத்துமருவலர்தம்மாருயிரைவாங்கிமாந்திக்
கொழுங்கனற்செங்குருதிதனைக்குடித்துமிகக்குமட்டியெதிர்கொப்பளிக்குந்
தழங்கிலைவேனெடுந்தடக்கைதாங்குநளனென்றுரைக்குமோங்குபேரான்

1295 ஆளுமறைக்குலத்தினன்பினவதரித்தவருங்குலத்தினரசர்கோமா
னீளுமருளுடனோர்நாணித்தநியமக்கடன்கணிரப்பிச்செம்பொன்
வாளுறைசேர்நீள்சுரிகைமன்னீளக்கச்சையுடைமருங்குசேர்த்தித்
தாளதனிற்றொடுதோலுந்தகவீக்கிச்சட்டகமேற்கவசந்தொட்டு

வேறு

1296 கோட்டியசிலைக்கைதாங்கிக்கோதையங்குலியிற்சேர்த்தி
மூட்டியபேராவந்தான்முதுகுறப்பிணித்தியங்க
வீட்டமெங்கனுந்துவைப்பவெண்ணருங்கருவிபம்ப
வேட்டையின்விரும்பிவேட்டுவேந்தர்களோடும்போந்தான்

1297 முடங்குவாலுளைமடங்கன்முருக்கியபுகர்முகஞ்சூழ்
கடங்களுங்கொடிகள்பின்னுங்கண்டகவனமுஞ்செந்தீப்
படர்ந்தெரிவதிற்செங்கஞ்சம்பலமலர்கின்றநற்பூந்
தடந்தருமிடங்களெங்குந்தகுவலைக்கண்ணிசேர்த்து

1298 பூண்டநாண்டொடர்ச்சிநீங்கிப்பொங்குகானெங்குந்தாண்டி
நீண்டவாலினைக்கொழித்துநேர்கடுங்காலினோடிக்
காண்டகுசெவிசிலிர்த்துக்கடுங்குரன்ஞமலிசூழத்
தூண்டியேதொகுவிலங்கின்றொகையெலாந்தொலைவுசெய்தே

1299 பச்சைவாம்பரியேழ்பூண்டபாழியோராழித்தேரோ
னுச்சியினேறும்வேலையுறுகதிர்தெறுதலாலே
நச்சிலையயில்வேலங்கைநளனனிவேட்டையாடி
யச்சிலைவேடரோடுமரும்பசியால்வருந்தி

வேறு

1300 நேடிப்பசுந்தேனிறைமலரினீடுஞ்சுரும்புபண்பாடு
மோடைப்புனலினாடியுவந்துச்சிக்கடன்றீர்த்துயர்தருக்கீ
ழாடற்பரியூரரசர்பிரானங்ஙன்பொதிசோறருந்தியுடன்
வேடப்படைகள்சூழ்தரவேவிரவோர்கன்னல்விழிதுயின்றான்

வேறு

1301 மாயிருஞாலத்தின்னல்வந்தடைந்திடவுமாக
மீயுயர்தருவினின்றுமேதனிவீழ்வதாயுங்
காய்சினத்தரவந்தீண்டிக்காளிமங்களுலத்தன்மெய்
தோயவுங்கனவுகாணூஉத்துண்ணெனத்துயிலுணர்ந்தான்

1302 துண்ணெனத்துயிலெழாமுன்சூழ்ந்திடுமமைச்சர்பாவ
புண்ணியம்புகலுமேனைப்புரோகிதர்விரவிப்போர்வே
லண்ணலிங்குற்றதென்கொலருளுதியென்னமன்னன்
கண்ணுறக்கண்டதீயகனாநிலைகட்டுரைத்தான்

1303 ஆங்கதுகேட்டோர்யாருமரசர்கோன்றன்மேற்பார்வை
தாங்கியோர்சரதமாற்றஞ்சாற்றுவார்தலைவவிந்தத்
தீங்குறுகனவுகண்டதீமைநீங்கிடநற்சாந்தி
பாங்கினாற்புரிதிபின்றேற்பலித்திடும்பகற்கனாவே

1304 ஆதலாலரும்பகற்கணரசர்கண்டுயிறலாகா
வோதிடின்வாதபித்தமுறுகனவந்தியாமத்
தேதமாம்வெந்நோய்சிந்தையெண்ணியதிடையினெய்துங்
காதல்கூரிராக்கடைக்கண்கண்டதுகருதினுண்டாம்

1305 கனைகடன்முகட்டின்வெய்யோன்கடும்பரித்தேரூர்காலை
நினைவுறுங்கனவோர்திங்கணிகழ்த்திடும்பகற்கணேருந்
தனைநிகர்தருமசேதாதனைவிடுகின்றவேலை
யினிவருகனவியம்பிலீரைந்துதினந்திற்சேரும்

1306 கழிதருகனவின்செய்திகாண்டியீதரசரேறே
வழுவறவியன்றதானம்வழங்கிடல்வேண்டுமின்றே
லழிதராதருளல்வேண்டுமறிகவெம்மரசென்றன்னோர்
மொழிதருசாந்திமன்னன்முடித்திலன்முந்தையூழால்

1307 சில்பகல்கழிந்தபின்னர்த்திகழ்மணிப்பூணினானுந்
தொல்பெருந்தானிகோட்டிச்சூதாடியாவுந்தோற்றே
யல்லலுற்றருஞ்சிறாரோடாந்தமையந்தியென்னும்
வல்லிமான்றனையுநீத்துமல்லல்சேர்வனம்புகுந்தான்

1308 புகுந்துகானகத்துநாப்பட்புந்தியையொருப்படுத்துத்
தகுந்திறன்மன்னன்றன்னந்தனியுடன்சாரும்வேலைப்
பகுந்தவாய்ப்பாம்பதாகிப்பகைகொடுநகுடனென்பான்
றிகழ்ந்தமெய்ப்புகழ்மான்றன்னைச்சீறியேதீண்டினானே

1309 சீறியேதீண்டலோடுந்தீவருமரம்போற்செந்தீ
வீறுயிர்நளன்றனக்குவெவ்வராவிடத்தைவீட்டிக்
கூறரிதாகியோங்கிக்கொழுந்துவிட்டெழுந்துமண்டி
மாறுசெய்நகுடன்றானும்வனந்தனின்மறைந்துபோனான்

1310 திவ்வியவழகின்மேலோன்றேசெலாமழுங்கிமாசாய்
வெவ்வராத்தீண்டியங்கம்விகிர்தமிக்குறவேமேவு
மவ்வினைதுஞ்சப்பின்னரறம்பிடித்துந்தலாலே
யெவ்வமுற்றிருதுபன்னனிடத்தவன்றொண்டினேய்ந்தான்

1311 அன்னவன்சின்னாளேகவருந்ததிகற்பினென்னத்
தன்னிகரெழிலினோங்குந்தமயந்திசொயம்வரத்துக்
கின்னருட்டலைவனாகியின்னறீர்ந்திருதுபன்ன
மன்னவன்றன்னோடேகிமாதினைவல்லைசேர்ந்தான்

1312 ஆங்கவன்பின்னுஞ்சூதங்காடிமுன்னவனைவென்ற
பாங்குடன்றனதுதொல்சீர்ப்படியெலாமடைவிற்கொண்டு
தீங்குறுங்கனவுவந்தித்தீமையைப்புரிந்ததென்னாத்
தாங்கியபூந்தார்மார்பன்றன்னுளங்கொண்டுமன்னோ

1313 தங்குதீர்த்தங்கடோய்வான்றமயந்தியென்னுமாது
மங்கலந்தருநன்மைந்தர்மந்திரித்தலைவர்சூழ
வெங்கணும்பரவுஞ்செம்பொனினமணித்தேரினேற்றிப்
பொங்குவெம்படையினோடும்புரவலன்கொண்டுபோந்தான்

வேறு

1314 கேதாரமவிமுத்தங்கிளத்துகயைபிரயாகைகிளர்வானோங்கும்
போதார்ந்தவடகானம்பொங்கியெழுங்காளிந்திபுகலவந்தி
காதார்ந்தகுழையனரித்துவாரமிகுமாளவமாகதங்கரகோல
மாதாரமாத்திநகர்பஞ்சாப்சரத்தோடாரணநற்கானம்

1315 பிறங்குகிருட்டினகானஞ்சடாயுதலஞ்சோமேசம்பீமகானஞ்
சிறந்திடுமஞ்சேசுரஞ்சல்லிகாயாவனங்கோகுரரேசந்தீதி
லறங்கரைநால்வேதவியாதாச்சிரமம்வெதிரிகாச்சிரமமாதி
கறங்குதிரைக்காவிரிசூழ்கருதுதிரிசிராக்கியமுங்கண்டுமன்னோ

1316 தெண்டிரைமோதிக்கறங்குந்தீர்த்தமவையாடியவன்மூர்த்திபேணிப்
பண்டருநற்குறுமுனிவன்பன்னுதமிழ்ச்சொன்மணக்கும்பாண்டிநாட்டில்
வண்டலெடுத்தலைபுரட்டும்வைகைநதியுடுத்தமதுராபுரேசன்
கண்டுறுசொற்சயனயனகர்ப்பூரநாயகிதாள்கண்டுபோற்றி

1317 கொடிமாடமதிற்கூடற்குணதிசையோசனையெல்லைகொண்டிலங்கும்
பொடிமூடுதழலெனவேபொருந்தியதென்பூவணத்திற்பொருந்திநாளும்
படிநீடுபுகழ்கொண்டபாதாளநாதனையும்பங்கிற்பச்சை
வடிவோடுமுடனாகிவளர்நாதவதிதனையும்வந்தித்தேத்தி

1318 முழுதுலகும்புகழ்தரமும்முரசுநின்றுமுழங்குமுன்றின்முழுவுத்தோளான்
வழுவில்பதிமகிமையையுமனத்துறுநின்மலத்தினையுங்கண்டுமுன்ன
மழிவுறவெஞ்சூதாடியலமரவெங்கலிநலியவகன்றிடாவெம்
பழிகழுவும்படிகுறித்துப்பரிமேதயாகத்தைப்பண்ணலுற்றான்

வேறு

1319 ஆதியந்தமிலாதவரன்றிருக்
கோதிலாதபொற்கோயிற்குடதிசை
யோதுகூவிளியெல்லையினோங்கவே
காதல்கூர்கனகத்தலக்கம்மியர்

1320 மாகநீணவமாமணிகொண்டுவே
தாகமப்படியாயிரந்தூணிறீஇப்
போகமன்னியபொன்னகரென்னவே
யாகமண்டபமேத்தவியற்றினார்

1321 மந்தமாருதமூரும்வசந்தநாட்
கந்துகம்பட்டங்கட்டிவிடுத்திசை
நந்தும்வேதியரோடுமந்நன்னளன்
றந்தவேள்வியஞ்சாலையிலேறினான்

1322 ஓடுவாம்பரியுற்றகுளப்படி
நாடியோமநயந்துபுரிந்துபொன்
னாடையாபரணங்களணிந்தணி
நீடுவேள்வித்தறியைநிறுவியே

1323 ஆண்டுதானென்றறைவபையாதியான்
மாண்டருங்கனல்வேள்வியமைத்தபின்
வேண்டுமாறுசுவையின்மிதவைமெய்
பூண்டவேதியர்பூசைபுரிந்தனன்

1324 ஆசிலவ்வருடாந்தத்தருந்தமிழ்
வாசமாமலயத்துமந்தாநிலம்
வீசுங்காலத்துமின்னனையோடும்வந்
தீசன்விண்ணவரேத்தவங்கெய்தியே

1325 மேவுமந்தமிகுந்திரையாயுக
மோவில்பல்புகழோங்குநளன்றனக்
கியாவுநல்கியிருங்கலிதீர்த்தருள்
பூவணேசன்பொற்கோயில்புகுந்தனன்

1326 எந்தஞான்றுமிருந்துவிளைத்திடு
முந்துகாதலரோடுறுவைகையி
னந்தவேந்தனவபிருதப்பெயர்
தந்தநானமுந்தானமுஞ்செய்துபின்

1327 செங்கனற்றனைச்செய்துத்தியாபனம்
பொங்குபூவணத்தெம்புனிதன்றனக்
கங்கண்மாநிலமெங்கணுமாற்றவே
மங்கலோற்சவமன்னனுண்டாக்கினான்

1328 பிரமகைவர்த்தமாமிப்பெருங்கதை
சரதமூன்றுதலையிட்டவெண்பதா
முரியவத்தியாயந்தனிலோரர்திநீ
நரநளேந்திரநன்கலிமோசனம்

1329 இந்தநளன்கதை
சந்தமுடன்புகல்
சிந்தையுவந்தனர்
வெந்துயர்சிந்துவார்

நளன்கலிமோசனச்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 1329

*****

## பத்தொன்பதவது

## திருவிழாச்சருக்கம்

1330 எனநற்புராணமுனிசொற்றலோடுமெழுதாமறைச்சவுனகன்
புனிதந்தயங்குபுகழ்தங்குகங்கைபொதிசெஞ்சடைச்சங்கரன்
றினமன்புகூரமகிழுற்சவங்கொடிருநாள்புகுந்ததனைநீ
துணிநந்தவோதுகெனஞானநீடுதொழின்மேவுசூதன்மொழிவான்

1331 வேதாகமத்தின்விதியோதுகீர்த்திவீசும்வைகாசிரவியிற்
பாதாளவீசன்மகிழ்வோங்குபூர்வபக்கங்கொள்பக்கமதனி
னோதாளியத்தினோரேழ்தினத்தினுறுவேதபாரகர்தமாற்
கோதேதுமில்லதொருகோவிலங்குகொடியேற்றுவித்தனரோ

1332 பகர்பல்லியங்களுடனீள்பதாகைபணியொன்றுமல்குன்மடவார்
விகிர்தங்கொள்சோதிமணிகொண்டிறைத்தமிகுமாடவீதியிடைநீண்
மகரந்தயங்குமணிதோரணங்கண்மணிவாயிறோறும்வதியச்
சிகரங்கொள்செம்பொன்மணிநின்றிலங்குதேரூர்விழாக்கண்டனன்

1333 ஒருகோடிசெம்பொனவைநல்கிநீடுமுலகெங்குமோங்குதிருநாட்
டிருநாளுநின்றுநடமாடுகின்றதென்பூவணத்தினிடைகண்
டருண்மேவுதீர்த்தவிழவும்விருப்பினணிசேர்தரக்கண்டனன்
பரராசர்செம்பொன்முடியாற்சிவந்தபாதாரவிந்தநளனே

வேறு

1334 கலைக்கடல்கடந்தனர்கரைகண்டோதமால்
விலக்கரும்வேதநூல்வேள்வியாற்றிநல்
லிலக்கணவிழாவணியெடுத்தலானளன்
றொலைக்கருங்கலியெலாந்தொலைக்கின்றானரோ

1335 மற்றையநளனெனுமன்னர்தம்பிரா
னுற்றவெம்பிரான்றனையுவந்துதாழ்ந்தெழீஇ
வெற்றிசேர்படையொடும்விடைகொண்டேயுயர்
பொற்சுவருடுத்ததன்புரியிற்போந்தனன்

1336 அந்த நல்விழாவணியடைந்துகண்டுளோர்
பந்தவெம்பவமெலாம்பற்றறுத்துநற்
கந்தமேகமழ்செழுங்கமலபீடிகைச்
செந்திருவளத்தினிற்றிளைக்கின்றாரரோ

1337 வருந்தியேயாயினுமாக்கள்பாதலப்
பரன்றிருத்தேர்விழாப்பணிதல்வேண்டுமாற்
றிருந்தொருதினந்தரிசித்துளோர்களும்
பொருந்துவரழிவிலாப்போகமுத்தியே

1338 அந்திவண்ணத்தனையண்ணலங்கைவேற்
கந்தவேணந்திதன்கணங்கடம்மொடுஞ்
சந்ததம்பல்லுயிர்தழைப்பநாடொறும்
புந்தியிற்பூணவம்போற்றல்காண்டிநீ

1339 உத்தமமாநவதீர்த்தத்துண்மையு
மித்தலப்பெருமையுமெடுத்தியம்பொணா
தத்துணையெனினுநெஞ்சமைகிலாமையாற்
சுந்தநற்சவுனகதொகுத்ததுச்சொல்லுகேன்

1340 அவிழ்ந்திடுமபுத்திபூருவமதாய்ச்செயும்
பவங்களிப்பூவணப்பதியைக்கண்ணுறிற்
றவிர்ந்திடும்புத்திபூருவத்திற்சார்பவ
முவந்தொருமதியுறிலொழியுமாலரோ

1341 சந்தநான்மறையவர்தம்மைநிந்தைசெய்
பந்தபாதகமெலாம்பாறல்செய்திரு
மெந்தையெம்பிராட்டிபாலியைந்திலங்கிடு
மந்தநற்பதியரையாண்டுமேவினால்

1342 பூரணைதனின்மணிபொருந்துமேடையி
லாரருளுடன்படிந்தண்ணல்சென்னிமேல்
வாரிசந்தயங்குபூமாலைசாத்தினர்
நேர்குவரத்தினநினைந்தயாவுமே

1343 மேவுபூரணையுறுவிசாகத்தோங்குதென்
பூவணத்திறைக்குநற்பூம்பட்டீகுநர்
பாவமானவையெலாம்பற்றறுத்தரோ
தாவில்சந்ததியுடன்றரணிதாங்குவார்

1344 அன்றியேகயிலையினணைந்தநந்தநாள்
வென்றியினவமணிவிமானத்தேறியே
துன்றுபூம்பொழிறொறுஞ்சுவேச்சையாலுறீஇச்
சென்றரனுடன்சிவபுரியிற்சேர்குவார்

1345 செப்புமுத்தராயணந்தெக்கிணாயனந்
தப்பிலாவிடுக்களிற்சார்ந்தமாகத்தி
னொப்பருங்கலைகளோதாதநாட்களி
னப்பெருஞ்சுடர்களையரவந்தீண்டுநாள்

1346 இந்தநற்றீர்த்தங்களினிதினாடியே
யந்தணரங்கையினரியதானங்கள்
சிந்தையின்மகிழ்ந்தினிதீகுவோர்கடாம்
வெந்துயர்ப்பவங்களைவேரறுத்தரோ

1347 அன்னநல்லணிகலமாரருந்துகின்
மின்னிடைமாதரார்வீணைநன்மணம்
பன்னுகாய்நூறடைபஞ்சுப்பாயலே
யென்னுமிப்போகமோரெட்டுமேய்வரால்

1348 இந்தநற்பிரமகைவர்த்தத்தீங்கிதை
நந்திமுன்சனற்குமாரற்குநன்கருள்
பந்திசேர்கின்றவெண்பானொர்நான்கதா
மந்தவத்தியாயத்தினருளிற்காண்டியால்

வேறு

1349 சந்திவந்தனைதந்தமாதலஞ்சங்கரன்புகழ்தங்குமாலயஞ்
சுந்தரந்திகழ்கின்றபூசனைதுன்றுமன்பர்தொடங்குமாமட
மிந்தவண்கதைபண்பினோதுநான்புடன்செவிகொண்டுதேர்குநர்
சிந்தைவெந்துயரங்கடீர்குவர்செம்பொனம்பதிசென்றுசேர்வரே

திருவிழாச்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 1349

*****

## இருபதாவது
## சிதம்பரவுபதேசச்சருக்கம்

1350 தனைநிகரரியதவமொருவடிவாஞ்சதுர்மறைச்சவுனகவயன்மா
னினைவருஞ்சகளநிட்களவடிவாநிமலனானந்ததாண்டவத்தை
முனிதருதிமிரமுக்குறும்பெறிந்தமுனிவரர்க்கருளியமுறைமை
யினிதுகேளெனக்கட்கமல்நீர்பொழியவெடுத்தருட்சூதனாங்கிசைப்பான்

1351 மேவுநல்வேதவியாதனெண்வசிட்டன்மிக்கசீர்க்கவுதமன்வாம
தேவன்மார்க்கண்டனங்கிராத்திகழத்திரியதீதரன்சதானந்தன்
றாவில்பாரத்துவாசனக்கினிபன்சவுனகன்மவுனபாற்கரனோ
டோவறுமனையமுனிவர்மாணக்கருடன்மறைமுழுதுநன்கோதி

1352 தெரிவருஞ்சீர்மத்தியானகாலத்திற் றென்றிருப்பூவணந்தன்னி
னொருவருமுள்ளத்துணர்வுடன் றூங்கியுவந்தினிதுறைதருமதனாற்
புரையிகந்தோங்கும்புகழ்சதுர்வேதபுரமெனப்புகன்றிடுமுலக
மருள்பழுத்தின்பத்தழுந்துமாதவவிவ்வருந்தலப்பெருமையாரறிவார்

1353 அறையுமத்தலத்தின்முறைவியாதன்பாலருளுபதேசநன்கடைந்து
செறிசடாடவியிற்சிறுபிறைமுடித்தசிவபிரான்றன்னைநேர்நோக்கி
மறையினற்றுறைபோமாத்தியந்தினனுமருவியதியானகாட்டனுஞ்சீ
ருறுமுயர்நிலைசேரும்பராண்டொருநூறுரைக்கருந்தவமுழந்தார்கள்

1354 கனைகதிர்தெறுநாட்கழறுமோரைந்துகனல்வளர்த்ததனிடைநின்று
நினைவருஞ்சீதநிகழ்ந்தகாலத்துநீர்நடுவாகியேநின்றுந்
துனியறுமுந்தித்தழற்சுழுமுனையாற்றுவாதசாந்தந்தனிற்சொலிப்ப
மனமகிழ்ந்தெங்கோன்மலைமகளோடுமழவிடைவந்துதோன்றினனால்

1355 குழகன்மால்விடைமேல்கொண்டுமுன்றோன்றிக்குறுகலுங்கோதிலாத்தவத்தோர்
விழுமநன்படிமேல்விழுந்தடிபணிந்துமெய்ம்மயிர்பொடித்திடவுள்ளந்
தழன்முகங்கண்டமெழுகெனவுருகிச்சதுர்மறைப்பாடலிற்றுதிப்பக்
கழைதருசிலைக்கைக்காமனைக்காய்ந்தகண்ணுதல்கருணைசெய்தருள்வான்

1356 மதிக்கரும்பெரியமாதவமுடித்தமாத்தியந்தினனையுநினைவிற்
கதித்திடுந்தியானகாட்டனாமுநிபுங்கவனையுங்களிப்புடன்கண்டு
விதிக்குநல்வரங்கள்வேண்டியதளிப்பமேலினும்வேண்டுதிரென்னாத்
துதித்துவண்டினங்கடுவைத்திடுங்கமலத்துணைப்பதந்தொழுதிவைசொல்வார்

1357 அலகிலண்டங்கட்கருள்சுரந்தளிக்குமமலநீயருள்வடிவாகி
மலர்மயிலுறைபூவணநகர்மிகுமாமந்திரமானவைந்தெழுத்தை
நிலைபெறவெமக்குநிகழ்த்தியானந்தநிருத்தநீயளித்தருளென்னாக்
கலைமதிபுரட்டுங்கங்கையஞ்சடிலக்கண்ணுதற்பண்ணவன்கரைவான்

1358 மெய்த்தவம்புரிகான்மீரதீரத்தின்வேதநான்காதிநூல்வருணர்
சத்தியஞானதாண்டவங்காணத்தந்தருள்வாயெனமுந்தைச்
சித்திரகூடஞ்சேர்ந்திடுமெனவேசெப்பவாங்குற்றனாவரோ
டத்திலைவனத்திலானவானந்தவருணடங்குயிற்றிடல்காண்பீர்

1359 உரைத்திடினிந்தவுலகின்மேலாகியோதரிதாயநால்வேத
சிரப்பொருளாகித்திகழ்ந்திடுமிந்தத்திருவெழுத்தஞ்சினைச்சேர்த்து
விரித்தியாமிவணேமேவுபதேசம்விதிப்படிவிளம்பியானந்த
நிருத்தமாடுதுநுமுளக்கமலமதாநிகழ்திருவம்பலந்தன்னில்

1360 இந்தலமானந்தத்தலமாகுமிழைத்திடுந்தவமுடனெய்து
நித்தியானந்தந்தன்னைநெஞ்சகத்தினினைக்குநர்தமக்குநேர்விக்கும்
வைத்திடும்புகழான்மிக்குயர்ந்தோங்கும்வைரமொன்றின்றியேவைகுஞ்
சத்தியஞானதவத்தர்காளீதுசத்தியஞ்சத்தியமாமால்

1361 முதுசுவைதருமாரமுதவிந்துவிற்றான்முளைத்திடுஞ்சுரர்தருவொன்று
துதிபெறுகிரேதாயுகமதுமுன்னாச்சொற்றகுநான்குகந்தொறுமிப்
பதிதனிற்பாரிசாதமாலூரம்பன்னருமுயர்புகழ்வன்னி
திதமுறுசெம்பொற்சுனைக்குடக்கனிசேர்தீம்பலவாகியேதிகழும்

1362 தாதருகுடுத்தசோதிசேர்மடற்பூந்தகட்டுநற்றபனியப்பொகுட்டு
மேதகுகமலவேதன்மாலாதிவிண்ணவர்நண்ணரும்பரமப்
பாதலத்திடைநின்றெழுந்ததொர்தாபரமாய்ப்பழவடியார்க்கருள்பொழியுங்
காதல்கூர்தலம்போற்கழறுநாண்முன்பின்கருதருங்காட்சியின்மிகுமால்

1363 ஆதலினிந்தவரும்பிரணவமாமஞ்செழுத்தருளுபதேசந்
தீதறக்கொடுநீர்தில்லையிற்சேர்மின்செம்பொனம்பலந்தனில்யாமே
காதலினிருத்தங்காட்டுதுமிந்தக்காசிறென்பூவணக்காசி
யோதிருமுபதேசத்துளநடனமுஞற்றுதன்மந்தணமாமால்

1364 செப்புறுமிந்தத்திருநகர்மேலாஞ்சிதம்பரமெனும்பெயர்திகழு
மொப்பிலாவிதனிலொருகணமேனுமுறைகுநர்க்கானந்தநிருத்த
மெய்ப்படஞானம்விளங்கிடவளிப்போமென்னலுமிகமகிழ்கூர்ந்து
தப்பிலாதுயர்ந்ததவமுயன்றரியசஞ்சிதவினையறுந்தவத்தோர்

1365 அற்புதத்துடனங்கடிபணிந்தேத்தியன்புடனங்கணன்றன்பா
லுற்பவந்துடைக்குமுற்றவஞ்செழுத்தினுரையுபதேசநன்குணர்ந்து
சொற்பதங்கடந்தசோதிதன்னருளாற்சுத்தமாமுளக்கமலத்திற்
சிற்பரானந்தத்திருநடங்கண்டுதென்றிருத்தில்லையிற்சென்றார்

1366 சிந்தையின்மகிழ்ந்ததிருமறைமுனிவர்தில்லையினெல்லையைச்சேர்ந்து
முந்துறக்கண்டுமூலகாரணமாய்முளைத்திருமுதல்வனைமுறையாற்
புந்திகொண்டுரியபூசையும்புரிந்துபுலிபதஞ்சலியுடன்கூடிச்
சந்ததம்விளங்குந்தபனியப்பொதுவிற்றாண்டவங்காண்டகவிருந்தார்

1367 இத்தலமதனுக்கின்னுமோர்நாமமியம்பின்மாபாதகநாச
வுத்தமநாமமுற்றிடுமதனாலுமைதிருமாலயன்வெய்யோன்
வித்தகமுனிமார்க்கண்டனெண்டிசையோர்வேந்தரெண்குருகுலவேந்தர்
புத்தியும்பொருவின்முத்தியும்பொருந்தப்பூசனைபுரிந்தனர்மாதோ

1368 அன்றியுமுனிவரிராக்கதரசுரரானநன்முனிவர்களேனோர்
கன்றிடும்பவங்கள்கழித்துநன்கிட்டகாமியமளிக்குமித்தலத்திற்
கொன்றையஞ்சடிலக்குழகனையுள்ளங்கொண்டருச்சனைவிதிகண்டாங்
கொன்றியவன்பினுடன்பணிந்தேத்தியுத்தமமுத்தியினுற்றார்

1369 அங்கணனுடன்வாதாடிமாகாளியாடியதோடமதகலச்
சங்கரன்றனக்குத்தரதிசையிரண்டுசார்தருகூவிளிதூரத்
தெங்கணும்புகழ்காளீச்சுரலிங்கமினிதமைத்தருச்சனைசெய்து
வெங்கொடும்பவத்தைவேரறுத்திட்டமேன்மைமூவுலகினும்விளங்கும்

1370 பொருதிரைக்கடல்சூழ்புடவியிற்பூர்வம்பொருந்துமீரறுவருடஞ்சூழ்
வருகிரகங்கள்வக்கிரமுறலால்வான்முகின்மழைவறந்திடவே
தரைவளந்தணப்பச்சலந்தருவடிவச்சலந்தரன்றானொர்மண்டுகமா
யருமணங்கமழுமலர்தருமலரியடியினாங்கமர்ந்தினிதிருந்தான்

1371 அப்புனற்சீதமடைதலினலரியரியநெட்டிலையுடனரும்பித்
துப்புறழ்சடிலச்சோதிதன்முடிமேற்சூட்டிடக்கண்டுமுன்றோன்றித்
தப்பறவந்தச்சலந்தரன்றனக்குத்தலம்புரந்தருளரசளித்துத்
திப்பியமுறமாலயன்முதலேனோர்சிதைக்கரும்வாழ்வுமீந்தனனால்

1372 மேதகுவரத்தான்மிடலுடன்றோன்றிமிக்குயர்விரிஞ்சன்மால்விண்ணோ
ராதிபுத்தெளிர்க்கநந்தையேவிளைப்பவாங்கவர்வெருவியேயந்த
வாகையைச்சுமப்பான்வலிபெறாமையினான்மங்கைபங்கொளிர்ந்திடுமெங்கோன்
பாததாமரையிற்பணிந்தவனுயிரைப்பறித்திடல்வேண்டுமென்றிரந்தார்

1373 ஆயதுகாலைமாயவன்கரத்தினாயிரஞ்செங்கதிர்பரப்பு
மீயுயர்கோடிவெய்யவரொளியைவிளக்கிடுஞ்சக்கரமளித்துத்
தீயுமிழ்நெற்றிச்செங்கணாற்கன்னற்செஞ்சிலைக்காமனைச்செற்றுத்
தாயுமாயுயிர்க்குத்தண்ணளிசுரப்போன்சலந்தரனுடறடிவித்தான்

1374 அச்சலந்தரனுக்கருச்சனைக்கேற்றவாய்மலரளித்திடும்பலத்தா
னிச்சயம்பெறநீடாழிசூழுலகினெடியமாலயனரிவரிதாம்
பச்சைமாமயிலோர்பாதிநின்றிலங்கும்பரஞ்சடர்பன்னகாபரணன்
முச்சகம்புகழுமிக்கபூவணத்தின்முத்தியையளித்தனனன்றே

1375 பொலங்கலன்சுமந்தபொற்கொடியிடமாம்புண்ணியன்பொற்பதந்தன்னி
லலர்ந்தநற்செந்தாமரைமலரொடுகண்ணருமலரிட்டருச்சித்துச்
சலந்தரனுடலந்தடிந்திடுமிந்தச்சக்கரந்தன்னைமால்பெற்றா
னலந்திகழ்ந்தோங்குநானிலம்புகழுநற்றமிழ்ப்பூவணநகரில்

1376 இன்னுமோர்காதைதன்னைநீகேண்மோவிந்தநற்பூவணந்தன்னிற்
றுன்னிவண்டிமிருந்தொகுமடற்றாழைதூமலர்த்தாமரைக்கோயி
லன்னவூர்திக்காவன்றுமாறம்முனரியபொய்க்கரிபகர்ந்ததனான்
மன்னியதோடமாற்றியபூசைமகிழ்ச்சியிற்புரிந்ததும்வகுப்பாம்

வேறு

1377 பண்டொர்நாளறுபதமுரன்றிசைபாடியேநடமாடுபொற்
புண்டரீகமலர்ப்பொகுட்டுறைபுங்கவன்புகழ்தங்குவை
குண்டநண்ணியிம்மண்டலந்தருகுரிசில்யானெனவுரைசெய்தே
தண்டுழாய்மலர்மாலைசூடியசார்ங்கபாணியொடறைகுவான்

வேறு

1378 ஏதமேதருமேழ்பிலங்களுமேழொடேழ்புவனங்களு
மோதுதெண்டிரைசேர்கருங்கடலொழுகநன்குமொழிந்திடும்
பூதலந்திகழேழுதீவுயர்பொன்னெடுங்குடுமிப்பொருப்
பாதியட்டகுலப்பருப்பதமானவண்டமடங்கலும்

1379 வித்தகந்திகழ்மரீசிகாசிபன்விளங்குமைந்தரவர்மைந்தரா
கத்துநேமியமுதத்தைநக்குமுகில்கருடகந்தருவர்சந்திரா
தித்தர்சித்தர்கள்வசுக்கள்கிம்புருடர்திக்குபாலர்கணநாதர்வா
னித்தமானதினநீடுதாரகைகணேரில்வானவர்கடானவர்

1380 எண்ணில்பல்லுயிருமெண்ணிரும்பொருளுமன்படைப்பினிலியைந்ததாற்
றிண்ணமீதுமுகில்வண்ணநீயுயிர்திதித்திடுந்தொழின்மதித்திடே
லுண்ணினைந்திலைகொலுன்னையொன்பஃதுடன்பெறும்படிபடைத்தனன்
கண்ணவின்னுமுயிர்காக்கவேண்டிலொருகண்ணனைத்தருவல்காண்டியால்

1381 என்றுவேதியனியம்பலுஞ்செவியினெறிகொளம்படையையெறிதல்போற்
கன்றுகொண்டுகனியன்றெறிந்தமுதுகடவுணெஞ்சமதுகன்றியே
துன்றுவெள்ளெயிறுதின்றுவாயிதழ்துடிப்பமாமுகிலிடிப்பபோ
னன்றுநன்றெனநகைத்துமாமுடிதுளக்கிமேலிதுநவிற்றுவான்

1382 நாதகீதசதுர்வேதவென்கமலநாபிவந்ததுமறந்துநந்
தாதையென்றுமதியாதுதர்க்கவுரைதருதியானதுதரிக்கிலேன்
பேதமில்லதொர்பிதாமகன்னெனுமொர் பெயர்புனைந்துமதுபேணலா
தோதுநீயொருவர்பாலுதித்தவருரைத்திடாமொழியுரைசெய்தாய்

1383 நளிர்கடற்புவியினிலவுடல்களுமெனன்படைப்பெனநவிற்றினாய்
மிளிர்பிறைக்கணிமிலைச்சுசெம்பவளவிரிசடைக்கடவுண்மேலைநாட்
குளிர்படைக்கையுகிர்கொண்டுநின்னொர்தலைகொய்ததின்றுமதுகூடிடா
தொளிருயிர்த்திரளுமுலகுநீகருதியுதவுகிற்பதையுரைத்திடாய்

1384 ஈதலாதினமியம்பியென்னபயனேடவென்னநெடுமாலய
னோதுகின்றதெவனுந்திபூத்தவனினுந்திதந்தவினையோதினாய்
சோதிசேர்கனகனேற்றவன்றுதிரடுணில்வந்துவெளிதோன்றினா
யாதலாலிரணியன்கொல்கந்துகொனினத்தனென்பதையுரைத்திடே

1385 மாசிலாதமணிமார்பவென்னமதுவாசமேவுகமலாசன
னேசமோடரவினுச்சிநின்றுநெறுநெறுநெறென்னநடமாடுவோன்
பேசொணாதவதிகாரநிற்கருள்செய்பெற்றிதன்னையுமயர்த்தெனை
யேசியேவசைகள்பேசிநீகருதியின்றுவந்தனையெனென்றனன்

1386 என்றுமாலயனின்னபோல்வவெடுத்திசைத்தெதிர்கூவியே
கன்றிநெஞ்சுகலங்கியேமிகுகண்கள்வெங்கனல்சிந்தியே
குன்றுபோன்றெழுகுவவின்மொய்ம்புகுடங்கைகொட்டினரார்த்தனர்
வென்றிசேருலகெங்குமஞ்சினவிண்டதண்டகடாகமே

1387 உடுதிரட்கணமவைகளுக்கனவுற்றபொன்மலைகீறியே
பொடிகள்பட்டனதிக்கயங்கள்புதைத்தகண்கள்புயங்களின்
படமடங்கியபிடியடங்கலுநடுநடுங்கினபலகதிர்ச்
சுடர்களுந்திசைமாறியோடினசுரர்கணெஞ்சுதுளங்கினார்

1388 எதிர்த்துவந்துடனெருக்கிவிண்ணினிடையேற்றுவீழ்ந்துபினுமெங்குமெய்
விதிர்த்துமேல்சுழலலோடுயிர்த்தணிகொள்வீங்குதோளின்முறைதாங்கியே
குதித்தலோடுநனியாடிவெற்றியதுகூறியங்கைகொடுகுத்திடாத்
துதித்துநின்றுதமின்மாறிமாறியெதிர்துள்ளிமிக்கமர்தொடாங்கினார்

1389 இந்தவெஞ்சமருடன்றவெல்லையினொரிறைவனோரிருவர்தங்கள்பா
னந்தமாநிலமடங்கலுந்திகிரிநன்குருட்டுகெனவங்கடைந்
தந்தவேவலர்கடந்தமக்கெனவறைந்துபோர்செயமையந்தனிற்
றந்தமன்னவரவர்க்களித்தவதிகாரமாற்றவருதன்மைபோல்

1390 கூடுபாதலமோடுமெல்லைகள்கூடிவேர்விழுந்தோடியே
நீடுமண்டகடாகமெங்குநிறைந்துமேலுநிகழ்த்திடுங்
கேடிலாதபலண்டமானவைகீழ்படக்கனலாகியே
தேடருஞ்சிவலிங்மொன்றவர்முன்னமன்னியசின்னமாய்

1391 சின்னமுன்னுறல்கண்டுமன்னவர்சிந்தையிற்கொடுதேறியே
மன்னுநம்பரமென்றுநாடிவணங்குதற்குமனங்கொளா
தின்னருட்குறிதன்னைநாடுகவீதுநந்துணையாமெனாப்
பின்னருந்தமகந்தைகொண்டிவர்பேசினார்கடம்வாக்கினால்

1392 தீதிலிந்திரனாதிமேதகுதேவர்நீர்கரிதேர்கெனாச்
சோதிலிங்கமதாகநம்மெதிர்தோன்றுகின்றதழற்குறி
யாதியந்தமறிந்துளோரெவராவரேமுதலாவரென்
றோதினார்மறையாவுமாசறவோதுகேமெனுமமர்போல்

வேறு

1393 திருமாலுமொருநாலுமறைநாவின்விளையாடுதிசைமாமுகப்
பெருமானுமயர்தந்தவரனதடிமுடிதேடுபேராசையா
லொருநாளுமுலையாதவிருகோடுகொடுமன்னியுறுகோலமு
முரமேவுவெண்டுவியழகாகுமன்னவுருவும்மாகியே

1394 பஞ்சாயுதக்கடவுளோர்கணத்தாயிரங்காவதம்படியிடந்துங்
கஞ்சாசனக்குரிசில்கணமரையிராயிரங்காவதம்விண்பறந்துஞ்
செஞ்சோதிதருமழற்சின்னத்தினடிமுடிதினந்தேடியுங்காண்கிலார்
நெஞ்சாலுநினைவரியநீடூழியூழிபலநிகழ்தன்மையதுகண்டனர்

வேறு

1395 முன்னமேவுங்கோலமுகமும்பிறைக்கோடுமொய்ம்பின்றியே
வன்னியாருஞ்சோதியின்னொன்றுமின்றிமெய்மழுங்குற்றிடத்
தன்னுளேதடுமாறியறியாமலரிமீண்டமரர்தங்குலந்
துன்னியயன்முடியறிகிலானென்னவைபந்துணிந்தெய்தினான்

1396 நாலாரணன்சிந்தைநலிவெய்தியனமாகிநனிசென்றுதான்
மேலானவண்டங்கண்முறையேறுசிறைகொண்டவிசைசிந்தியே
மாலானவன்சிந்தைமாலாகுமோபாதமலர்காணுமோ
வேலாதெமக்கென்னவிடைநின்றுமேறுமோவெனவெண்ணியே

1397 போதும்மியானுற்றதுயரங்கொலென்னாப்புலம்புற்றபி
னேதிங்ஙனுரைசெய்வலென்னேயிதென்னேயெனுங்காலையின்
மூதண்டகூடத்துமுடியாதமூர்த்திசடைமுடிநின்றும்வீழ்
காதன்மிகுங்கைதைதனையுமெண்கண்கொண்டுகண்டானரோ

1398 கண்டங்கைகொடுநண்புகொண்டெங்ஙனுற்றடைதிகழறென்னயான்
பண்டங்குவேதங்களறிவரியவிந்தப்பரஞ்சோதியுட்
கொண்டன்புறுஞ்செய்யகோடீரபாரம்மதின்வீழ்குவேய
னெண்டங்குகைநாற்பதின்னாயிரஞ்சதுர்யுகம்மெய்தினேன்

1399 விடுவிடிங்கெனையென்னவிடையுகைத்தேவரும்விமலன்சடா
முடிநின்றுமதுதவறிவீழ்தரலினுயிர்பெற்றுமொழியுமதனா
லிடர்நின்றெமைக்காக்கவிஃதிங்ஙனினைகின்றதெனநெஞ்சிடைப்
படிறொன்றுரைத்திடப்பங்கயப்பகவனிப்பரிசுன்னினான்

1400 கண்டாதரிக்கவருகைதையேதாழையேகண்டலேநீ
பண்டாருமறிவரியபையுளையகற்றவருபான்மையாலே
விண்டாரணிக்கணெற்குன்போலுயிர்த்துணைவிளம்பிடின்வே
றுண்டோவதற்கையமின்றாகுமுரைசெய்வலொன்றுகேண்மோ

வேறு

1401 ஆணையானன்மறையவனாகுமித்
தாணுவாமழற்றம்பத்தடிமுடி
நாணுறாதந்தநாரணனோடியான்
காணுமாறுகருத்தினிற்கொண்டனன்

1402 அற்புதத்தினிரும்புவிகீண்டுகாண்
கிற்பனாலெனக்கேழலுருக்கொடு
சொற்கடந்தவிச்சோதிலிங்கந்திகழ்
பொற்பதந்தனைத்தேடிமுன்போயினான்

வேறு

1403 கூடியபல்லுகங்கொண்டநாண்முத
னாடிவந்திச்சிவலிங்கநன்முடி
தேடியுமின்னும்யான்றெரிசிக்கின்றிலேன்
வாடினனீயருள்வழங்கல்வேண்டுமால்

1404 கரியமாலாகியகடவுளானுட
னருளினிற்பொருந்தியிவ்வன்னமாயினோன்
குருமிகுதழலுருக்கொண்டவெம்பிரான்
றிருமுடிகண்டனனென்றுசெப்புவாய்

1405 நஞ்சடவருதலுநாரிபாகனுண்
டஞ்சலென்றமரரையளித்ததோர்தியாற்
றுஞ்சிடவந்தநாட்சொல்லரும்பெரு
வஞ்சகம்பொய்யுரைவழங்கலாகுமால்

1406 நறுமடற்றாழைதன்னம்பினோற்குநண்
புறுவதிவ்வுடற்கணேயுதவல்வேண்டுமாற்
பெறுவதுகருதிநண்புறுதிபோற்றியே
மறுமையினுஞ்செயவரம்புண்டாகுமோ

1407 என்னலுநன்றெனவெழுந்துதுன்னியே
மன்னியவண்டிமிர்மடற்பெய்தாழையோ
டுன்னரும்வானெலாமொருவிப்பூதலத்
தன்னவாகனனும்வந்திரியைக்கண்டனன்

வேறு

1408 வரையொன்றெடுத்துநிரைவருமாரிகாத்தநெடுமழைவண்ணவென்வரவுகேள்
கருதுங்கணத்தரையினாயிரங்கொண்டதோர்காதங்கடந்துவிண்போய்ப்
பொருதெண்டிரைக்கங்கைநதிசென்றுவட்டெடுத்தொளிர்செஞ்சடைப்புங்கவன்
முருகொன்றுமுட்பொதியு நெட்டிலைமுடங்கலின்முகிழ்மடலின்முடிகண்டனன்

1409 கருகாமல்விடமுண்டுகண்டங்கறுத்ததோர்காமாரிகற்றைச்சடை
தருகைகதையும்மீண்டுனக்காகயான்சென்றசான்றுரையெனச்சார்ந்ததாற்
றிருமேவுசெந்தாமரைக்கண்ணவின்னவைதேர்கிற்றியாலென்னவே
யருளாழியாய்கண்டதையமின்றேயென்றதந்தவெண்டாழையங்கண்

1410 தருணமுறுபகிரண்டமுகடிடிபடக்கொடியதண்டவடவங்கிமண்டத்
திரிசுடர்கடிசைமாறியலமரத்தெரிவரியதிரிபுவனமிகநடுங்க
வருணசந்திரமதியுமரியகங்காநதியுமமுதவலைதிவலைவீசச்
சுருதியினமுந்தொடர்ந்தறிவரியசெஞ்சுடர்ச்சோதிப்பிரான்றோன்றினான்

1420 மிக்கதொருதக்கனதுவேள்வியையழித்தோ
யக்கடலினின்றுவருமாலவிடமுண்டோய்
மொக்குளினியங்கவுணர்முப்புரமெரித்தோய்
திக்குலகெலாம்புரவுதிங்களைமுடித்தோய்

வேறு

1421 என்றுபுனைந்துரைபலகொண்டேத்திடலுமெம்பெருமானிரங்கிப்பின்னர்
மன்றன்மிகுநறுஞ்செந்தேன்வாய்ததும்பிவழிந்தொழுகுமலர்ப்பூங்கோயிற்
பொன்றிகழும்பொற்பொகுட்டுப்புங்கவநின்பொய்த்துரையிற்பொருந்துந்தோட
மொன்றியபன்மகம்புரியினுயர்ந்தகந்தமாதனத்தினொழியுமென்றான்

1422 ஆங்கதுகாலையிற்கைதையடியேனையஞ்சலெனவருள்வாயென்னாத்
தேங்கியவத்திறனறிந்துதிரிந்தமுகந்தெரிந்துதிருவுளந்துணிந்து
பாங்கின்மலர்ப்பரமேட்டிதனக்காநீபொய்யுரைத்தபாவம்பாறும்
பூங்கமலத்திருமருவுபூவணத்தினமைப்பூசைபுரிதியன்றே

1423 அப்பிரமன்றனைத்தேசுமிக்கபிரானிருந்தவிடத்தடைதியென்று
செப்பிவிடைகொடுத்ததற்பின்றிண்டிறன்மால்வைகுண்டஞ்செல்லவேவிப்
பொய்ப்பகர்தறருமுடங்கற்பூவினையப்பூவணத்திற்போதியென்னாத்
துப்புறமுஞ்செஞ்சடிலச்சோதியிலிங்கங்கரந்தான்றொன்மையேபோல்

1424 தேவர்பிரானிம்மாற்றஞ்செப்பியுருக்கரந்ததற்பின்றிருமடந்தை
மேவுமுகந்தொறுநிறுவிளையாடும்பூவணத்தின்விரைந்துபோந்து
தாவருஞ்சீர்தருபாரிசாதநிழற்றங்குசிவலிங்கம்பூசித்
கோவில்புகமுறுகைதையுரைத்திடும்பொய்ப்பவத்தினுநின்றொழிந்ததன்றே

வேறு

1425 நித்தமாய்மேலாயென்றுநீடுயிர்க்கறிவாய்ப்போக
முத்தியையளிக்குமுக்கண்மூர்த்திதன்வடிவமாய
சத்தியமோனஞானசவுநகமுநிவமேலா
மித்தலப்பெருமையெம்மாலெடுத்துரைசெய்யலாமோ

1426 முத்தியோருருவமாகிமுளைக்குமிவ்விலிங்கத்திற்குப்
பத்தியான்மூன்றுதூணியசுவினன்பால்வடித்துப்
புத்தியினிடபத்தங்கட்பூரணைபொருந்துகின்ற
வித்தகவிசாகந்தன்னிலவெய்யவனொடுங்கும்வேலை

1427 நீதியின்வழாதுமுன்னநிகழ்தருபூசையாற்றிக்
காதலினிருந்துதாஞ்சங்கற்பமும்பண்ணிச்சங்கின்
வேதமந்திரத்தினாலேவிரைகொண்மஞ்சனம்பூரித்துத்
தீதறத்தாபித்தன்பிற்றிருந்தபிடேகஞ்செய்து

1428 அந்தநல்லமுகந்தன்னையன்புடனபிடேகித்தே
யந்தநற்புகழ்சேர்கின்றவர்த்தநாரீசற்காண்பா
ரந்தநற்றரிசனத்தாலரசராயனைத்துஞ்சேர்ந்தாங்
கந்தமிலாதமூர்த்தியான்கழலடைவரன்றே

1429 கூடியபேரன்புள்ளங்கொண்டமார்க்கண்டனென்போன்
நீடுமச்சிவலிங்கத்தினிகழ்த்துமான்பான்முன்னாட்டித்
தேடருமர்த்தநாரீசன்றனைத்தெரிசித்தங்க
ணாடருஞ்சீவன்முத்திநண்ணினனறிகமாதோ

1430 ஆதலினிந்தக்காதையறைந்திடினறிதறேற்றார்க்
கோதலைவைதிகத்தோர்க்குரைத்திநீயெனவியாதன்
காதலினுரைக்கப்பான்மைகட்டுரைத்தனன்யானன்றி
யேதமின்முநிவிர்காளீதெவராலுமியம்பலாமோ

1431 கொலைபழுத்தொழுகும்வைவேற்குமரவேணந்திக்கோதத்
தலமலிபுகழ்சேர்நந்திசநற்குமாரற்குரைப்ப
வுலகெலாம்பரவவன்னோனுயர்வியாதற்குரைப்ப
வலைவறவவன்பால்யான்கேட்டறைந்தனனுமக்கின்றன்பால்

1432 என்னலுமுநிவரந்தவேதமில்சூதன்றன்னை
மன்னியதருப்பைசீரைவண்கனிமூலந்தன்னாற்
பன்னரும்பூசையாற்றிப்பன்முறைதழீஇக்கொண்டன்பா
லந்நிலையாசிகூறியானந்தடைந்தாரன்றே

1433 பன்னுமிப்புராணந்தன்னைப்படிக்குநர்தம்மையன்பான்
மன்னியவாசனத்தன்வைத்தருச்சனைசெய்வோர்க்குப்
பொன்னுலகேத்துந்தொல்சீர்ப்பூவணத்தரனைப்பூசை
தன்னைநன்கியற்றினோர்கடாம்பெறும்பலன்களுண்டாம்

1434 தேடரும்பலன்கணல்குந்தென்றிருப்பூவணத்து
நீடுசேர்புராணந்தன்னைநிகழ்த்திடுஞ்செவிநிறைத்து
நாடியபொருள்கள்யாவுநண்ணலானவிற்றுஞ்செஞ்சொற்
பாடலைவருந்தியேனும்பரிவுடன்கேட்கப்பண்ணே

1435 புவனமெங்கணுஞ்சீர்போற்றும்பூவணமான்மியத்தை
நவிலுறச்செவிக்குநாளுநல்விருந்தளிக்குநர்க்குச்
சிவபிரானருளினாலேதேடுபேருவகைகூடுஞ்
சவுநகமுநிவவீதுசத்தியஞ்சத்தியங்காண்

வேறு

1436 ஒப்பிலாதவுருத்திரசங்கிதையுற்றபூவணநற்கதையோதுவோர்
செப்புமாறுசெவிக்கொடுமன்னியசிட்டராயசிறப்புறுதன்மையோர்
விப்பிராதிபவித்தகமெய்ம்மொழிமிக்கவேதவிதத்துயர்மாதவீர்
தப்பிலாததவத்திருமன்னவர்தயாபரன்கயிலைக்கிரிவாழ்வரே

வேறு

1437 வாழ்கமன்னவன்செங்கோன்மழைமுகில்
வாழ்கநான்மறைவாணவர்கணானிலம்
வாழ்கவைதிகசைவமலர்த்திரு
வாழ்கவஞ்செழுத்துண்மைநன்மந்திரம்

சிதம்பரவுபதேசச்சருக்கமுற்றியது

ஆகச்செய்யுள் 1437

## திருப்பூவணப் புராணம் முற்றியது

(குறிப்பு – தேவாரப் பாடல் வரிகள் திருப்பூவணப் புராணப் புத்தகத்திலிருந்தபடியே இங்கு அச்சிடப்பட்டுள்ளன)

---

## 6.1. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியது

(1–ம் திருமுறை)
**பண் தக்கேசி**

திருச்சிற்றம்பலம்

அறையார் புனலு மாமலரு மாடர வார்சடைமேற்
குறையார் மதியஞ் சூடி மாதோர் கூறுடை யானிடமா
முறையான் முடிசேர் தென்னர் சேரர் சோழர் கடாம் வணங்குந்
திறையா ரொளிசேர் செம்மை யோங்கு தென்திருப்பூவணமே (1)

மருவார் மதின்மூன் றொன்ற வெய்து மாமலை யான்மடந்தை
யொருபால் பாக மாகச் செய்த வும்பர் பிரானவனூர்
கருவார் சாலியாலை மல்கிக் கழன்மன்னர் காத்தளித்த
திருவான் மலிந்த சேடர் வாழுந் தென்றிருப்பூவணமே (2)

போரார் மதமா வுரிவை போர்த்துப் பொடியணி மேனியனாய்க்
காரார் கடலி னஞ்ச முண்ட கண்ணுதல் விண்ணவனூர்
பாரார் வைகைப் புனல்வாய் பரப்பிப் பன்மணி பொன் கொழித்துச் சீரார் வாரி சேர
நின்ற தென்றிருப் பூவணமே (3)

கடியா ரலங்கற் கொன்றை சூடிக் காதிலொர் வார் குழையன்
கொடியார் வெள்ளை யேறு கந்த கோவண வன்னிடமாம்
படியார் கூடி நீடி யோங்கு பல்புக ழாற் பரவச்
செடியார் வைகை சூழ நின்ற தென்றிருப் பூவணமே (4)

கூரார் வாளி சிலையிற் கோத்துக் கொடிமதில் கூட்டழித்த
போரார் வில்லி மெல்லிய லாளோர் பால் மகிழ்ந் தானிடமா
மாரா வன்பிற் றென்னர் சேரர் சோழர்கள் போற்றிசைப்பத்
தேரார் வீதி மாட நீடு தென்றிருப் பூவணமே (5)

நன்று தீதென் றொன்றி லாத நான்மறை யோன்கழலே
சென்று பேணி யேத்த நின்ற தேவர் பிரானிடமாங்
குன்றி லொன்றி யோங்க மல்கு குளிர்பொழில் சூழ் மலர்மேற்
றென்ற லொன்றி முன்றி லாருந் தென்றிருப் பூவணமே (6)

பைவா யரவ மரையிற் சாத்திப் பாரிடம் போற்றிசைப்ப
மெய்வாய் மேனி நீறு பூசி யேறுகந் தானிடமாங்
கைவாழ் வளையார் மைந்த ரோடுங் கலவியினா னெருங்கிச்
செய்வார் தொழிலின் பாட லோவாத் தென்திருப்பூவணமே (7)

மாட வீதி மன்னிலங்கை மன்னனை மாண்பழித்துக்
கூட வென்றி வாள்கொ டுத்தான் கொள்கையி னார்க் கிடமாம்
பாட லோடு மாட லோங்கிப் பன்மணி பொன் கொழித்து
வோடி நீரால் வைகை சூழு முயர்திருப் பூவணமே (8)

பொய்யா வேத நாவி னானும் பூமகள் காதலனுங்
கையாற் றொழுது கழல்கள் போற்றக் கனலெரி யானவனூர்
மையார் பொழிலின் வண்டு பாட வைகை மணி கொழித்துச்
செய்யார் கமலந் தேன ரும்புந் தென்திருப் பூவணமே (9)

அலையார் புனலை நீத்த வருந்தே ரருமன் புசெய்யா
நிலையா வண்ண மாய வைத்த நின்மலன் றன்னிடமா
மலைபோற் றுன்னி வென்றி யோங்கு மாளிகை சூழ்ந்தயலே
சிலையார் புரிசை பரிசு பண்ணுந் தென்திருப்பூவணமே (10)

திண்ணார் புரிசை மாட மோங்கு தென்திருப் பூவணத்துப்
பெண்ணார் மேனி யெம்மி றையைப் பேரிய லின் றமிழா
னண்ணா ருட்கக் காழி மல்கு ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணார் பாடல் பத்தும் வல்லார் பயில்வது வானிடையே (11)

திருச்சிற்றம்பலம்

# திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியது

**(3–ம் திருமுறை)**
**பண் – காந்தார பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

மாதமர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவணத்துறை
வேதனை விரவல ரரண மூன்றெய்த
நாதனை யடிதொழ நன்மை யாகுமே (1)

வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு
தேனணிபொழிற்றிருப் பூவ ணத்துறை
யான நல் லருமறை யங்க மோதிய
ஞானனை யடிதொழ நன்மை யாகுமே (2)

வெந்துய ருறுபிணி வினைக டீர்வதோர்
புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை
யந்திவெண் பிறையினோ டாறு சூடிய
நந்தியை யடிதொழ நன்மை யாகுமே (3)

வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்
பூசனைப் பொழி றிகழ் பூவ ணத்துறை
யீசனை மலர்புனைந் தேத்து வார்வினை
நாசனை யடிதொழ நன்மை யாகுமே (4)

குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை
பொருந்திய பொழிற் றிருப் பூவணத்துறை
யருந்திற லவுணர்த மரண மூன்றெய்த
பெருந்தகை யடிதொழப் பீடை யில்லையே (5)

வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய
பொறியர வணி பொழிற் பூவ ணத்துறை
கிறிபடு முடையினன் கேடில் கொள்கைய
னறுமல ரடி தொழ நன்மை யாகுமே (6)

பறைமல்கு முழவொடு பாட லாடலன்
பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை
மறைமல்கு பாடலன் மாதொர் கூறின
னறைமல்கு கழ றொழ வல்ல லில்லையே (7)

வரைதனை யெடுத்தவல் லரக்க னீண்முடி
விரற னி லடர்த்தவன் வெள்ளை நீற்றினன்
பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்
பரவிய வடியவர்க் கில்லை பாவமே (8)

நீர்மல்கு மலருறை வானு மாலுமாய்ச்
சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்
போர்மல்கு மழுவினன் மேய பூவண
மேர்மல்கு மலர்புனைந் தேத்த லின்பமே (9)

மண்டை கொண் டுழிதரு மதியி றேரருங்
குண்டருங் குணம்பல பேசுங் கோலத்தர்
வண்டமர் வளர்பொழின் மல்கு பூவணங்
கண்டவ ரடி தொழு தேத்தல் கன்மமே (10)

புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை
யண்ணலை யடிதொழு தந்தண் காழியு
ணண்ணிய வருமறை ஞான சம்பந்தன்
பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே (11)
திருச்சிற்றம்பலம்

## 6.2. திருநாவுக்கரசு சுவாமிகள் பாடியது

### திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடைமே லிளமதியந் தோன்றுந் தோன்றுங்
கடியேறு கமழ் கொன்றைக் கண்ணி தோன்றுங்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்று
மிடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்று
மெழி றிகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழி றிகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே (1)

ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்று
மடியவர்கட் காரமுத மாகித் தோன்று
மூணாகி யூர் திரிவா னாகித் தோன்று
மொற்றைவெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேற்
சேணாக வரைவில்லா லெரித்த றோன்றுஞ்
செத்தவர்த மெலும்பினாற்செ றியச் செய்த
பூணாணு மரைநாணும் பொலிந்து தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே. (2)

கல்லாலின் னீழற்க லந்து தோன்றுங்
கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று
சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றுஞ்
சூழரவு மான்மறியுந் தோன்றுந் தோன்று
மல்லாத காலனைமுன் னடர்த்த றோன்று
மைவகையா னினைவார்பா லமர்ந்து தோன்றும்
பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்
பொழி றிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. (3)

படைமலிந்த மழுவாளு மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்று
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்று
நான்மறையி னொலி தோன்று நயனந் தோன்று
முடைமலிந்த கோவணமுங் கீழுந் தோன்று
மூரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்
புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழி றிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே (4)

மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்று
மாசிலாப் புன்சடைமேன் மதியந் தோன்று
மியல்பாக விடுபிச்சை யேற்ற றோன்று
மிருங்கட னஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றுங்
கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
யாயிரமா முகத்தினொடு வானிற் றோன்றும்
புயல் பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (5)

பாராழி வட்டத்தார் பரவி யிட்ட
பன்மலரு நறும்புகையும் பரந்து தோன்றுஞ்
சீராழித் தாமரையின் மலர்க ளன்ன
திருந்தியமா நிறத்தசே வடிக டோன்று
மோராழித் தேருடைய விலங்கை வேந்த
னுடல் றுணித்த விடர்பாவங் கெடுப்பித் தன்று
போராழி முன்னீந்த பொற்புத் தோன்றும்
பொழி றிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே (6)

தன்னடியார்க் கருள் புரிந்த தகவு தோன்றுஞ்
சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்று
மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்த றோன்றுந்
துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்புந்
தூயமா மதியுடனே வைத்த றோன்றும்
பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (7)

செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந்
திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்று
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்று
நெற்றிமேற் கண்டோன்றும் பெற்றந் தோன்று
மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்று
மலைமகளுஞ் சலமகளு மலிந்து தோன்றும்
பொறியரவு மிளமதியும் பொலிந்து தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (8)

அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்
மணிகிளரு முருமென்ன அடர்க்குங் கேழன்
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்று
மணமலிந்த நடந்தோன்று மணியார் வைகைத்
திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றுஞ்
செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (9)

ஆங்கணைந்த சண்டிக்கு மருளி யன்று
தன்முடிமேல லர்மாலை யளித்தல் தோன்றும்
பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று
பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றுங்
கோங்கணைந்த கூவிளமு மதமத் தம்முங்
குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்
பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (10)

ஆருருவ வுள்குவா ருள்ளத் துள்ளே
யவ்வுருவாய் நின்கின்ற வருளுந் தோன்றும்
வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை
மகிழ்ந் தொருபால் வைத்து கந்த வடிவுந் தோன்றும்
நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை
நெறுநெறென வடர்த்திட்ட நிலையுந் தோன்றும்
போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்
பொழி றிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே (11)

திருச்சிற்றம்பலம்

(இத் திருப்பதிகம் அகத்திய முனிவர் திரட்டியருளிய தேவாரத் திரட்டிற் சேர்ந்த சிறப்புடையது)

## 6.3. சுந்தரர் பாடியது

**பண் – இந்தளம்**

திருச்சிற்றம்பலம்

திருவுடை யார்திரு மால யனாலு
முருவுடை யாருமை யாளையொர் பாகம்
பரிவுடை யா ரடை வார்வினை தீர்க்கும்
புரிவுடை யாருறை பூவண மீதோ. (1)

எண்ணி யிருந்து கிடந்து நடந்து
மண்ண லெனாநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்
புண்ணிய னாருறை பூவண மீதோ. (2)

தெள்ளிய பேய்பல பூதம வற்றோடு
நள்ளிரு ணட்டம தாட நவின்றோர்
புள்ளுவ ராகு மவர்க்கவர் தாமும்
புள்ளுவ னாருறை பூவண மீதோ. (3)

நிலனுடை மான்மறி கையது தெய்வக்
கனலுடை மாமழு வேந்தியோர் கையி
லனலுடை யா ரழ கார்தரு சென்னிப்
புனலுடை யாருறை பூவண மீதோ. (4)

நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்
கடைகடை தோறிடு மின்பலி யென்பார்
துடியிடை நன்மட வாளொடு மார்பிற்
பொடியணி வாருறை பூவண மீதோ. (5)

மின்னனை யாடிரு மேனிவி ளங்கவொர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்
முன்னினை யார்புர மூன்றெரி யூட்டிய
பொன்னனை யானுறை பூவண மீதோ (6)

மிக்கிறை யேயவ றுன்மதியால் விட
நக்கிறை யேவிர லாலிற வூன்றி
நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்
புக்குறை வானுறை பூவண மீதோ (7)

(பாடல் 8–9 கிடைக்கப்பெறவில்லை)
சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவண
மாரவி ருப்பிட மாவுறை வானை
யூர னுரைத்த சொன்மாலைகள் பத்திவை
பாரி லுறைப்பவர் பாவ மறுப்பரே (10)

திருச்சிற்றம்பலம்

# 6.4. திருவாசகத்தில் திருப்பூவணம்

திருப்பூவணத்திற்கு வடக்கே சுமார் 18 கி.மீ. தூரத்தில் உள்ளது திருவாதவூர். இவ்வூரில் பிறந்தவர் மாணிக்கவாசகர். அதனால் அவருக்குத் திருவாதவூரர் என்னும் பெயர் அமைந்தது. அவருடைய கல்வி, கேள்வி, ஒழுக்கம், அறிவு, ஆற்றல் ஆகிய சிறப்புக்களைப் பற்றிக் கேள்வியுற்ற பாண்டிய மன்னன் அவரைத் தனது தலைமை மந்திரியாக நியமனம் செய்தான். அவரது ஆட்சித் திறமையைக் கண்டு 'தென்னவன் பிரமராயன்' என்ற சிறப்புப் பட்டத்தையும் வழங்கினான்.

மாணிக்கவாசகர் பொருட்டு இறைவன் நேரில் எழுந்தருளி நரிகளைப் பரிகளாக்கியும், பின்னர் பரிகளை நரிகளாக்கியும் திருவிளையாடற் புரிந்தருளினார்.

(1) மாணிக்கவாசகப் பெருமான் கீர்த்தித் திருவகவலில்

"இந்திர ஞாலம் காட்டிய இயல்பினாய் போற்றி
உத்தரகோச மங்கை வித்தக வேடா போற்றி
**பூவண மதனிற் தூவண மேனி காட்டிய தொன்மையோய் போற்றி**
வாதவூரில் பாதச் சிலம்பொலி காட்டிய பண்பா போற்றி
திருவார் பெருந்துறை செல்வா போற்றி"

என்று திருப்பூவணநாதரின் தொன்மைகளையும் அருளும் தன்மையையும் பாடியுள்ளார்.

(2) "அரனே போற்றி, அந்தணர்தம் சிந்தையானே போற்றி" - என்று ஆரம்பிக்கும் திருமுறைத்திரட்டில்,

"... ...
வெண்காட்டில் உறைவா போற்றி
**விடைகாட்டும் கொடியா போற்றி**
**சக்கரம் மாலுக்கு ஈந்தாய் போற்றி**
**சலந்தரனைப் பிளந்தாய் போற்றி**
பாலொடு நெய்தயிர் பலவும் ஆடுவாய் போற்றி
... ..."

"தேவார்ந்த தேவர்க்கும் தேவே போற்றி
**திருமாலுக்கு ஆழி அளித்தாய் போற்றி**
சாவாமே காத்து என்னை ஆண்டாய் போற்றி

"மைசேர்ந்த கண்டம் உடையாய் போற்றி
**மாலுக்கும் ஓர் ஆழி ஈந்தாய் போற்றி**
பொய்சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி"

"விண்ணுலகம் ஈந்தவிறல் போற்றி
மண்ணின்மேல் காளத்தி போற்றி கயிலைமலை போற்றி
**சதுர்முகன் தந்தைக்குக் கதிர்விடு கடவுள்**

**ஆழி கொடுத்த பேரருள் போற்றி"**

**சலந்தரன் தடிந்த தண்டம் போற்றி**
தாதையை எறிந்த வேதியச் சிறுவற்குப் பரிகலம்
கொடுத்த திருவுளம் போற்றி"

"சிறுவனுக்கு அழியா வாழ்நாள் அளித்து அருள் செய்தி போற்றி
**சலந்தரன் உடல் கீண்ட சக்கரப் படையாய் போற்றி**
**வலம்தரு அதனை மாயோன் வழிபடக் கொடுத்தாய் போற்றி**
அலர்ந்த செங்கமலப் புத்தேள் நடுச் சிரம் அரிந்தாய் போற்றி"

என்று திருப்பூவணநாதர் பெருமாளுக்குச் சக்கராயுதம் வழங்கிய செய்தியைப் பாடியுள்ளார். இச்செய்தி, திருப்பூவணப் புராணத்திலே, சிதம்பர உபதேச சருக்கத்திலே விரிவாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளது.

(3) போற்றித் திருவகவலில்,

... ... ...
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி!
**பொருப்பமர் பூவணத்தரனே போற்றி!**
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி!
... ... ... " என்று திருப்பூவணநாதரைப் போற்றி வணங்கியுள்ளார்.

*****

## 6.5. கருவூர்த் தேவர் பாடியது

### ஒன்பதாம் திருமுறை
பண் – பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

திருவருள் புரிந்தா ளாண்டு கொண் டிங்ஙன்
சிறியனுக் கினயது காட்டிப்
பெரிதருள் புரிந்தா னந்தமே தருநின்
பெருமையிற் பெரியதொன் றுளதே
மருதர சிருங்கோங் ககின்மரஞ் சாடி
வரைவளங் கவர்ந்திழி வைகைப்
பொருதிரை மருங்கோங் காவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 144)

பாம்பணைத் துயின்றோ னயன்முதற் றேவர்
பன்னெடுங் காலநிற் காண்பா
னேம்பலித் திருக்க வென்னுளம் புகுந்த
வெளிமையை யென்றுநான் மறக்கேன்
தேம்புனற் பொய்கை வானளவாய் மடுப்பத்
தெளிதரு தேறல்பாய்ந் தொழுகும்
பூம்பணைச் சோலை யாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 145)

கரைகட லொலியிற் றமருகத் தரையிற்
கையினிற் கட்டிய கயிற்றா
லிருதலை யொருநா வியங்கவந் தொருநா
ளிருந்திடா யெங்கள்கண் முகப்பே
விரிதிகழ் விழவின் பின்செல்வோர் பாடல்
வேட்கையின் வீழ்ந்தபோ தவிழ்ந்த
புரிசடை துகுக்கு மாவணவீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 146)

கண்ணியன் மணியின் குழல்புக் கங்கே
கலந்துபுக் கொடுங்கினேற் கங்ங
னுண்ணியை யெனினு நம்ப நின்பெருமை
நுண்ணிமை யிறந்தமை யறிவன்
மண்ணியன் மரபிற் றங்கிருண் மொழுப்பின்
வண்டினம் பாடநின் றாடும்
புண்ணிய மகளி ராவண வீதிப்
பூவணங் கோயில் கொண் டாயே. (பாடல் – 147)

கடுவினைப் பாசக் கடல்கடந் தைவர்
கள்ளரை மெள்ளவே துரந்து
னடியிணை யிரண்டு மடையுமா றடைந்தே
னருள்செய்வா யருள்செயா தொழிவாய்
நெடுநிலை மாடத் திரவிருள் கிழிக்க
நிலைவிளக் கலகில்சா லேகம்
புடைகிடந் திலங்கு மாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 148)

செம்மனக் கிழவோ ரன்பு தாளன்றுன்
சேவடி பார்த்திருந் தலச
வெம்மனங் குடிகொண் டிருப்பதற் கியானா
ரென்னுடை யடிமைதானி யாதே
யம்மனங் குளிர்நாட் பலிக்கெழுந் தருள
வரிவைய ரவிழ்குழற் சுரும்பு
பொம்மென முரலு மாவண வீதிப்
பூவணங் கோயில் கொண் டாயே. (பாடல் – 149)

சொன்னவின் முறைநான் காரண முணராச்
சூழல்புக் கொளித்தநீ யின்று
கன்னவின் மனத்தென் கண்வலைப் படுமிக்
கருணையிற் பெரியதொன் றுளதே
மின்னவில் கனக மாளிகை வாய்தல்
விளங்கிளம் பிறைதவழ் மாடம்
பொன்னவில் புரிசை யாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (பாடல் – 150)

பூவணங் கோயில் கொண்டெனை யாண்ட
புனிதனை வனிதை பாகனை வெண்
கோவணங் கொண்டு வெண்டலை யேந்தும்
குழகனை யழகெலா நிறைந்த
தீவணன் றன்னைச் செழுமறை தெரியு
திகழ்கரு வூரனே னுரைத்த
பாவணத் தமிழ்கள் பத்தும்வல் லார்கள்
பரமன துருவமா குவரே. (பாடல் – 151)

திருச்சிற்றம்பலம்

திருப்பூவணம் முருகன் மீது

## 6.6. அருணகிரி நாதர் பாடிய திருப்புகழ்

திருப்புகழ் பாடல் எண். 550

| | | |
|---|---|---|
| தனத்தான | தத்தத் | தனதானா |
| தனத்தான | தத்தத் | தனதானா |

| | | |
|---|---|---|
| அறப்பாவை | அத்தற் | கருள்பாலா |
| அளித்தாது | வெட்சித் | திருமார்பா |
| குறப்பாவை | அற்பிற் | புணர்வோனே |
| குலத்தேவ | வர்க்கப் | பரிபாலா |
| மறப்பாத | கத்துற் | றுழல்வேனோ |
| மலர்த்தாள்வ | ழுத்தக் | க்ருபையீவாய் |
| சிறப்பான | முத்திக் | கொருவாழ்வே |
| திருப்பூவ | ணத்திற் | பெருமாளே |

திருப்புகழ் பாடல் எண். 551

| | | | |
|---|---|---|---|
| தானனதான | தானனதான | தானனதான | தனதான |
| வானவராதி | யோர்சிறைமேவ | மாவலியேசெய் | திருசூரன் |
| மார்பிருகூற | தாய்விடவாரி | வாய்விடவேலை | விடுதீரா |
| கானவர்பாவை | காதலனான | காசணிபார | தனமார்பா |
| காலனைமோது | காலகபால | காளகளேசர் | தருபாலா |
| தேனமர்நீப | மாலைவிடாத | சேவகஞான | முதல்வோனே |
| தீயகுணாதி | பாவிநினாது | சேவடிகாண | அருள்வாயே |
| போனகசாலை | யாதுலர்வாழ | வீதிகடோறும் | நனிமேவு |
| பூவணமான | மாநகர்வாழு | நாதகுகேச | பெருமாளே |

(காளகளேசர் = விசத்தைக் கண்டத்திலுடையவர்
போனகம் = அன்னம்)

திருப்புகழ் பாடல் எண். 552

| | | | |
|---|---|---|---|
| தந்தத்தத் | தானன | தானன | |
| தந்தத்தத் | தானன | தானன | |
| தந்தத்தத் | தானன | தானன | தனதானா |
| பந்தப்பொற் | பாரப | யோதர | |
| முந்தச்சிற் | றாடைசெய் | மேகலை | |
| பண்புற்றுத் | தாளொடு | வீசிய | துகிலோடே |
| பண்டைச்சிற் | சேறியில் | வீதியில் | |
| கண்டிச்சித் | தாரொடு | மேவிடு | |
| பங்குக்கைக் | காசுகொள் | வேசையர் | பனிநீர்தோய் |
| கொந்துச்சிப் | பூவணி | தோகையர் | |
| கந்தக்கைத் | தாமரை | யாலடி | |
| கும்பிட்டுப் | பாடிசை | வீணையர் | அநுராகங் |
| கொண்டுற்றுப் | பாயலின் | மூழ்கிய | |
| சண்டிச்சிச் | சீயென | வாழ்துயர் | |
| குன்றப்பொற் | பாதக்ரு | பாநிதி | அருள்வாயே |
| அந்தத்துக் | காதியு | மாகியு | |
| மந்திக்குட் | டானவ | னானவ | |
| னண்டத்தப் | பாலுற | மாமணி | ஒளிவீசும் |
| அங்கத்தைப் | பாவைசெய் | தேயுயர் | |
| சங்கத்திற் | றேர்தமி | ழோதிட | |
| அண்டிக்கிட் | டார்கமு | வேறினர் | ஒருகோடி |

சந்தத்திக் காளூநி சாசரர்
வெந்துட்கத் தூளிப டாமெழ
சண்டைச்சொற் றார்பட வேவயில் விடுவோனே

தங்கச்சக் ராயுதர் வானவர்
வந்திக்கப் பேரரு ளோதிகழ்
தம்பப்பொற் பூவண மேவிய பெருமாளே

*****

# பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணம்

## 36. இரசவாதஞ் செய்த படலம் (கலி நிலைத்துறை)

### திருப்பூவணத் தலத்தின் பெருமை

1856 வரதன் மீனவன் படையிடை வந்துநீர்ப் பந்தர்
விரத னாகிநீ ரருத்திய வினையுரை செய்தும்
பரத நூலிய னாடகப் பாவையா ளொருத்திக்
கிரத வாதஞ்செய் தருளிய வாடலை யிசைப்பாம்.

1857 பருங்கை மால்வரைப் பூழியன் பைந்தமிழ் நாட்டின்
இரங்கு தெண்டிரைக் கரங்களா லீர்ம்புனல் வையை
மருங்கின னந்தன மலர்ந்தபன் மலர்கடுய்ப் பணியப்
புரங்க டந்தவ னிருப்பது பூவண நகரம்

1858 எண்ணி லங்குறை சராசர மிலிங்கமென் றெண்ணி
விண்ணி னாள்களும் கோள்களும் விலங்குவ தியாக்கைக்
கண்ணி னான்கதிர் முதற்பல கடவுளர் பூசை
பண்ணி வேண்டிய நல்வர மடைந்ததப் பதியில்

### பொன்னனையாளின் தன்மை

1859 கிளியு ளார்பொழிற் பூவணக் கிழவர்தங் கோயில்
றளியு ளார்தவப் பேறனா டாதுகு பூந்தார்
அளியு ளார்குழ லணங்கனா ளந்தரத் தவர்க்குங்
களியுளார்தர மயக்குறூஉங் கடலமு தனையாள்

1860 நரம்பி னேழிசை யாழிசைப் பாடலு நடநூல்
நிரம்பு மாடலும் பெண்ணல நீர்மையும் பிறவும்
அரம்பை மாதரை யொத்தன ளறனெறி யொழுகும்
வரம்பி னாலவர் தமக்குமே லாயினாண் மன்னோ

1861 ஆய மாதர்பேர் பொன்னனை யாளென்ப வவடன்
நேய வாயமோ டிரவிரு ணீங்குமு னெழுந்து
தூய நீர்குடைந் துயிர்புரை சுடர்மதிக் கண்ணி
நாய னாரடி யருச்சனை நியமமு நடாத்தி

1862 திருத்தர் பூவண வாணவரைச் சேவித்துச் சுத்த
நிருத்த மாடிவந் தடியரைப் பொருளென நினையுங்
கருத்த ளாயருச் சித்தவர் களிப்பவின் சுவையூண்
அருத்தி யெஞ்சிய தருந்துவா ளஃதவ ணியமம்

1863 மாத ரிந்நெறி வழங்குநாண் மற்றவ ளன்பைப்
பூத லத்திடைத் தெருட்டுவான் பொன்மலை வல்லி
காத னாயகன் றிருவுருக் காணிய வுள்ளத்
தாத ரங்கொடுத் தருளினார் பூவணத் தையர்

1864 ஐயர் தந்தபே ரன்புரு வாயினாண் மழமான்
கையர் தந்திரு வுருவினைக் கருவினாற் கண்டு
மைய கண்ணினாள் வைகலும் வருபொரு ளெல்லாம்
பொய்யி லன்புகொண் டன்பர்தம் பூசையி னேர்வாள்

1865 அடியர் பூசனைக் கன்றியெஞ் சாமையா லடிகள்
வடிவு காண்பதெப் படியென்று மடியிலச் செழியற்
கொடிவில் பொற்கிழி நல்கிய வள்ளலை யுன்னிப்
பிடிய னாளிருந் தாளஃ தறிந்தனன் பெருமான்

சிவபெருமான் சித்தர் வடிவம் கொண்டு வருதல்

1866 துய்ய நீறணி மெய்யினர் கட்டங்கந் தொட்ட
கையர் யோகபட் டத்திடைக் கட்டினர் பூதிப்
பையர் கோவண மிசையசை யுடையினர் பவளச்
செய்ய வேணிய ரங்கொரு சித்தராய் வருவார்

1867 வந்து பொன்னனை யாண்மணி மாளிகை குறுகி
அந்த மின்றிவந் தமுதுசெய் வாரொடு மணுகிச்
சிந்தை வேறுகொண் டடைந்தவர் திருவமு தருந்தா
துந்து மாளிகைப் புறங்கடை யொருசிறை யிருந்தார்

1868 அமுது செய்தருந் தவரெல்லா மகலவே றிருந்த
அமுத வாரியை யடிபணிந் தடிச்சிய ரைய
அமுது செய்வதற் குள்ளெழுந் தருள்கென வுங்கள்
அமுத னாளையிங் கழைமினென் றருளலு மனையார்

1869 முத்த ராமுகிழ் வாணகை யல்குலாய் முக்கண்
அத்த ரானவர் தமரெலா மமுசெய் தகன்றார்
சித்த ராயொரு தம்பிரான் சிறுநகை யினராய்
இத்த ராதலத் தரியரா யிருக்கின்றா ரென்றார்

### சித்தமூர்த்தி பொன்னனையாளை மெலிந்த காரணம் யாதெனல்

1870 நவம ணிக்கலன் பூத்தபூங் கொம்பரி னடந்து
துவரி தழ்க்கனி வாயினாள் சுவாகதங் கிலாவன்
றுவமை யற்றவர்க் கருக்கிய மாசன முதவிப்
பவம கற்றிய வடிமலர் முடியுறப் பணிந்தாள்

1871 எத்த வஞ்செய்தே னிங்கெழுந் தருளுதற் கென்னாச்
சித்தர் மேனியும் படிவெழிற் செல்வமு நோக்கி
முத்த வாணகை யரும்பநின் றஞ்சலி முகிழ்ப்ப
அத்தர் நோக்கினா ரருட்கணா லருள்வலைப் பட்டாள்

1872 ஐய உள்ளெழுந் தருளுக வடிகணீர் ரடியேன்
உய்ய வேண்டிய பணிதிரு வுளத்தினுக் கிசையச்
செய்ய வல்லனென் றஞ்சலி செய்யவுண் ணகையா
மைய னோக்கியை நோக்கிமீ னோக்கிதன் மணாளன்

1873 வடியை நேர்விழி யாய்பெரு வனப்பினை சிறிதுன்
கொடியை நேரிடை யெனவிளைத் தனையெனக் கொன்றை
முடியி னானடி யாரமென் முகிழ்முலைக் கொடிதாழ்ந்
தடிய னேற்குவே றாயொரு மெலிவிலை யையா

1874 எங்க ணாயகர் திருவுருக் காண்பதற் கிதயந்
தங்கு மாசையாற் கருவுருச் சமைத்தனன் முடிப்பேற்கு
கிங்கு நாடொறு மென்கையில் வரும்பொரு ளெல்லாம்
உங்கள் பூசைக்கே யல்லதை யொழிந்தில வென்றாள்

### சித்த மூர்த்திகள் சிவனடியார் பெருமை கூறல்

1875 அருந்து நல்லமு தனையவ ளன்புதித் திக்கத்
திருந்து தேனென விரங்குசொற் செவிமடுத் தையர்
முருந்து மூரலாய் செல்வமெய் யிளமைநீர் மொக்குள்
இருந்த வெல்லையு நிலையில வென்பது துணிந்தாய்

1876 அதிக நல்லற நிற்பதென் றறிந்தனை யறத்துள்
அதிக மாஞ்சிவ புண்ணியஞ் சிவார்ச்சனை யவற்றுள்
அதிக மாஞ்சிவ பூசையு ளடியவர் பூசை
அதிக மென்றறிந் தன்பரை யருச்சனை செய்வாய்

1877 உறுதி யெய்தினை யிருமையு முன்பெயர்க் கேற்ப
இறுதி யில்லவன் றிருவுரு வீகையாற் காணப்
பெறுதி யாகநின் மனைக்கிடைப் பித்தளை யீயம்
அறுதி யானபல் கலன்களுங் கொணர்தியென் றறைந்தார்

1878 ஈயஞ் செம்பிரும் பிரசிதங் மென்பவும் புணர்ப்பாற்
றோயம் பித்தளை வெண்கலந் தராமுதற் றொடக்கத்
தாயும் பல்வகை யுலோகமுங் கல்லென வலம்பத்
தேயுஞ் சிற்றிடை கொண்டுபோய்ச் சித்தர்முன் வைத்தாள்

## சித்தமூர்த்திகள் இரசவாதம் புரிதல்

1879 வைத்த வேறுவே றுலோகமு மழுவுழை கரந்த
சித்த சாமிக ணீற்றினைச் சிதறினர் பாவித்
தித்தை நீயிரா வெரியிலிட் டெடுக்கினன் பொன்னாம்
அத்தை நாயகன் றிருவுருக் கொள்கென வறைந்தார்

1880 மங்கை பாகரை மடந்தையு மிங்குநீர் வதிந்து
கங்குல் வாயமு தருந்தியிக் காரிய முடித்துப்
பொங்கு காரிருள் புலருமுன் போமெனப் புகன்றாள்
அங்க யற்கணா டனைப்பிரி யாரதற் கிசையார்

1881 சிறந்த மாடநீண் மதுரையிற் சித்தர்யா மென்று
மறைந்து போயினார் மறைந்தபின் சித்தராய் வந்தார்
அறைந்த வார்கழ லலம்பிட வெள்ளிமன் றாடி
நிறைந்த பேரொளி யாயுறை நிருத்தரென்று அறிந்தாள்

## பொன்னனையாள் உலோகங்களைத் தீயிலிட்டுப் பொன்னாதல்

1882 மறைந்து போயினா ரெனச்சிறி தயர்ச்சியு மனத்தில்
நிறைந்த தோர்பெருங் கவற்சியை நீக்கினா ரென்னச்
சிறந்த தோர்பெரு மகிழ்ச்சியு முடையளாய்ச் சித்தர்
அறைந்த வாறுதீப் பெய்தன ளுலோகங்க ளனைத்தும்

1883 அழல டைந்தபி னிருண்மல வலிதிரிந் தரன்றாள்
நிழல டைந்தவர் காட்சிபோ னீப்பருங் களங்கங்
கழல வாடக மானதா லதுகொண்டு கனிந்த
மழலை யீர்ஞ்சொலாள் கண்டனள் வடிவிலான் வடிவம்

1884 மழவிடை யுடையான் மேனி வனப்பினை நோக்கியச்சோ
அழகிய பிரானோ வென்னா வள்ளிமுத் தங்கொண் டன்பிற்
பழகிய பிரானை யானாப் பரிவினாற் பதிட்டை செய்து
விழவுதேர் நடாத்திச் சின்னாள் கழிந்தபின் வீடு பெற்றாள்

1885 நையநுண் ணிடையி னாளந் நாயகன் கபோலத் திட்ட
கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு
வெய்யவெங் கதிர்கால் செம்பொன் மேனிவே றாகி நாலாம்
பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும்

## இரசவாதம் செய்த படலம் முற்றிற்று.

## 49.திருவாலவாய்க் காண்டம்
## (வங்கிய சேகர மன்னனுக்கு மதுரையின் எல்லைகளைக் காட்டுதல்)

### *சித்தரை மன்னன் பணிந்து வேண்டுதல்*

2338 கறையணி கண்டனைத் தாழ்ந்து கைதொழு
திறையவ நின்னருள் வலியி னிந்நிலப்
பொறையது வாற்றுவேற்கு ஈண்டிப் போதொரு
குறையதுண் டாயினது என்று கூறுவான்

2339 இத்தனை மாக்களும் இருக்கத் தக்கதாப்
பத்தனங் காணவிப் பதிக்க ணாதியே
வைத்தறை செய்திடும் வரம்பு காண்கிலேன்
அத்தமற் றதனையின் றறியக் காட்டென்றான் [1]

2340 நுண்ணிய பொருளினு நுண்ணி தாயவர்
விண்ணிழி விமானநின் றெழுந்து மீனவன்
திண்ணிய வன்பினுக் கெளிய சித்தராய்ப்
புண்ணிய அருட்கடல் ஆகிப் போதுவார்

### *சித்தர் வடிவில் சிவபெருமான் அருள் செய்தல்*

2341 பாம்பி னாற்கடி சூத்திரங் கோவணம் பசுந்தாட்
பாம்பி னாற்புரி நூல்சன்ன வீரம்வெம் பகுவாய்ப்
பாம்பி னாற்குழை குண்டலம் பாதகிண் கிணிநாண்
பாம்பி னாற்கர கங்கணம் பரிந்தனர் வந்தார்

2342 வந்த யோகர்மா மண்டப மருங்குநின் றங்கைப்
பந்த வாலவா யரவினைப் பார்த்துநீ யிவனுக்
கிந்த மாநக ரெல்லையை யளந்துகாட்டு என்றார்
அந்த வாளரா வடிபணிந் தடிகளை வேண்டும்

2343 பெரும விந்நகர் அடியனேன் பெயரினால் விளங்கக்
கருணை செய்தியென் றிரந்திடக் கருணையங் கடலும்
அருண யந்துநேர்ந்து அனையதே யாகெனப் பணித்தான்
உருகெ முஞ்சின வுரகமும் ஒல்லெனச் செல்லா

**பாம்பு எல்லையைக் காட்டுதல்**

2344 கீட்டி சைத்தலைச் சென்றுதன் கேழ்கிளர் வாலை
நீட்டி மாநகர் வலம்பட நிலம்படிந் துடலைக்
கோட்டி வாலைவாய் வைத்துவேற் கொற்றவற்கு எல்லை
காட்டி மீண்டரன் கங்கண மானது கரத்தில்

**மதில் அமைத்தல்**

2345 சித்தர் தஞ்சின கரத்தெழுந் தருளினார் செழியன்
பைத்த வாலவாய் கோலிய படிசுவர் எடுத்துச்
சுத்த நேமிமால் வரையினைத் தொட்டகழ்ந் தெடுத்து
வைத்த தாமென வகுத்தனன் மஞ்சுசூ ழிஞ்சி

2346 தென்றி சைப்பரங் குன்றமும் வடதிசை இடபக்
குன்ற முங்குடக்கு ஏடக நகரமுங் குணபாற்
பொன்ற லங்கிழித் தெழுபொழிற் பூவண நகரும்
என்ற நாற்பெரு வாயில்கட்கு எல்லையா வகுத்தான்

2347 அனைய நீண்மதில் ஆலவாய் மதிலென அறைவர்
நனைய வார்பொழில் நகரமு மாலவாய் நாமம்
புனைய லாயதெப் போதுமப் பொன்னகர் தன்னைக்
கனைய வார்கழற் காலினான் பண்டுபோற் கண்டான்

2348 கொடிகள் நீண்மதின் மண்டபங் கோபுரம் வீதி
கடிகொள் பூம்பொழில் இன்னவும் புதியவாக் கண்டு
நெடிய கோளகை கிரீடம்வா ணிழன்மணி யாற்செய்
தடிகள் சாத்திய கலன்களும் வேறுவே றமைத்தான்

2349 பல்வ கைப்பெருங் குடிகளின் பரப்பெலா நிரப்பிச்
செல்வ வானவர் புரந்தரன் புரத்தினுஞ் சிறப்ப
மல்லல் மாநகர் பெருவளந் துளும்பிட வளர்த்தான்
தொல்லை நாட்குல சேகரன் போல்வரு தோன்றல்

திருவாலவாயான படலம் முற்றிற்று.

### திருவிளையாடற் புராணம், கழுவேறிய திருவிளையாடல்

வேசமுற விருந்த கழு திரைமுடிந்த வடமின்றும்
பூசுரர்கள் பணிந்தேத்தும் பூவண நன்னகர் மருங்கிற்
காசின் மேல் விளங்கியது கழுவர் படைவீடெனவே
– செல்லிநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி, திருவாலவாயுடையார் பாடல் எண்.50

## 8. திருப்பூவணத்தைப் பற்றி வேறு தலங்களில் வழங்கும் தேவாரப் பாடல்கள்

பூவண மேவும் பூவண நாதர்
பூவண நாயகி புந்திகூர் வைகை (சிவ.)
பூவணமும் புறம்பயமும் பொருந்தினானை
– ஆலம் பொழில் . திரு நா.

பூவணத்தவன் புண்ணியன் – குடமூக்கு – திருநா.
பூவணமோ புறம்பயமோ வன்றாயிற்றால் – ஆரூர். திருநா.
புகலூரும் பூவணமும் பொருந்தினான்காண் – ஆரூர். திருநா.
பூவணமும் வலஞ்சுழியும் பொருந்தினானை – வெண்ணியூர். திருநா.

புகலூரும் பூவணமும் பொருந்தினாரும் – வெண்ணியூர். திருநா.
திருச்செம்பொன்பள்ளி திருப்பூவணம் – அதிகை. திருநா
புத்தூருறையும் புனிதனைப் பூவணத் தெம் போரேற்றை – பொது. திருநா
புறம்பயம் பூவணம் பொய்கை நல்லூர் – பொது. திருநா

## தனித் தேவாரப் பாடல்கள்

பொதியிலானே **பூவணத்தாய்** பொன்றிகழுங் கயிலைப்
பதியிலானே பத்தர் சித்தம் பற்றுவிடா தவனே
விதியிலாதார் வெஞ்சமணர் சாக்கியரென் றிவர்கள்
மதியலாதா ரென் செய்வாரோ வலிவலமே யவனே
– வலிவலம். திருஞானசம்பந்தர்
குலாவுதிங்கட்சடையான் குளிரும் பரிதிநியமம்
போற்றூரடி யார்வழி பாடொழியாத் தென்
புறம்பயம் **பூவணம் பூழியூரும்**
காற்றூர்வரை யன்றெடுத்தான்முடிதோ

ணெரித்தானுறை கோயிலென் றென்றுநீகருதே
– பொது. திருஞானசம்பந்தர்

கோவணமுடுத்தவாறுங் கோளர வசைத்தவாறும்
தீவணச் சாம்பர்பூசித் திருவுரு விருந்தவாறும்
**பூவணக் கிழவனாரைப்** புலியுரி யரையனாரை
ஏவணச் சிலையினாரை யாவரே யெழுதுவாரே
– பொது. திருநாவுக்கரசர்

**பூவ ணத்தவன்** புண்ணிய னண்ணியங்
காவ ணத்துடை யானடி யார்களைத்
தீவ ணத்திரு நீறுமெய் பூசியோர்
கோவ ணத்துடை யான்குட முக்கிலே

தேனார் புனற்கெடில வீரட்டமும்
திருச்செம்பொன் பள்ளி **திருப்பூவணம்**
வானோர் வணங்கும் மணஞ்சேரியும்
மதிலுஞ்சை மாகாளம் வரா ணாசி
ஏனோர்க ளேத்தும் வெகு ளீச்சரம்
இலங்கார் பருப்பதத்தோ டேணார் சோலைக்
கானார் மயிலார் கருமாரியும்
கறைமிடற்றார் தம்முடைய காப்புக்களே

கோவணமோ தோலோ உடையாவது
கொல்லேறோ வேழமோ ஊர்வதுதான்
**பூவணமோ** புறம்பயமோ அன்றா யிற்றான்
பொருந்தாதார் வாழ்க்கை திருந்தாமையே
தீவணத்த செஞ்சடைமேல் திங்கள் சூடித்
திசைநான்கும் வைத்துகந்த செந்தீ வண்ணர்
ஆவணமோ ஒற்றியோ அம்மா னார்தாம்
அறியேன்மற் றூராமா றாரூர் தானே

பொன்நலத்த நறுங் கொன்றைச் சடையி னான்காண்
புகலூரும் **பூவணமும்** பொருந்தி னான்காண்
மின்நலத்த நுண்ணிடையாள் பாகத் தான்காண்
வேதியன்காண் வெண்புரிநூல்மார்பி னான்காண்
கொன்னலத்த மூவிலைவேல் ஏந்தி னான்காண்
கோலமா நீறணிந்த மேனி யான்காண்
செந்நலத்த வயல்புடைசூழ் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே

பொருங்கைமத கரியுரிவைப் போர்வை யானைப்
பூவணமும் வலஞ்சுழியும் பொருந்தி னானைக்
கரும்புதரு கட்டியையின் னமிர்தைத் தேனைக்
காண்பரிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை
இருங்கனக மதிலாரூ ரூலட் டானத்
தெழுந்தருளி யிருந்தானை யிமையோ ரேத்ததும்
அருந்தவனை அரநெறியி லப்பன் தன்னை
அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்தவாறே

புன்கூரார் புறம்பயத்தார் புத்தூ ருள்ளார்
பூவணத்தார் புலிவலத்தார் வலியின் மிக்க
தன்கூர்மை கருதிவரை யெடுக்க லுற்றான்
தலைகளொடு மலைகளன்ன தாளுந் தோளும்
பொன்கூருங் கழலடியோர் விரலா லூன்றிப்
பொருப்பதன்கீழ் நெரித்தருள் செய் புவனநாதர்
மின்கூருஞ் சடைமுடியார் விடையின் பாகர்
வீழி மிழலையே மேவினாரே

பொன்னிலங்கு கொன்றையந்தார் மாலை சூடிப்
புகலூரும் பூவணமும் பொருந்தி னாருங்
கொன்னிலங்கு மூவிலைவே லேந்தி னாருங்
குளிரார்ந்த செஞ்சடை யெங் குழக னாருந்
தென்னிலங்கை மன்னவர்கோன் சிரங்கள் பத்துத்
திருவிரலா லடத்தவனுக் கருள்செய் தாரும்
மின்னலங்கு நுண்ணிடையாள் பாகத் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே

புலிவலம் புத்தூர் புகலூர் புன்கூர்
புறம்பயம் பூவணம் பொய்கை நல்லூர்
வலிவலம் மாற்பேறு வாய்மூர் வைகல்
வலஞ்சுழி வாஞ்சியம் மருகல் வன்னி
நிலமலிநெய்த் தானத்தோ டெத்தானத்தும்
நிலவு பெருங் கோயில்பல கண்டால் தொண்டீர்
கலிவலிமிக் கோனைக்கால் விரலாற் செற்ற
கயிலாய நாதனையே காண லாமே

ஐந்தலைய நாகவணைக் கிடந்த மாலோ
டயன்தேடி நாடரிய அம்மான் தன்னைப்
பந்தணவு மெல்விரலாள் பாகத் தானைப்
பராய்த்துறையும் வெண் காடும்பயின்றான் தன்னைப்
பொந்துடைய வெண்டலையிற் பலிகொள் வானைப்
பூவணமும் புறம்பயமும் பொருந்தி னானைச்
சிந்தியவெந் தீவினைகள் தீர்ப்பான தன்னைத்
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே

# மீனாட்சியம்மை குறம்

- குமரகுருபரசுவாமிகள் பாடியருளியது,

கூடல்புன வாயில்கொடுங் குன்றுபரங் குன்று
குற்றாலம் ஆப்பனூர் பூவணநெல் வேலி
ஏடகமா டானைதிருக் கானப்பேர் சுழியல்
இராமேசந் திருப்புத்தூ ரிவைமுதலாந் தலங்கள்
நாடியெங்க ளங்கயற்கண் ணாண்டதமிழ்ப் பாண்டி
நன்னாடும் பிறநாடும் என்னாடதாகக்
காடுமலையுந் திரிந்து குறி சொல்லிக் காலங்
கழித்தேனென் குறவனுக்குங் கஞ்சிவாரம்மே

## தனிப்பாடல்

தலையி லிரந் துண்பான் தன்னுடலிற் பாதி
மலைம களுக் கீந்து மகிழ்வான்
உலையில் இருப்புவண மேனியனார் என்றாலோ
ஆம் ஆம் திருப்பூவண நாதர் திறம்

திருப்பூவணத்தில் தாசி ஒருவர் (பெயர் குறிப்பிடப்பெறவில்லை) தினமும் திருப்பூவணநாதர் மேல் பாடல் ஒன்று பாடிமுடித்த பின்னரே தூங்கும் வழக்கம் உடையவர். ஒரு அவர் இப்பாடலின் முதல் இரண்டு அடிகளை மட்டும் பாடிவிட்டுப் பாடலை முடிக்காமல் நிறுத்தி விட்டார். அப்போது அவர் வீட்டில் களவு செய்யச் சில கள்வர்கள் வந்திருக்கின்றனர். வருமையின் காரணமாகப் பொருள் வேண்டிய "புலவர் மருதூரந்தாதி தலைமலைகண்டதேவர்" என்பவர் கள்வர்களுக்குத் துணையாக வந்திருக்கிறார். தாசி பாடிய பாடல் பாதியில் நின்றதைக் கேட்ட புலவர், மூன்றாவது வரியைப் பாடியுள்ளார். உடனே தாசி நான்காவது வரியைப் பாடிப் பாட்டை முடித்துள்ளார். இவ்வகையில் கள்வர்களைக் களவு செய்யவிடாமல் தடுக்கும் வகையிலும், தாசி பாடிய பாடல் நிறைவு பெறும் வகையிலும், புலவர் செயலாற்றியுள்ளார். இதனைப் பாராட்டிய தாசி தன் வீட்டில் களவு செய்ய வந்த புலவருக்குப் பரிசுகள் வழங்கி வழியனுப்பி வைத்துள்ளார். - அடிகளாசிரியர், சரசுவதி மகால் வெளியீடு, ஓலைச் சுவடிகள் பற்றிய கையேட்டில் உள்ள குறிப்பு.

## 9. வழிபாட்டுப் பலன்கள்

- ✓ தருப்பணஞ் செய்து பின் திருப்பூவண நாதரை வழிபடுவோர், பிறர் தன்னை வணங்கும்படியாக வாழ்ந்து முடிவில் சிவபுரி சேர்வர்.
- ✓ பஞ்சாமிர்தம் பஞ்சகவ்வியம் இவற்றைப் பூவணேசுவரருக்குக் காட்டுவோர் அரிய பலன்களை அடைவர், பின்னர் சிவனடியில் சேர்வர்.
- ✓ திருக்கோயிலில் விளக்கு ஏற்றுவோர் சிவபுரத்தில் கோடி நன்குலத்துடன் கூடி வாழ்வர்.
- ✓ திருப்பூவண நாதருக்குப் பூமாலை சாத்தி வழிபட்டால் எண்ணியவையாவும் நடைபெறும், மிகுந்த செல்வம் பெற்று வாழ்வர், கயிலையில் இனிது வாழும் பேறு கிடைக்கப் பெறுவர்.
- ✓ திருப்பூவண நாதரின் முன்னுள்ள ஆலயத்தைக் கட்டுவோருக்கு அவர்கள் செய்யும் நற்செயல்களுக்கான புண்ணியம் நான்கு மடங்காகக் கிடைக்கும்.
- ✓ திருப்பூவணத்தில் தினவிழா, திருவிழா, தேர்த்திருவிழா நடத்துவோர் சிவபிரானுடன் சிவபுரயில் சேர்வர்.
- ✓ உயிரும் உடலும் ஒத்துணரத் திருப்பூவண நாதரைக் கற்றுணர்ந்தோரும், திருப்பூவணத்திற்கு வந்து வழிபட்டோரும் புனிதமான உடலைப் பெற்றுக் கயிலையைச் சேர்ந்து வாழ்வர்.
- ✓ திருப்பூவணத்திலே. நான்குவேதங்களையும் கற்றுணர்ந்தோர்க்கு அணு அளவு தானம் செய்தாலும் அது மலையளவு கொடுத்த பலன் உண்டாகும்.
- ✓ திருப்பூவணத்திலே பிடியளவு அன்னதானம் கொடுத்தாலும் அது கோடி அந்தணருக்கு அறுசுவை உணவு வழங்கிய பலன் உண்டாகும்.

*"புகலரிய கேதாரமலை காசி மாகாளம் புட்கரஞ்சீர்*
*திகழ்கமலாலயந் தில்லை வனந்தீதில் வேதவனந் திருவெண்காடு*
*மகிழ்தரு தென்மதுரை தனின்மருவுகதியைப் பெறுவான்வைகுவோர்சேர்*
*மிகுபலமானவை யனைத்து மேவுவர் பூவண நகரின் மேவுவோரே"(பாடல் 16)*

கேதாரமலை, காசி, மாகாளம், காஞ்சி, கமலாலயம், தில்லை, வேதவனம், திருவெண்காடு, மதுரை இவ்வூரில் உள்ள திருக்கோயில்களை வழிபட்டுக் கிடைக்கும் ஒட்டு மொத்தப்பலனை விடக் கூடுதலான பலன் திருப்பூவணத்திற்கு வந்து வழிபட்டால் கிடைக்கும் என்று திருப்பூவணப்புராணத்திலே முனிவர்களால் புகழ்ந்து கூறப்பட்டுள்ளது.

புராணத்தில் கூறப்பெற்றுள்ள வழிநின்று திருப்பூவண நாதரையும் மின்னம்மையையும் மற்றபிற தெய்வங்களையும் வணங்கி வழிபடுவதால், புராணத்தில் கூறப்பெற்றுள்ள பலன்கள் கிடைக்கும்.

# 10. நன்றியுரை

இந்நூலாக்கத்திற்கு என்னை நெறிப்படுத்திய எனது ஆசான் அமரர் முனைவர் இரா.பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும், நல்லாசிகள் வழங்கி என்னை அருள்நெறிப்படுத்திய சென்னை "குமுதம்ஜோதிடம்" ஆசிரியர் உயர்திரு.A.M.ராஜகோபாலன் அவர்களுக்கும், நான் காணும் போதெல்லாம் என்கையில் ஆன்மிகம் தொடர்பான புத்தகங்களைக் கொடுத்துப் படிக்கச் செய்து என்னை நல்லாற்றுப்படுத்திய காரைக்குடி பேராசிரியர். தே.சொக்கலிங்கம் அவர்களுக்கும், இப்புத்தகம் சிறப்பாக வெளிவரத் தேவையான தகவல்களைத் தந்து உதவிய ஸ்தானிகர்கள் திரு.தெய்வசிகாமணி பட்டர், திரு.சுப்பிரமணியன் பட்டர், திரு.செண்பகப் பட்டர் அவர்களுக்கும், புகைப்படங்கள் எடுப்பதில் உதவிய என்தங்கை திருமதி.மு.கலையரசி அவர்களுக்கும், தட்டச்சு செய்வதில் உதவிய என் உடன்பிறவாச் சகோதரி சபா.கீதா (கண்காணிப்பாளர், அழகப்பா பல்கலைக்கழகம்) அவர்களுக்கும், பிழைத் திருத்தத்தில் உதவிய பேராசிரியர் முனைவர்.S.இராசாராம் மற்றும் எனது உறவினரான பல்கலைக்கழக உதவிப்பதிவாளர் திரு.க.பழனியப்பன் அவர்களுக்கும், நூலை அச்சிட்டு வெளியிடப் பணஉதவி வழங்கிய திருப்பதி தேவஸ்தானத்திற்கும், நூலை வெளியிடத் துணைசெய்த சிவகங்கை தேவஸ்தான மேலாளர் திரு.பா.இளங்கோ மற்றும் தேவஸ்தான அலுவலர்கள் அனைவருக்கும், இந்நூலை வெளியிடப் பெரிதும் உதவி செய்த பேராசிரியர். முனைவர். ரெ.சந்திரமோகன் அவர்களுக்கும், திரு.சுப.லெட்சுமணன், திரு.தி.கண்ணன் மற்றும் பல்கலைக்கழகத் தொலைபேசி இணைப்பாளர் திரு.செ.கருணாநிதி அவர்களுக்கும், எனக்குப் பலவகையிலும் உதவியாய் இருந்த என்னுடன் பணியாற்றும் அனைத்து சகோதர சகோதரிகளுக்கும், எனது அண்ணன் கி.நாகரெத்தினம், தம்பி கி. சுந்தரபாண்டியன் (காவல்துறை) அவர்களுக்கும், எனது மூத்த மைத்துனர் மணலூர் வெள்ளைச்சாமி தங்கை புஸ்பலதா, இரண்டாவது மைத்துனர் திரு. முத்துப்பாண்டி, தங்கை கலையரசி, மூன்றாவது மைத்துனர் திரு. சூரக்குமார் தங்கை நிர்மலா ஆகியோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலை அச்சிடத்தேவையான தொகையைக் கடனாக வழங்கி உதவிய அழகப்பா பல்கலைக்கழக வளாக இந்தியன்வங்கி நிர்வாகத்தினருக்கும், இந்நூலைச் சிறப்பான முறையில் அச்சிட்டு உதவிய மதுரை பிரிண்ட்டெக் அச்சகத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலை வெளியிடுவதற்கான என் உழைப்பில் சரிபாதி எனது மனைவி நாகலெட்சுமியையும் மறுபாதி என்மகள் நித்யாவையும் சேரும்.

இவர்கள் அனைவரும் திருப்பூவணநாதர் திருவருளால் அனைத்து நலன்களையும் பெற்று வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்திட வாழ்த்துகிறேன்.

(கி. காளைராசன்)

# 11. இந்நூலாசிரியரின் பிற கட்டுரைகள்



இந்நூல் ஆசிரியர் கி.காளைராசன் அவர்களது படைப்புகளை ஆன்மிகம், ஆன்மிக அறிவியல் மற்றும் திருக்குறள் ஆய்வுக் கட்டுரைகள் என்று மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

இவரது திருப்பூவணக் காசி என்ற முதல் நூல் திருப்பதி தேவஸ்தானத்தின் நிதியுதவி பெற்று அச்சிடப்பட்டு 24-09-2007 அன்று தவத்திரு குன்றக்குடிப் பொன்னம்பல அடிகளார் அவர்களால் திருப்பூவணநாதர் திருக்கோயிலில் வைத்து வெளியிடப்பெற்றது.

இவரது கட்டுரைகள் தினபூமி, தினமலர், மஞ்சரி, தமிழ் மாருதம், செந்தமிழ்ச் செல்வி, ஓம்சக்தி, மெய்கண்டார், கண்ணியம் ஆகிய இதழ்களில் வெளிவந்துள்ளன.

| வரி. எண் | கட்டுரைத் தலைப்பு | கட்டுரையின் பொருள் |
|---|---|---|
| **ஆன்மிகக் கட்டுரைகள்** | | |
| 1 | ஐயாவிடம் சொல்லிவிட்டேன் அவர் பார்த்துக்கொள்வார் | காரைக்குடி–கோட்டையூர் அருகில் உள்ள வேலங்குடி கிராமத்தில் வீற்றிருந்து அருளும் ஸ்ரீ சொற்கேட்ட விநாயகரின் திருவருள் பற்றியது |
| 2 | என்பிழை பொறுப்பாய் எம்மானே | திருப்பூவணத்தில் சிவபெருமான் பார்வதி தேவிக்கு வரம் அருளியது |
| 3 | பாவம் போக்கும் பூவணம் | திருப்பூவணத்திருத்தலத்தின் பெருமைகள் குறித்து |
| 4 | சித்தர் வடிவில் சிவபெருமான் | 36வது திருவிளையாடற் புராணம் – சித்தர் வடிவில் சிவபெருமான் திருப்பூவணத்தில் எழுந்தருளி இரசவாதம் செய்தருளியது |
| 5 | ஆற்றின் குறுக்கே 1008 லிங்கம் | திருப்பூவணத்தில் திருக்கோயில் எதிரே ஓடும் வைகை ஆற்றில் லிங்கங்கள் புதையுண்டிருப்பது பற்றிய கட்டுரை |
| 6 | கல்லா? கடவுளா? | கல்லால் ஆன வடிவங்கள் எப்படிக் கடவுள் போன்று செயல்பட முடியும் என்பதற்கான விளக்கம் |

| | | |
|---|---|---|
| 7 | சாமி என்ன சாப்பிடவா செய்கிறார்? | கடவுளுக்குப் படைக்கப்படுபவை அவரை எவ்வாறு சென்றடைகின்றன என்பதற்கான விளக்கம் |
| 8 | ஐயனாரா? அய்யனாரா? | ஐயனார் தெய்வத்தின் பிறப்பு வளர்ப்பு பெயர்க்காரணம் அருளும் தன்மை ஆகியனவற்றை விளக்குவது |

| ஆன்மிக அறிவியல் கட்டுரைகள் | | |
|---|---|---|
| 9 | சிவனும் பெருமாளும் ACயும் DCயும் | இறைவடிவங்களும் மின்சாரத்தின் வடிவங்களும் ஒன்றாய் உள்ளன என்று விளக்கும் கட்டுரை |
| 10 | ஆடல்வல்லானே அறிவியல் இறைவன் | தனி ஊசல் விதிகளுக்கு ஏற்ப ஆடல்வல்லானின் (நடராசரின்) ஆட்டம் உள்ளது என்பதை விளக்கும் கட்டுரை |
| 11 | விஞ்ஞானத் தொலைகாட்சிப்பெட்டி யும் மெய்ஞ்ஞானக் கோயில்களும் | தொலைக்காட்சிப் பெட்டியில் உள்ள காட்சிக் குழாயின் (Picture tube) வடிவமும் செயலும், நடராசரின் வடிவத்துடனும் செயலுடனும் ஒற்றுமையாய் இருப்பதை விளக்கும் கட்டுரை |

| திருக்குறள் ஆய்வுக் கட்டுரைகள் | | |
|---|---|---|
| 12 | வள்ளுவரும் வாஸ்துவும் | திருக்குறளின் பாயிர அதிகார அமைப்பு முறையானது வாஸ்து இலக்கணப்படி உள்ளது என்பதை விளக்கும் கட்டுரை |
| 13 | திசைதெய்வங்களைத் தொழும் திருவள்ளுவர் | திருக்குறளின் முதல் நான்கு அதிகாரங்களும் திசை தெய்வங்களை வணங்கி எழுதப்பெற்றுள்ளன என்பதை விளக்கும் கட்டுரை. |
| 14 | ஆனை முகத்தானே(ா) ஆதிபகவன் | முதற் குறளில் குறிப்பிடப்பெற்றுள்ள "ஆதிபகவன்" என்பது விநாயகப் பெருமானையே குறிக்கும் என்பது பற்றியது |
| 15 | குறளிலும் சோதிடம் | இராகு, கேது இவற்றின் சோதிட அமைப்பில் ஐந்தாவது குறள் எழுதப்பட்டுள்ளது என்பதை விளக்கும் கட்டுரை |
| 16 | திருக்குறளில் சனீஸ்வரர் வழிபாடு | வேண்டுதல் வேண்டாமை இல்லாதவர் யார்? என்பது பற்றிய விளக்கம் |
| 17 | குறள் கூறும் இறைவன் | பத்தாவது குறளில் கூறப்பெற்றுள்ள இறைவன் அனந்த சயனப் பெருமாளாகும். |



24-9-2007 திங்கள் கிழமை மாலை
திருப்பூவணம் திருக்கோயில் வளாகத்தில்
நடைபெற்ற விழாவில், நூலாசிரியர்
கி.காளைராசன் அவர்கள் எழுதிய
திருப்பூவணக் காசி என்ற நூலைத்
தவத்திரு குன்றக்குடிப்
பொன்னம்பல அடிகளார் அவர்கள் வெளியிட,
அதனை மானாமதுரை
ஸ்ரீபிரத்தியங்கிராதேவி திருக்கோயில்
அருள்மிகு ஞானசேகர சுவாமிகளும்
அழகப்பா பல்லைக்கழகத் துணைவேந்தர்
மேதகு பேராசியர். பெ.இராமசாமி அவர்களும்
பெற்றுக்கொள்கின்றனர்.

உ

சிவமயம்


திருஞானசம்பந்தர்


திருநாவுக்கரசர்


சுந்தரர்


மாணிக்கவாசகர்

# நால்வர் பொற்றாள் எம்முயிர்த் துணையே

பூமிக்கும் முந்தியவர் பூவணைநாதா
ஆற்றுக்கும் முந்தியவ அழகுமீனா



## அழகிய பிரான்

(கன்னத்தில் நகக் குறியுடன் உள்ள திருமேனி)